# அனைவரும் ஹெர்குலிஸ் சைக்கிளைப் பாராட்டுகின்றனர்

நமக்கும் ஒரு ஹெர்குலிஸ் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நினைக்கிறார்கள் இவளது நண்பர்கள்! உலகெங்கும் 134 நாடுகளிலுள்ள சைக்கிள் அபிமானிகள் ஹெர்குலிஸ் சைக்கிளின் அருமையை நன்கு அறிவார்கள். அதன் விலைக்கு அது ஈடற்றது. சைக்கிள் உற்பத்தித் துறையில் உலகிலேயே தலை சிறந்த ட்யூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட் (இங்கிலாந்து) ஸ்தாபனத்தின் பரந்த அனுபவமும், தொழில் நுட்பக் கூட்டுறவும்தான் இன்று இந்தியாவிலேயே தயாராகும் ஹெர்குலிஸ் சைக்கிளின் மேன்மைக்குக் காரணம்.



**ஹெர்குலிஸ்**

-வெறும் சைக்கிள் மட்டுமன்று; வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்றுணை

டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர் - மதறாஸ்

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட் -

## கார் சவாரியில் ஒரு புது அனுபவம்



## கீழ்க்கண்ட போற்றத்தக்க வசதிகளுடன் கூடியது

- 25 அடி வட்டத்திற்குள் திருப்ப முடியும்
- ஒவ்வொரு சக்கரத்திற்கும் தனித்தனி சஸ்பென்ஷன் (Suspension) இணைப்பு இருக்கிறது (சுலபமாக அபாயமின்றி திருப்பலாம். ரஸ்தாவில் நல்ல பிடிப்பு உண்டு. முன் சக்கரத்திற்கு ஏற்படும் அதிர்ச்சி முன் சக்கரத்தின் ஸ்ப்ரிங்கிலேயே தாங்கிக்கொள்ளப்படுவதால், வண்டியின் பின்புறம் அதிர்ச்சியோ, ஆட்டமோ அடையாது.)
- எஃகு கர்டரினுலான சாஸிஸ் (Chassis) (மிக உறுதியான கார் அமைப்பு)
- 93% வெளிப்பார்வை வசதி.

**STANDARD herald**

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## உறுதியான, *எழில் மிகுந்த* கார்




*தயாரிப்பாளர்கள் :*

**ஸ்டாண்டர்ட் மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்**
**சென்னை.2**

*வினியோகஸ்தர்கள் :*

யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிமிடெட்
சென்னை — உதகை
யுனிகான் (பெங்களூர்) பிரைவேட் லிமிடெட், பெங்களூர்

# கல்கி

## பொருளடக்கம்

சுபகிருது, பங்குனி மீ 18உ ★ மார்ச், 31உ 1963



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 35

# கென்னடி காட்டிய வழி

அமெரிக்க ஜனாதிபதி கென்னடி ஒரு புதிய சிநேக உடன்படிக்கை செய்து கொண்டிருக்கிறார். சின்னஞ்சிறு நாடுகளான கோஸ்டரிகா ஹாண்டுராஸ், நிகராகுவா, ஸால்வடார், குவாடிமாலா, பனாமா ஆகிய மத்திய அமெரிக்க நாடுகளுடன் ஒரு சிநேக ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறார். மத்திய அமெரிக்காவிலுள்ள அந்த நாடுகளில் ஒன்றான கோஸ்டரிகாவின் தலைநகருக்குத் தாமே சென்று, ஆறு நாட்டுத் தலைவர்களுடன் இரண்டு நாட்கள் ஒன்றுகூடிப் பேசி நட்புறவைப் பலப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

அதே சமயத்தில் — உலகில் எந்த நாட்டுடனும் சிநேக உடன்படிக்கை செய்து கொள்ளாமல் இந்தியா தன்னந்தனியாக நிற்பதே பெரிய ராஜதந்திரம் என்று பெருமை பேசிக் கொண்டிருப்பதைப் பார்க்கும்போது சிரிப்புத்தான் வருகிறது. நல்ல சிநேக உடன்பாடுகள் செய்து கொள்ள எத்தனையோ அரிய வாய்ப்புக்கள் வந்தன. இந்திய சர்க்கார் போகின்ற போக்கைப் பார்க்கும்போது மனம் வேதனையுறுகிறது.

லடாக் பகுதியில் சீனர்கள் நுழைந்து விட்டனர். சாலைகள் போட்டுக்கொண்டு வருகின்றனர். திபேத்தில் ராணுவத்தைப் பலப்படுத்தி வருகின்றனர் — என்றெல்லாம் செய்திகள் வந்தபோது, பாகிஸ்தான் தலைவர் அயூப்கான் "ஒரு கூட்டு ராணுவப் பாதுகாப்பு ஒப்பந்தம் செய்து கொள்வோம்!" என்று இந்தியப் பிரதமருக்கு ஓர் அழைப்பு விடுத்தார்.

"பாதுகாப்பா? யாரிடமிருந்து பாதுகாத்துக் கொள்ள வேண்டும்!" என்று பிரதமர் நேரு பதிலுக்கு அலட்சியமாகக் கேட்டார்.

இது நடந்து இரு ஆண்டுகளுக்குள் சீனா பகிரங்கமாக நம் எல்லையில் புகுந்து ஆக்கிரமிக்கத் தொடங்கி விட்டது. அதன் பிறகு நம்மிடம் கொஞ்ச நஞ்சம் மதிப்பும் மரியாதையும் வைத்திருந்த நாடுகள் எல்லாம் நம்மைத் தனியாக விட்டு வேடிக்கை பார்க்கின்றன.

பர்மா, இந்தோனீசியா, ஸயாம் முதலிய நாடுகள் மதில்மேல் பூனைகளாக இருக்கின்றன. ஏன், சீனா பக்கமே அதிகமாகச் சாயத் தொடங்கியிருக்கின்றன.

நாம் மேற்கத்திய ஜனநாயக நாடுகளின் நட்பை உறுதியாகப் பெற்று, நமது ராணுவ பலத்தைப் பெருக்கிக் கொண்டிருந்தால், இன்று மதில்மேல் பூனைகளாக இருக்கும் நாடுகள் எல்லாம் நம் பக்கம் உறுதியாக இருந்திருக்கும்.

இந்தியா தனது சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொண்டால் மட்டும் போதாது. இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகே கிழக்காசிய நாடுகள் சுதந்திரம் பெற்றன. அந்த நாடுகளிலும் ஜனநாயகம் வளர்க்க இந்தியா கடமைப்பட்டுள்ளது. அந்நாடுகளை கம்யூனிஸ்ட் சீனாவின் வலையில் சிக்கவைத்த பிறகு, நாம் மட்டும் ஜனநாயக சுதந்திர நாடாக வாழ்வது கஷ்டம். ஆகவே நமது ராணுவ பலத்தை நல்ல நட்புறவைக் கொண்டு பலப்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஜனாதிபதி கென்னடி கௌரவம் பார்க்காமல் சின்னஞ் சிறு நாடுகளின் நட்பைக் கோரிப் பெற்று உலகுக்கும் பகிரங்கமாக அறிவித்ததுபோல், பிரதமர் நேரு மேற்கத்திய ஜனநாயக நாடுகளின் நட்பைக் கோரிப் பெற்று உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். அதுதான் இந்தச் சமயத்திற்கு ஏற்ற ராஜதந்திரம். அப்போதுதான் கிழக்காசியாவிலுள்ள சிறு நாடுகளுக்கு நிம்மதி ஏற்படும்.

பாரத நாட்டின் சுதந்திரமும் நன்றாகப் பாதுகாக்கப்படும்.

# என்ன சேதி?

### என்ன விநோதம்!

எகிப்து, ஈரான், அரேபியா, இஸ்ரேல் ஆகிய எல்லா நாடுகளும் கம்யூனிஸ்ட் கட்சியைச் சட்ட விரோதமான கட்சி என்று நிராகரித்துள்ளன. இவ்வளவுக்கும் அந் நாடுகளில் கம்யூனிஸ்ட் தேசத்தின் படையெடுப்பு ஏற்படவில்லை. ஆக்கிரமிப்பு ஏற்பட்டிருப்பது இந்தியாவில்தான்!

### கௌரவம் போகுமா?

பிரதமர் ஜவாஹர்லால் நேரு, கூட்டு சேராக் கொள்கையை இப்போது கைவிட்டால், நமது கௌரவமே போய் விடும் என்று பேசுகிறார்.

அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் இடையில் போர் மூளாமலே புகைந்து கொண்டிருக்கும் பகைமையில், நாம் எந்தக் கோஷ்டியிலும் சேராமல் இருப்பது நல்லது என்று கருதிக் 'கூட்டுச் சேராக் கொள்கை' கடைப் பிடிக்கப் பட்டு வந்தது. சீனு இந்தியாவின் மீது படையெடுத்துள்ள நிலையில், நமது பகைவனை விரட்ட யாரெல்லாம் உதவ முன் வருகிறார்களோ அவர்களிடமெல்லாம் உதவி பெற்றுக் கொள்ள வேண்டியது நமது கடமை. விரோதியை விரட்டுவதற்கும் கூட்டுச் சேராக் கொள்கைக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை.

நம் பொருளாதார வளர்ச்சிக்கு அமெரிக்காவிடமிருந்தும் பிரிட்டனிடமிருந்தும் உதவி கோரிப் பெறுவதில் வெட்கப்படாத நாம், அந்நிய எதிர்ப்பை விரட்ட, நண்பர்களிடமிருந்து உதவி கோரிப் பெற்று விட்டால், நமது வெளிநாட்டுக் கொள்கையைக் கைவிட்டவர்களாக மாட்டோம். நட்பு ஆர்வம் இல்லாமல் உதவி மட்டும் பெறலாம் என்று எண்ணுவது மடமையாகும். அந்த முறையில் எவ்வளவு நாள் எந்த அளவுக்கு உதவி தருவார்கள்? திமுர் என்று நின்று போகும்.

### பிரதமரின் நகைச்சுவை

"நான் ரகசியமாக் ஒரு வார்த்தை சொல்கிறேன். அமெரிக்காவிலிருந்து கூட்டம் கூட்டமாகச் சட்டசபை அங்கத்தினர்களும் மற்றவர்களும் வருவதைப் பார்க்க எனக்குத் தர்மசங்கடமாக இருக்கிறது!" என்று பிரதமர் தில்லி மக்கட் சபையில் பேசிய விஷயம்















என்றும் ரகசியமாக இராது. அமெரிக்கா வரையில் எட்டி விடும்.

அமெரிக்காவிடமிருந்து ஏராளமாகக் கடன்களும், மற்ற உதவிகளும் பெற்று வரும் போது அமெரிக்கர்கள் இங்கு வந்து சுற்றிப் பார்த்து விட்டுச் சென்றால் பிரதமர் ஏன் சங்கடப்பட வேண்டும் என்று தெரியவில்லை.

அந்நியச் செலாவணியைச் சம்பாதிக்க ஏராளமாக வெளிநாட்டினர் வர வேண்டும், அவர்களிடம் பண்போடு நடந்து கொள்ள வேண்டும் என்றெல்லாம் சொல்லும் பிரதமரே இம்மாதிரி பேசியிருப்பது வியப்பாக இருக்கிறது.

பிரதமர் ஏதோ நகைச்சுவைக்காக இவ்வாறு சொன்னார் என்று கொண்டாலும், அதற்கு இதுவல்ல சமயம். இத்தகைய ஹாஸ்யத்தை ருஷ்யர்கள் சம்பந்தமாகவோ, மற்ற நாட்டினர் பக்கமாகவோ வீசத் துணிய மாட்டார்.

## வடமொழி அறிஞரின் கருத்து

இவ்வாண்டு 'பாரத ரத்னா' பட்டம் பெற்ற சம்ஸ்கிருதப் பேரறிஞர் டாக்டர் பி. வி. கானே அவர்களுக்குச் சமீபத்தில் பம்பாயில் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது.

அந்தக் கூட்டத்தில் இந்தச் சம்ஸ்கிருத பெரும் புலவர், ''பாரத மக்களும் சர்க்காரும் ஆங்கிலத்துக்கு எவ்வளவு முக்கியத்துவம் அளிக்கிறார்களோ

அதைப் பொறுத்துத்தான் பாரத நாட்டின் ஐக்கியம் இருக்கிறது. ஆகவே, மத்திய அரசாங்கம் இவ்விஷயத்தில் தலைமை தாங்கி மக்களுக்கு வழிகாட்ட வேண்டும்!'' என்று பேசியிருக்கிறார். பாரதப் பண்பாட்டில் ஊறிய ஒருபெரும் வடமொழிப் புலவர் கூறிய மொழிகளைத் தமிழ் மக்களும் ஊன்றிக் கவனிக்கவேண்டும். ஒரு காலத்தில் பாரத நாட்டின் அறிஞர்கள் எப்பகுதிக்குச் சென்றாலும் ஒருவரோடு ஒருவர் சம்ஸ்கிருதத்தில் பேசினார்கள். அந்நாட்களில் சம்ஸ்கிருதம் பாரத ஐக்கியத்தைப் பேணி வந்தது. அதே போல் இன்றும் சம்ஸ்கிருதம்தான் தேசிய பாஷையாக வேண்டும் என்று இப்பெரும் வட மொழிப் புலவர் பேசவில்லை. காலத்தையொட்டி ஆங்கிலத்தைப் பேணி வரவேண்டும் என்றதைத் தமிழகத்தின் தமிழ்ப் பற்றுடையோரும் ஊன்றிக் கவனிக்க வேண்டுகிறோம்.

மத்திய சர்க்கார் கவனிக்க வேண்டும் என்று சொல்லவேண்டியதே இல்லை!




## சர்க்காருக்குத் தனிச் சலுகை

சென்னை கார்ப்பரேஷன் சமர்ப்பித்துள்ள வரவு செலவுக் கணக்கில் இரண்டு அம்சங்களைக் குறிப்பிடத் தோன்றுகிறது. மோட்டார் வாகன வரியிலிருந்து கணிசமான தொகையை வருஷ வாரியாக ராஜ்ய சர்க்கார் நகர சபைக்குத் தர வேண்டும் என்ற பழைய கோரிக்கை வற்புறுத்தப்பட்டிருக்கிறது. இந்தக் கோரிக்கையைச் சர்க்கார் கவனிக்க வேண்டியது அவசியம். சென்னை நகரில் உள்ள மத்திய அரசாங்கக் கட்டடங்கள் கார்ப்பரேஷனுக்குச் சொத்து வரி செலுத்துவதில்லை. மத்திய அரசாங்கம் சம்பந்தப்பட்டது என்பதற்காக அவற்றுக்கு வரிவிலக்குச் சலுகை அளிக்கப்படுகிறது! இதன் மூலம் கார்ப்பரேஷனுக்கு 15 லட்சம் வரையில் வருமானம் நஷ்டமாகிறதாம். மற்றக் கட்டடங்கள் மீது சொத்து வரி வசூலிக்கப்படும் போது - பெரிய கட்டடங்களுக்கு வரி விகிதம் 25 சத வீதத்துக்கு உயர்த்தப்படுகிறது - சர்க்கார் கட்டடங்களுக்கு மட்டும் ஏன் விலக்கு இருக்க வேண்டும் என்று விளங்கவில்லை.

## பிரதமரின் பிரசாரம்

ஜவாஹர்லால் நேரு மீண்டும் சுதந்திரக் கட்சி மேல் பாய்ந்திருக்கிறார். சுதந்திரக் கட்சி என்ன சொல்கிறது என்பதைப் புரிந்து கொள்ள அவர் முயற்சியே எடுக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது.

சுதந்திரக் கட்சி காங்கிரஸ் சர்க்காரிடம் மாறுபடும் ஒவ்வொரு அம்சத்திலும் தக்க காரண காரியங்கள் காட்டி மாறுபடுகிறது. சிறு விஷயமாயினும் இட்ட விஷயமாயினும் பட்ஜெட் விஷயமாயினும் ஒவ்வொன்றைப் பற்றியும் தெளிவான காரணங்கள் கூறித்தான் எதிர்க்கிறது. அதற்கெல்லாம் சமாதானங்கள் கூறுவதற்குப் பதில் ''சுதந்திரக் கட்சியே தவறு; சுதந்திரக் கட்சியின் வாதங்கள் தவறு. எல்லாம் தவறு!'' என்று பேசுகிறார்.

மக்கள் சுதந்திரக் கட்சி சொல்வதைச் சரி என்று உணர்ந்து வரத் தொடங்கியிருக்கின்றனர். பிரதமர் இதைக் கண்டு பொதுவாகத் தாக்குகிறார்.

அலட்சியம் செய்வதை விட்டுப் பிரதமர் தாக்குவதே சுதந்திரக் கட்சி பலம் பெற்று வருவதற்கு அத்தாட்சி.

## உண்மை பேசாதே!

பட்ஜெட்டைப் பற்றி ராஜ்குமாரி அமிருத் கௌர் கண்டித்துப் பேசியது அமைச்சர் தேசாய்க்குப் பிடிக்க வில்லை. மக்களுக்கு ஏற்படும் கஷ்டங்களையும், கண் மூடித்தனமான வரி முறைகளில் காணும் குறைபாடுகளையும் எடுத்துச் சொல்லுவது பார்லிமெண்ட் அங்கத்தினர்களின் கடமை, உரிமை. இந்தக் கடமையைச் செய்ததால், அவர் ஒரு கேதரின் மேயோவாம்! காங்கிரஸ் கட்சியிலிருந்து பெரும் பயனடைந்து வருகிறவராம். ஆகையால் காங்கிரஸ் கட்சி அரசாங்கத்தை எதிர்த்துப் பேச அவருக்கு உரிமை இல்லையாம். இப்படியெல்லாம் அவர்மீது கடுமையான வசை பாணம் தொடுத்திருக்கிறார் அமைச்சர். ராஜ்குமாரியின் நாட்டுப் பற்றும், தியாகமும், அந்தரங்க சுத்தியும் நாடறிந்தவை. மகாத்மா காந்தியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு நீண்ட காலம் பழகி அவருடைய வழிகளில் உழைத்துத் திளைத்தவர். அவரைப் பற்றிக் குறைவாகப் பேசுபவரின் தியாக வரலாறோ, அருகதையோ ராஜ்குமாரியின் தகுதிக்கும் தன்மைக்கும் எவ்விதத்திலும் உயர்ந்ததாகக் கருத முடியாது. அவரைக் 'கேதரின் மேயோ' வுக்குச் சமமாகச் சொல்லுவதென்றால் அமைச்சரின் அறியாமையைக் குறித்துப் பரிதாபப்பட வேண்டும். உண்மையை மூடி மறைத்துப் பேசுவதையே ஒரு கலையாகப் பயின்றுள்ள சில அங்கத்தினர்கள் மட்டுமே போதும் என்றால், பார்லிமெண்டையே கலைத்து விடலாம். ஜனநாயகம் என்ற தமாஷ் நாயகத்துக்குத் தேவையே இல்லை. தங்கக் கட்டுப்பாட்டுக்கு வரவேற்பு இருக்கிறது என்றே பேசுகிறார் ஒரு காங்கிரஸ் அங்கத்தினர். 'பட்ஜெட் வரிகளை வர்த்தக சமூகம் ஏறக்குறைய வரவேற்கவே செய்துள்ளது' என்று வேறு ஒருவர் கூறுகிறார். இது உண்மையா? நாட்டு மக்களின் உண்மையான உணர்ச்சிகளை உணராத இவர்கள் அவர்களுடைய உண்மைப் பிரதிநிதிகளாக இருக்கத் தகுந்தவர்கள்தானா? உண்மையைப் பேசுவோரிடம் மந்திரி எதிர்ப்பும், சீற்றமும் கொண்டாரேயானால், 'இந்தியா ஜனநாயக நாடு' என்று சொல்வதற்குப் பதிலாக கம்யூனிஸ நாடாகவே மாறி விட்டதாகச் சொல்ல வேண்டும்.

## அருமையான மனிதர்

திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தைச் சேர்ந்த பி. எஸ். ராமதுரை அவர்கள் சென்ற 18—3—63 அன்று காலமானார் என்ற செய்தியைக் கேட்டுப் பழைய நல்ல காங்கிரஸ்காரர்கள் எல்லாரும் திடுக்கிடுவார்கள். ஸ்ரீ ராமதுரை நாகபுரி சத்தியாக்கிரகத்தில் கலந்து கொண்டு ஒரு வருஷம் சிறைவாசம் அனுபவித்தார். பின்னர் 1930-ம் ஆண்டு உப்பு சத்தியாக்கிரகத்தின் போதும் 1942-ம் வருஷத்திலும் சிறைப்படுத்தப் பட்டார். ராஜாஜி 1925ல் திருச்செங்கோடு புதுப்பாளையத்தில் காந்தி ஆசிரமம் தொடங்கிய நாளிலிருந்து தமது இறுதிநாள் வரை ஆசிரமத்திலேயே இருந்து காந்தி மகான் வகுத்த நிர்மாணப் பணியையே செய்துவந்தார். ராஜாஜியிடம் அளவு கடந்த பக்தி கொண்ட ஓர் அருமையான மனிதர் மறைந்து விட்டார். அவருடைய பிரிவால் வருந்தும் அவருடைய பெரிய குடும்பத்துக்கு நமது அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



திரு பி. எஸ். ராமதுரை

## வருந்துகிறோம்

பாரதத்தின் முன்னாள் உயர் மன்ற பிரதம நீதிபதி ஸ்ரீ பதஞ்சலி சாஸ்திரியாரின் எதிர்பாராத மரணம் அவருடைய நண்பர்களுக்கு மட்டுமின்றி, நாட்டில் பலருக்கும் சோகத்தை மூட்டியிருக்கிறது. சட்ட விஷயத்திலும் நீதி பரிபாலனத்திலும் அவருடைய திறமை நாடறிந்ததே. நிர்வாகத் திறமையும் அவருக்குப் பூரணமாக இருந்தது. எல்லாவற்றையும் விட அவருடைய தைரியம் மெச்சத்

தருந்தது. அரசாங்கத்தின் எதேச் சாதிகாரப் போக்கைக் கண்டிப்பதில் உயர் நீதிபதிக்கு இருக்க வேண்டிய சுயேச்சை மனப்பான்மையுடன் அதை வன்மையாக எடுத்துச் சொல்லும் தைரியமும் படைத்திருந்தார். சர்வசாதாரணமாகவே தைரியமும் சுயேச்சையும் நீதிபதிகளிடம் நாம் எதிர்பார்க்கக் கூடும் என்றாலும் அவர்களிடமும் இந்தத் தன்மை வேகமாக மறைந்து வரும் இக்காலத்தில் பதஞ்சலி சாஸ்திரியாரின் திரத்தை விசேஷமாகப் பாராட்ட வேண்டும். உன்னதமான சம்ஸ்கிருத பண்டிதரின் புதல்வராகிய அவருடைய வடமொழி அறிவும், நமது கலாசாரப் பண்புகளில் தோய்ந்த அவருடைய மனமும் அவருடைய தோற்றத்திலும் பேச்சிலும் பொலியும். ஓய்வு பெற்ற பின் ஸம்ஸ்கிருத கமிஷன் தலைவராகச் சிறப்பான பணியாற்றி, ஸம்ஸ்கிருத புனருத்தாரணத்துக்குச் சிறந்த தொண்டாற்றிய உத்தமர். இவருடைய மறைவு நீதித்துறைக்கு ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும்.



ஸ்ரீ பதஞ்சலி சாஸ்திரி

## புத்தாண்டு மலர்

தமிழ்ப் புத்தாண்டு சோபகிருதுவில் இந்நாட்டிலும் கடல்கடந்த பிற நாடுகளிலும் உள்ள தமிழ் பேசும் மக்களையெல்லாம் மகிழ்விக்கக் 'கல்கி'ப் பத்திரிகையில் பல புதிய அம்சங்கள் வெளிவர விருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். மதிப்புக்குரிய நமது ராஜாஜி அவர்கள் ஸ்ரீ சோமு அவர்களுடன் சேர்ந்து 'முதல் மூவர்' என்ற தலைப்பில் பேயாழ்வார், பூதத்தாழ்வார், பொய்கை ஆழ்வார் ஆகியோரது பாக்கள் பலவற்றைக் கல்கி பத்திரிகை வாயிலாக எடுத்துரைக்கப் போகிறார்கள். நேயர்களது இல்லங்களெல்லாம் புத்தாண்டு இதழ் வந்து சேர்ந்ததுமே புனிதமடைந்து பொலிவுறும்.

எழுத்தாளர்கள் பலர் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவி வருகின்ற நேரம்தவிர மற்றச் சமயங்களில் வேறு பல துறைகளிலும் சிறப்பாகப் பணியாற்றி வருகின்றார்கள். அந்தத் தொழில்களில் அவர்கள் பெற்ற சுவையான அநுபவங்களைக் கல்கி அன்பர்களுடன் பகிர்ந்து கொள்ளப் போகிறார்கள். 'எழுத்தும் தொழிலும்' என்ற இந்தச் சிறப்பான அம்சம் புத்தாண்டு மலரில் ஆரம்பமாகிறது.

வருகிற ஏப்ரல் மாதத்திலிருந்து தொடங்கி மாதத்துக்கு ஒரு நெடுங் கதையை நேயர்களுக்கு அளிப்பதெனத் தீர்மானித் திருக்கிறோம். இந்த வரிசையில் முதல் நெடுங் கதையை அகிலன் அவர்கள் எழுதுகிறார்கள். புத்தாண்டு மலரில் இடம் பெறுகிறது.

சீன ஆக்கிரமிப்பு நிகழ்ந்துள்ள இன்றையச் சூழ்நிலையில் அண்டை நாடுகளைப் பற்றி நாம் நன்கு அறிந்து கொள்ள வேண்டியது மிகவும் அத்தியாவசியமாகும். 'எல்லைப் புற நாடுகள்' என்ற பொதுத் தலைப்பில் வெளியாகும் முதல் கட்டுரை திபெத்தைப் பற்றியது. அடுத்த இதழிலேயே இதனை எதிர்பார்க்கலாம்.

இன்னும் சிக்கிம், பூடான், நேபாளம் போன்ற நாடுகளைப் பற்றிய ரசமான கட்டுரைகளை அவ்வப்போது கல்கியில் எதிர்பார்க்கலாம். மேலும் மறக்க முடியாத திரைப்படங்களான அசோக்குமார் பாலயோகினி, கச்சதேவயானி, தியாக பூமி, சபாபதி போன்றவைவற்றைக் குறித்து இனி வரப் போகும் இதழ்களில் இளைஞர்கள் படித்து அறியலாம்; வயதானவர்கள் நினைத்துப் பார்த்து மகிழத் தூண்டுகோலாய் அமையும்.

புத்தாண்டு மலரில் அருமையான சிறுகதைகள் நான்கு இடம் பெறுகின்றன. மாயாவி, தாமரை மணாளன், நாடோடி, டி. கே. டி. துரைராஜன் ஆகியோர் எழுதியுள்ளனர். இப்புத்தாண்டிலிருந்து சிறந்த கவிதைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்றும் முயன்று வருகிறோம்.

இன்னும் எத்தனையோ புதிய புதிய அம்சங்களைப் புது வருஷத்தில் ஆரம்பிக்கவிருக்கிறோம். என்றாலும் முக்கியமாக இன்னும் ஒரே ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டும். உலக சரித்திரத்தில் பல சந்தர்ப்பங்களில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த சில கடிதங்கள் எழுதப் பட்டுள்ளன. அப்படிச் சரித்திரப் பிரசித்திபெற்றுவிட்ட கடிதங்களைப் பற்றித் திரு வெ. சாமிநாத சர்மா அவர்கள் எழுதவிருக்கிறார்கள். நேயர்களுக்குக் கொண்டாட்டம்தான்!

# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

கல்கத்தாவிலிருந்து எண்பது மைலில் ஹூக்ளி மாவட்டத்தில் உள்ள ஒரு கிராமம் கமார்புகூர். பூகோள ரீதியில் கல்கத்தாவுக்கும் கமார்புகூருக்கும் எண்பது மைல்தான் இடைவெளி எனினும் இரு இடங்களிலும் நடைபெற்ற வாழ்முறைகள் இரு வேறு உலகங்களைச்சேர்ந்தவை என்றே சொல்லி விடலாம். இந்த வரலாறு நிகழ்ந்த சமயத்தில்—அதாவது பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில்—மத நம்பிக்கையை இழந்து மேல்நாட்டுப் பாணியில் வாழத் தொடங்கியிருந்தது கல்கத்தா. கமார்புகூரோ இந்த அந்நியச் சாயையைச் சற்றும் காணாமல் ஆயிரம் பதினாயிரம் ஆண்டுகளாகத் தான் கண்டு வந்த அதே எளிய இந்து மத வாழ்க்கையைத் தொடர்ந்து கொண்டிருந்தது.

பரமஹம்ஸர், விவேகாநந்தர் என்ற இரு பெயர்களிலுமே ஒரு பொருத்தம் இருப்பதாகச் சென்ற இதழில் கூறினோம். இந்தப் பரமஹம்ஸர் ஆதியில் கமார்புகூர் கதாதரராக இருந்தார்; விவேகாநந்தர் கல்கத்தா நகரத்து நரேந்திரராக இருந்தார். பரமஹம்ஸருக்கும் விவேகாநந்தருக்கும் எவ்வளவு ஒற்றுமையிருந்தாலும், கதாதரருக்கும் நரேந்திரருக்கும் உள்ள வேற்றுமைகள் கொஞ்சநஞ்சமல்ல. கமார்புகூருக்கும் கல்கத்தாவுக்குமிடையே எத்தனை வேற்றுமையோ அத்தனை வேற்றுமை அவ்விருவருக்குமிடையே இருந்தது. கிராமத்தின் எளிமை அவ்வளவும் தமது இயல்பில் பூரணமாக நிறையப் பெற்றவர் கதாதரர். இயற்கையாகவே அவர் கொண்டிருந்த மத நம்பிக்கையும் இந்த எளிமை எழில் நிறைந்ததே. அதில் தர்க்கங்களுக்கும், வாதங்களுக்கும், பெரிய அறிவாராய்ச்சிக்கும் இடமில்லை. அதே போல, கதாதரர் மத விஷயங்களில் சந்தேகம் கொண்ட போது அந்தச் சந்தேகமும் எளியதாகவே இருந்தது. மாறாக, நகரத்தின் சிக்கல்கள் அவ்வளவையும் நரேந்திரரின் மனோபாவத்தில் காணலாம். அவருடைய நம்பிக்கை, நம்பிக்கையின்மை இரண்டிலுமே சிக்கல் நிறைந்திருந்தது.

ஒன்று இதயத்தையே பிரதானமாக வைத்து வாழ்ந்த வாழ்க்கை. அப்படி வாழ்ந்த கதாதரர் தாம் அறியாமலே பேரறிஞருமாகி ஸ்ரீராமகிருஷ்ணரானார். மற்றொன்றோ அறிவைப் பிரதானமாக வைத்து வாழ்ந்த வாழ்க்கை. அப்படி வாழ்ந்த நரேந்திரர் இதயத்தின் பெருமையை உணர்ந்ததாலேயே விவேகாநந்தரானார். இவ்விருவரும் பின்பு ஒன்றியதன் மூலம், கல்கத்தாக்களும் கமார்புகூர்களும் ஒன்றாகும் போதுதான் உண்மை இந்தியா பிறக்கும் என்பதை ஐயமற நிரூபித்துக் காட்டினார்கள்.



கமார்புகூர் கிராமம் ஜிலேபி முதலிய இனிப்புப் பண்டங்களுக்குப் பேர் போனது. அங்கு க்ஷுதிராம்—சந்திரமணி என்ற அந்தணத் தம்பதி

தமது இனித்த உள்ளத்தால் பேர் பெற்றிருந்தார்கள்.

சந்திரமணி, தனது கஷ்டம் தவிர மற்ற எல்லாருடைய கஷ்டத்துக்கும் இரங்குபவள். 'நடுத்தர'க் குடும்பம் என்பதற்கும் ஒரு மாற்று வசதிக் குறைவாக உள்ள குடும்பம் அவளுடையது. எனினும் அவளுக்கு அன்னதானம் செய்யாவிட்டால் உணவு உள்ளே செல்லாது. தன் பங்கையும் அன்னதானம் செய்து, அதனால் தான் உணவே உட்கொள்ளா விட்டாலும் கூட மனப் பசி ஆறி இன்பமாகவே இருப்பாள் அவள். ஏழைகளுக்கும் பரதேசிகளுக்கும் அவளுடைய அன்பு உள்ளம் நன்ருகத் தெரியும். குழந்தைகளுக்கும் 'சந்திரா மாமி' எது கேட்டாலும் கொடுத்து விடுவாள் என்று தெரியும். இந்த உதார குணத்தையும், வெள்ளை உள்ளத்தையும் கண்டு கிராமத்துப் பெண்டுகள், ''பாவம், நம்ம சந்திரா கொஞ்சம் 'ஒரு மாதிரி' யில்லே ?'' என்று அங்கலாய்த்துக் கொள்வார்களாம்.

'எவர்களிடம் சூதும், பொய்யும், வஞ்சனையும் இல்லேயோ அவர்களுக்கே பிரம்மலோகம் கிடைக்கும்' என்று உபநிஷத மொன்று கூறுகிறது. இதன்படி பிரம்ம லோகத்துக்கு முழுத் தகுதியும் வாய்ந்த பரமசுத்தமான தம்பதியர் க்ஷுதிராமும் சந்திரமணியும்.

ஊர் பெரியதனக்காரருக்காக ஒரு வழக்கில் பொய்ச்சாட்சி சொல்ல மறுத்ததன் காரணமாகத் தம் சொத்து முழுவதையும் இழந்த சீலவான் க்ஷுதிராம் சட்டர்ஜி. அப்போதுதான் தமது பூர்வீகக் கிராமத்தை விட்டுக் கமார்புகூர் வந்து சேர்ந்தார் அவர். அவருடைய நீதி மனப்பான்மைக்கு ஒரே உதாரணம் போதும். வரதட்சிணை வாங்கிக் கலியாணம் செய்பவர்கள் எவ்வளவு உயர் குடி வேதியராக இருப்பினும் அவர்கள் கையால் நீர் வாங்கிப் பருகமாட்டாராம் க்ஷுதிராம்.

பூஜை புனஸ்காரங்களிலும், ஆசார அநுஷ்டானங்களிலும் க்ஷுதிராம் மிகச் சிறந்து விளங்கினர். ஏழைமை பக்தியை மேலும் வளர்த்தது. ரகுவீரனையும் சீதளாதேவியையும் முழுமனகடன் உபாசித்து வந்தார் அவர். காயத்ரி மந்திரத்தை ஜபிக்கும்போது அவரது மார்பகம் சிவந்து விடும் என்றும், மூடிய அவரது இமைகளை உறுத்திக் கொண்டு நீர் முத்துக்கள் உருண்டு வரும் என்றும் பிற்காலத்தில் பரமஹம்ஸர் கூறியதுண்டு.

ஒரு நாள் க்ஷுதிராம் அண்டைக் கிராமம் ஒன்றுக்குச் செல்கையில் பரந்த வயல் வெளியை அடுத்திருந்த ஒரு மரத்தடியில் படுத்தார். மென்காற்றின் இன்னலைகள் அவரைத் தாலாட்ட அந்தச் சுகத்தில் உறங்கிப் போனர். உறக்கத்தில் அற்புதமான ஒரு சொப்பனம் கண்டார். அவரது அன்புக்குரிய அயோத்தியர் கோமான் அருகம்புல் வண்ணத் திருமேனியுடன் அவர் எதிரே நின்ருன். வயல்களுக்கிடையே ஓரிடத்தைத் தன் காந்தள் விரலால் சுட்டிக் காட்டினன். ''அங்கேதான் நான் நீண்ட நாட்களாக யாரும் கவனியாமல் பட்டினியாகக் கிடந்து வருகிறேன். நீங்கள் என்னே உங்கள் வீட்டுக்கு எடுத்துச் செல்லுங்களேன்'' என்ருன் க்ஷுதிராமிடம். அவர் மெய் சிலிர்த்துப் போனர். 'சக்கரவர்த்தித் திருமகனுகிய இவன் ஏன் பட்டினி கிடக்க வேண்டும்? இவனுக்குரிய ராஜோபசாரத்தைச் செய்ய ஏழையாகிய என்னை ஏன் இவன் தேர்ந்தெடுத்தான்?' என்றெல்லாம் அவரது எண்ணம் ஓடிற்று. ''எனக்காக நீங்கள் விசேஷமாக எதுவும் செய்ய வேண்டாம். ம்... என்னே அழைத்துப் போங்கள்'' என்று உவந்து 'தானே வந்து தலையளித்து ஆட்கொண்டான்' ராகவன். அந்தக் கருணை வெள்ளத்தைத் தரிசிக்க முடியாது க்ஷுதிராமின் கண்கள் வெள்ளமெடுத்தன.

கண்ணீர் முகத்தில் குறுகுறுக்கவே துயில் கலேந்தெழுந்தார் க்ஷுதிராம். பக்கலிலிருந்த நெல்வயலின் மீது அவரது பார்வை சென்றது. பச்சை வர்ணக் கதிர்கள் நூறு நூறு பாலராமர்களாக அவரை நோக்கிக் கையை ஆட்டின. அவற்றினூடே சென்ற அவருக்கு 'இதுவேதான் தாசரதி கனவில் சுட்டிக் காட்டிய இடம்' என்று தெளிவாகத் தெரிந்து விட்டது. 'ஆகா, அதோ... ராமனேதான்! சாளக்ராம வடிவத்தில் எழுந்தருளி யிருக்கிருன்! நாராயணனே சாளக்ராமத்தில் வழிபடுவது மிக மிக விசேஷமாயிற்றே!' கனவையும் நனவையும் இணைத்து இறும்பூது கொண்டவராக சாளக்ராமத்தை நெருங்கினர் க்ஷுதிராம்.

ஆ! நாராயணனுக்கு நாகம் ஒன்று தனது படத்தை விரித்துப் பாங்குறக் குடை பிடிக்கிறது! க்ஷுதிராம் நெருங்கியவுடன் சரசர வென்று உள்ளே சென்று விட்டது அது. புற்றின் வாயிலிலேயே சாளக்ராமம் நின்றது. ஒரு சிறிதும் அச்சமின்றி அதைக் கையில் எடுத்துப் பார்த்தார் க்ஷுதிராம். அவரது உள்ளம் உவகையால் துள்ளிக் குதித்தது. ராம பிரானுக்கு மிகவும் உகந்தது என்று சாஸ்திரங்கள் கூறும் அமைப்பிலேயே இருந்தது அந்த சாளக்ராமம்.

கமார்புகூரில் சந்திரமணி நிவேதனம் செய்யும் எளிய ஆகாரத்துக்குக் 'கொடுத்து வைத்தவன்' போல வந்து சேர்ந்து கொண்டான் சாளக்ராம உருவிலிருந்த சாகேதபதி.

க்ஷுதிராமின் மெய்யான பக்தி உணர்வுக்கு இன்னுமோர் உதாரணம் பாருங்கள்:

செல்வ நிலையில் இருந்த தனது அருமை மருமான் ராமச் சந்திரரைப் பார்த்து வருவதற்காக ஒரு நாள் மேதினிப்பூருக்குக் கிளம்பினார் க்ஷுதிராம். இப்போது போலத்தான் அது ஒரு பங்குனி மாதம். இலையுதிர் காலமாதலால் பல விருக்ஷங்கள் குழந்தைகள் போல் சூரிய ஸ்நானம் செய்துகொண்டிருந்தன.




இந்த மரங்களைப்பார்த்தபடியே சென்று கொண்டிருந்த க்ஷுதிராமின் கண்கள் திடீரென்று ஆனந்தத்தில் நிலைத்து நின்றன. பச்சைப் பசேலென்று இலைகள் நிறைந்த வில்வ மரங்களைக் கண்டதுதான் ஆனந்தத்துக்குக் காரணம். கால்காசு பெறாத வில்வத்தால் அர்ச்சனை பெற்றே வேண்டிய தெல்லாம் தருபவன் மகாதேவன். ஏழைகளின் இறைவனாகிய அவனை அர்ச்சிக்க அந்த வில்வமும் கிடைக்காமல் க்ஷுதிராம் பட்ட வேதனை அவருக்குத் தானே தெரியும்? பரபரப்புடன் வில்வ இலைகளைப் பறித்தார். விறுவிறுக்க வீடு திரும்பினார். ஸ்நானம் செய்து விட்டுப் பரமேசுவரனை வில்வத்தால் அர்ச்சிக்கத் தொடங்கி விட்டார்.

பூஜை முடிந்தது. க்ஷுதிராம் உண்டும் ஆயிற்று.

''மேதினிப்பூர்....'' என்று இழுத்தாள் சந்திரா.

''ஓ!'' — அப்போதுதான் க்ஷுதிராமுக்கு மேதினிப்பூர் — ராமச்சந்திரர் நினைவுகளே வந்தன. மீண்டும் புறப்பட்டார்!

க்ஷுதிராமுக்கு இப்போது வயசு ஏறக்குறைய அறுபது. மூத்த மகன் ராமகுமாருக்குக் கலியாணமாகி மாற்றுப் பெண் வீட்டுக்கு வந்தாயிற்று. அவள் வந்தவேளை வீட்டில் தன தான்யங்கள் சற்றே பெருகின. எனவே பிடிவாதக் காரியானாலும் 'செல்ல'மாக வளர்ந்து வந்தாள் அவள். பெண் காத்யாயனிக்கும் விவாகம் செய்துவிட்டார் க்ஷுதிராம். வங்கத்திலிருந்து தமிழகத்தின் கோடியில் உள்ள ராமேசுவரத்துக்குத் தாம் யாத்திரை செய்து திரும்பியதன் நினைவாக ராமேசுவரன் என்று அவர் பெயரிட்டிருந்த பையனுக்கு இப்போது சுமார் பத்துப் பிராயமாகிறது. ராமேசுவரத்திலிருந்து தாம் கொண்டு வந்த பாணலிங்கத்தையும், சாளக்ராமத்தையும், சீதளாவையும் பூஜித்துக் கொண்டு அமைதியாகக் காலம் கழித்து வருகிறார் க்ஷுதிராம் சட்டர்ஜி.

தேவர்கடன்களைத் தீர்ப்பது போல் பிதிரர் கடன்களையும் பூரணமாக ஆற்ற வேண்டும் என்று அவருக்கு ஓர் ஆசை உண்டாகிறது. புனித கயைக்குச் சென்று சிராத்தம் செய்து தென்புலத்தாரைத் திருப்தி செய்ய எண்ணுகிறார். அறுபது வயசானாலும் நெடிதுயர்ந்த தேகக்கட்டு கொண்ட க்ஷுதிராம் நடந்து சென்றே கயா க்ஷேத்திரத்தை அடைகிறார். இது 1835ம் ஆண்டு மார்ச்சு மாதம் நடைபெற்ற சம்பவம்.

கயையில் சிராத்தம் செய்து, அங்கு எழுந்தருளியுள்ள கதாதரனாகிய நாராயண மூர்த்தியைத் தொழுது வழிபடுகிறார் க்ஷுதிராம், கடமைகள் எல்லாவற்றையும் செய்தாகி விட்டது என்ற நிம்மதியுடன். அப்படிச் செய்விக்க அருள் புரிந்த பரமனின் கருணையை வியந்தபடி நித்திரையில் ஆழ்ந்தார் க்ஷுதிராம்.

அமலமான நித்திரை வானில் ஆண்டவனின் அன்பு முகில்கள் கூடின. அந்த மேகங்களின் மீதாக கயாநாதனின் ஆலயத்துக்கு மிதந்தார் க்ஷுதிராம். அங்கே அவரது முந்தையர்கள் ஒளி மிகு தேகங்களோடு வந்து கூடி, அவர் அளித்த பிண்டங்களைத் தாங்களே நேர்முகமாக வாங்கிக் கொண்டனர். அவர்களைக் குனிந்து வணங்கி விட்டு நிமிர்ந்த க்ஷுதிராம் சந்நிதி பூராவிலும் பேரொளி வீசித் திகழ்வதைக் கண்டார். அந்தப் பேரொளியின் பிறப்பிடமாக, 'சீரிய சிங்காதனத்து எழுந்தருளி'யுள்ள பரம புருஷனைக் கண்டு உள்ளங்காலிலிருந்து உச்சித் தலை வரை கிளுகிளுப்படைந்தார். காயாம்பூ வண்ணத் திருமேனியையும் அதிலிருந்து பெருக்கிடும் இந்தத் தூய வெள்ளொளியையும் கண்கள் கொண்டவரைக் கிரகித்தபடி மாயவனின் மலர்ப் பாதத்தில் பணிந்தார்.

சந்திரிகையைப் பிழிந்தெடுத்தாற் போன்ற தீங்குரலில் தீன தயாளன்

பேசினான்: "க்ஷுதிராம்! உன்னுடைய அசாதாரணமான பக்தியில் நான் வசியமாகி விட்டேன். உன் மகனாகப் பிறந்து உன் அன்பைப் பூரணமாகப் பெறச் சங்கல்பித்திருக்கிறேன்."

க்ஷீரசாகரனின் பாலினும் இனிய சொல்லைக் கேட்டதும் க்ஷுதிராமின் மன நிலை எப்படி இருந்திருக்கும் என்பதை எழுத்தில் எப்படிக் கொண்டு வர முடியும்? எல்லையற்ற ஆனந்தத்தில் சிக்குண்ட க்ஷுதிராம் உடனேயே இந்த ஏழையின் வீட்டில் பரமன் பிள்ளையாகப் பிறந்தால் அதனால் தாம் என்னென்ன அபசாரங்களுக்கு ஆளாக நேரிடுமோ என்று பயந்தார்.



"பயப்படாதே க்ஷுதிராம், பயப்படாதே" என்ற அபயமூர்த்தி, "என்னுடைய ஆசையை நிறைவேறச் செய்" என்றான். ஆசையற்றவனும், பிறர் ஆசைகளைத் தீர்ப்பவனுமான தேவதேவன் ஏழை க்ஷுதிராமிடம் இப்படிக் கேட்டுக் கொண்டான்.

ஆசா நிகளம் துகளாக்கும் பகவானுக்கும் ஆசை உண்டா, என்ன? ஆம், ஓர் ஆசை அவனுக்கு உண்டு. இக உலக ஆசைகளால் தன்னை மறந்திருக்கும் மக்களைத் தன்பால் திருப்பிக் கொள்ள வேண்டும் என்று ஒரு பெரிய ஆசை அவனுக்கு உண்டு. தன்னை மறந்திருப்பவர்களுக்காகத்தான் இப்பொழுது அவன் பிறக்க எண்ணினானே ஒழிய, தன்னை ஸ்மரித்துக் கொண்டிருக்கும் க்ஷுதிராமுக்காக அல்ல.

க்ஷுதிராமின் பக்திக்காகத் தான் பிறக்கப் போவதாக அவன் கூறினாலும் உண்மையில் அந்த மாயவன் மக்களின் பக்தி குறைந்து போனதற்காகத்தான் பிறக்க விருந்தான். தர்மத்தினால் காண முடியாதவன், அதர்மம் மிகுந்தபோது அதனைத் தேடியல்லவா வருகிறான்?

ஃ ஃ ஃ

ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரை அவரது அடியார்கள் இறைவனின் அவதாரமாகத் தான் கருதுகிறார்கள். அவதார புருஷர்களுக்குள்ள சகல லட்சணங்களும் அவரிடம் பொருந்தி யிருந்தன என்பதை சாஸ்திர நூல்களின் துணைகொண்டு அவருடைய முன்னிலையிலேயே, பண்டிதர் அவை ஒன்றில், பைரவி பிராம்மணி என்ற உத்தம சந்நியாசினி விளக்கினாள். அதற்கும் மேலாக பரமஹம்ஸரே தமது திருவாயால், 'ராமனாகவும் கிருஷ்ணனாகவும் வந்தவன் எவனோ அவனே இப்போது ராமகிருஷ்ணனாக வந்திருக்கிறான்' என்று கூறியதுண்டு. இன்றைய பகுத்தறிவுவாதிகளை விட அதி தீவிரப் பகுத்தறிவுவாதியாக இருந்த நரேந்திரர், இவர் அவதாரம் தானா என்று சந்தேகித்த சமயத்தில், தமது மரணப்படுக்கையிலிருந்து இவ்வாறு கூறினார் குரு மஹராஜ். சத்தியம் தவிர வேறெதுவும் அறிந்திராத அந்த மகானின் வாக்கை விட நமக்கு ஆதாரம் எதுவும் தேவையில்லை:

'தர்மங்கள் சிதைவுற்று, அதர்மங்கள் மேலோங்கும் சமயத்தில் நானே சம்பவித்து மீண்டும் தர்மத்தை நிலை நிறுத்துவேன்' என்று கூறிய கண்ணபிரான், இந்த வார்த்தையைக் காப்பாற்றுவதற்குச் சென்ற நூற்றாண்டை விட அவசியமானதொரு சூழ்நிலை இருக்கவில்லை. அப்போது இந்து தர்மத்தைப் பலர் புறக்கணித்து, கிறிஸ்துவ சமயத்தையும் இதர பல புதுக் கோட்பாடுகளையும் தழுவத் தொடங்கியதாக முன்பு கண்டோம். இதைக்கூட ஓரளவு மன்னித்து விடலாம். ஏனெனில் இவர்கள் எல்லோரிடமும் சமய உணர்வு என்பதாக ஒன்றேனும் இருந்தது. ஆனால் இதைவிடப் பயங்கரமான விஷயம் என்னவெனில், பெரும்பாலான மக்கள் எவ்வித ஆன்மிக உணர்வும் இன்றி, மேல் நாடு அளித்திருந்த போகபோக்கிய வாழ்வே மனிதனின் இலட்சியம் என்பதாக மயங்கி, உலகாயத

வாழ்க்கையில் மூழ்கி விட்டார்கள். இந்தியாவில் மட்டுமின்றி உலகெங்கிலுமே ஆன்மீகத்தைப் பொருளாதாரம் முறியடித்து வந்தது. இந்தச் சமயத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தோன்றியிராவிடில் இந்து தர்மம் அழிந்திருக்கும் என்பது மட்டுமின்றி மேல் நாடுகளிலும் சமய உணர்வு வெகு வேகமாகக் குன்றியிருந்திருக்கும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம்மில் கண்ட அநுபவங்களை ஸ்வாமி விவேகாநந்தர் பரப்பியதால்தான் இந்தியாவில் இந்து தர்மம் உயிர் பெற்றது. அதோடு மேல் நாடுகளின் ஆன்மீக நாட்டம் விருத்தியாயிற்று. இதில் சந்தேகம் இல்லை.

ஆகவே, கடவுள் என்று ஒருவர் இருக்கிறார்; அவர் எப்படி இந்தச் சகல உலகங்களாகவும், ஜீவராசிகளாகவும் ஆனாரோ அதே போல அந்த ஜீவராசிகளை நல்வழிப்படுத்துவதற்காகத் தாமே ஒரு ஜீவன் போலத் தோன்றுகிறார் என்ற நம்பிக்கை நமக்கிருந்தால் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர் போன்ற மகான்களை அவதார புருஷர்களே என்று திண்ணமாகக் கூறலாம்.

'ராமகிருஷ்ணர் அவதார புருஷரா, இல்லையா என்ற விவாதம் அவசியமில்லை. அவரது புனிதம் செறிந்த வாழ்வும் அநுபவங்களும் நம்மைக் காக்கப் போதுமானவை. பரமஹம்ஸர் ஓர் அவதாரம் என்று நிரூபிப்பதாலேயே அவரது மானுடப் பண்புகள் மகிமை குன்றிப்



போகும்' என்று கருது வோரும் உண்டு. ஸ்வாமி விவேகாநந்தரே பரம ஹம்ஸரின் அவதார விசே ஷத்தை வலியுறுத்தியதில்லை. ஆண்டவன் அவதரிப்பானு, மாட்டானு என்பதைப் பற்றிக் கருத்து வேற்றுமை யிருக்க லாம். அவதாரத்தை ஒப்புக் கொள்கிறவர்களும் தசாவதா ரம், இருபத்துநாலு அம்சாவதாரம் என்பது போலப் பரமஹம்ஸரை ஒப்புக் கொள்ளாமலிருக்கவும் கூடும். எனவே, சிலரால் நம்ப இயலாத அவதார தத்து வத்தைக் கூறுவதால் யாரும் நம்பக் கூடிய அவரது உபதேசங்களின் பலனை இழக்க நேரிடுமோ என்று ஸ்வாமி



விவேகானந்தர் கருதி யிருக்க லாம். மனிதனைத் தெய்வமாக் குவதற்காகத் தெய்வம் மனித னுகவருகிறது என்ற நம்பிக்கை உள்ளவர்களெல்லாம் ஸ்ரீ ராம கிருஷ்ணர் ஓர் அவதாரம் என்பதையும் நம்புவார்கள்.

நித்திரைத் திரை அறுந் தது. க்ஷ்ேத்திராம் விவரிக்க வொண்ணுத இன்பமும் அச்சமுமாக எழுந்திருந்தார். கயாநாதனை ஸ்மரித் துக் கொண்டு கமார்புகூருக்குத் திரும் பினர். அங்கே பல அற்புதமான சமாசாரங்களை ஏந்திக் கொண்டு அவ ருக்காகக் காத்துக் கொண் டிருந்தாள் சந்திரமணி. (தொடரும்)

# தமிழ்த்தாத்தாவின் நூல் நிலையம்

தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் பதிப்பித்த நூல்களின் முன்னுரைகளில் எல்லாம் வழக்கமாக ஒரு பாடல் எழுதப்பட்டிருக்கும்.

இருந்தமிழே உன்னல் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன் — இருந்த
உதிப்பித்த பன்னூல் ஒளிர அடியேன்
பதிப்பிக்க வேகடைக்கண் பார் !

என்று இவ்வாறு தமிழ்ப் பணிக்காகவே தாம் இருந்ததாகக் கருதித் தொண்டு புரிந்த டாக்டர் ஐயரவர்களின் நூல் நிலையம் புதிய-பெரிய ஆராய்ச்சி நிலையமாகத் திருவான்மியூரில் அமையப்பெற இருப்பதை அந்தப் புனிதத் திருப்பணியைப் பற்றிய அறிவிப்புக்களைத் தொடர்ந்து கல்கி இதழில் படித்து வரும் நேயர்கள் அறிவார்கள். டாக்டர் சாமி நாதய்யர் நூல் நிலையம் திருவான்மியூரில் அமைவதற்கு ஆகும் பொருள் செலவான ஒன்றரை லட்சம் ரூபாயில் மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கமும் தருகின்ற உதவிகள் தவிர எஞ்சியவற்றைத் தமிழ்ப் பேரு மக்களே தாராள மனத்தோடு கொடுத்து உதவ வேண்டும். தமிழ் நூல்களை நன்ருகவும் கௌரவ மாகவும் பதிப்பித்து நமது மொழிக்கும் பண் பாடுகளுக்கும் பெருமையளித்த ஒரு பெரியவ ருக்கு இந்த அரும் பெரும் ஞாபகத்தின் மூலமா கத் தமிழ் மக்கள் மரியாதை செய்யக் கடமைப் பட்டிருக்கிருர்கள். வசதியுள்ளவர்கள் பெருந் தொகை அளிப்பதனுலும் மற்றவர்கள் சிறு தொகை அளிப்பதனுலும் இன்னும் சிலர் இந்த நல்ல காரியம் நிறைவேற மனப்பூர்வமாக நினைப் பதனுலும் கூட அந்த மரியாதையைச் செய்யலாம். டாக்டர் ஐயரவர் களின் சிறந்த நூல் நிலையம் பெரிதாகவும் விரிவாகவும் அமையப் பொரு ளுதவி செய்கிற பெருமக்கள், **கௌரவ அமைச்சர், டாக்டர் சாமிநாதய்யர் நூல் நிலையம், அடையாறு, சென்னை-20** என்ற முகவரிக்கு அனுப்பி உதவுமாறு வேண்டுகிறோம்.





நீங்கள்
வாங்கும்பொழுது **நல்லெண்ணெ**

அது சுத்தமானது என்று உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள்.

அது **கேஎம்பி**
**தான் என்று நிச்சயப்படுத்துங்கள்**




கேஎம்பி நல்லெண்ணெ நூறுக்குநூறு சுத்தமானதும் லபாரட்டரியில் பரீட்சை செய்ததுமாகும். தேர்ந்தெடுத்த வெளுத்த எள்ளை நவீன இயந்திரங்களில் அனுபவசாலிகளின் மேற்பார்வையில் அரைத்து செய்தது.

விநியோகஸ்தர்கள்:
ஜி.அதெர்டன் & கோ.(பிரைவேட்)லிட்
4. மிஷன் ரோ,
கல்கத்தா-1

500 கிராம், 1 கிலோ, 2 கிலோ 4 கிலோ, 16 கிலோ, அளவுகளில் கிடைக்கும்.

---

# உங்களுக்குத் தேவை




**பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

## நெருப்பு – கப்பல் – விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

**ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்குமேல்**

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை-1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
ஆமதாபாத், லூதியானா, கோயமுத்தூர், கொச்சி, கோவில்பட்டி




தமிழ் நாடு கம்யூனிஸ்ட் கட்சி ஓர் அற்புதமான முடிவு எடுத்திருக்கிறது. அதாவது, நடக்கவிருக்கும் உப தேர்தல்களில் காங்கிரஸை ஆதரிப்பது என்பதே அம்முடிவு. எனவே நாங்குநேரியில் ஆரம்பமாகித் திருத்தணியோடு முடிவடையும் ஐந்து உப தேர்தல்களிலும் மூவர்ணக் கொடியோடு கதிர்-அரிவாள் கொடியும் சேர்ந்து பறக்கும் என்பது உறுதியாகிறது. இரு கொடிகளும் ஒன்று சேர்ந்து பறப்பதைப் பற்றி மற்றவர்கள் என்ன சொன்னாலும் சுதந்திரக் கட்சிக்காரர்கள் மட்டும் சந்தோஷமே கொள்ளுவார்கள். ஏனெனில் 1959 லிருந்து இடைவிடாது 'காங்கிரசும் கம்யூனிஸ்ட் கட்சியும் ஒன்றாகி விட்டது' எனக் கூறியவர்கள் சுதந்திரக் கட்சியினர். இதை நம்ப மறுத்தவர்கள், இப்போதாவது தெளிவு பெறுவார்கள் அல்லவா?

ஃ ஃ ஃ

தேஜ்பூரை நண்பர்கள் மறந்திருக்க மாட்டார்கள். பொம்டிலா வீழ்ச்சியுற்றதும் சீனர் இந்த முக்கிய நகரை நோக்கித்தான் முன்னேறி வந்தார்கள். இங்கிருந்த பெரிய அதிகாரி சீனன் வருவதற்கு முன்பே ஊரை விட்டு ஓடி வந்து ஊர் சிரிக்க நடந்துகொண்ட வரலாறும் எளிதில் மறக்கக் கூடியதல்ல.

இந்த ஊருக்கு அருகில் இப்போது ஒரு பயங்கரக் காரியம் நடந்திருக்கிறது. அதாவது தேஜ்பூர்-ராங்கியா ரயில் பாதையில் செப்பனிடும் வேலை நடக்கும் சமயம், ஒரு தொழிலாளி ஏதோ ஒரு சாமான் புதிதாகக் கிடக்கிறதே என்று தட்டிப் பார்த்தாராம். உடனே அது 'டமால்' என்று வெடித்துத் தன்னை வெடிகுண்டு என அறிமுகப்படுத்தி யிருக்கிறது. அந்தத் தொழிலாளி ஸ்தலத்திலேயே மாண்டு விட்டார். ஆகவே, யாரோ அங்கு வெடிகுண்டை வைத்திருக்கிறார்கள் என்று ஆகிறது. இந்தச் சம்பவத்தை அதிகாரிகள் புலன் விசாரணை செய்கிறார்களாம். ரொம்ப சரி.



ஆனால் அந்த விசாரணையின் முடிவை அவர்கள் திரு லால்பகதூர் சாஸ்திரிக்கு அறிவிக்க வேண்டும். அந்தப் பெரிய மனிதரும் சென்னையில் உள்ள பெரிய மனிதர்களுக்குத் தெரிவித்து, ''காங்கிரஸ் கொடியோடு பறக்கப் போகும் கதிர் அரிவாள் கொடி'' விஷயத்தில் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதை வற்புறுத்த வேண்டும். அப்படி அவர்கள் செய்வார்களா, செய்தாலும் இவர்கள் கேட்பார்களா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

ஃ ஃ ஃ

''அடுப்பு மூட்ட வைத்த தீ, சிதறிப் போய்க் கூரையில் பிடித்து விட்டது; ஆகவே அடுப்பு மூட்டியதே தவறு என்பது போல், விற்பனை வரியை முதலில் போட்ட என்னைக் குற்றம் சாட்டுகிறார்கள்'' என்று ராஜாஜி சைதாப்பேட்டையில் பேசியிருக்கிறார்.

மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் இந்தக் குற்றச்சாட்டுக்கு ராஜாஜி இன்னொரு விதமாகப் பதில் சொன்னார். அந்தப் பதிலைக் கேட்டுக் கோகலே ஹாலில் குழுமியிருந்தவர்கள் வயிறு புண்ணாகும்படி சிரித்தார்கள்.

''முத்துச்சாமி என்பவனுக்கு ஆனா, ஆவன்னா எப்படி எழுதுவது என்று சொல்லிக் கொடுத்தார் ஒரு வாத்தியார். முத்துச்சாமி படித்து பாஸ் பண்ணி மேல் வகுப்புக்குப் போய்விட்டான். பிறகு பல வருடங்கள் கழித்து, இந்த முத்துச்சாமி மோசடிக்காரனாகி, இன்னொருவன் பெயரில் வந்த மணியார்டரில் கள்ளக் கையெழுத்துப்போட்டுப் பணம் வாங்கி விடுகிறான். இது வெளியில் தெரிந்து விடவே, போலீஸார் பிடித்துக் கொண்டு போய் அவனை ஜெயிலில் போடுகிறார்கள். 'அவன் அப்படி நடந்ததற்குக் காரணம் அவனுக்குக் கையெழுத்துப் போடக் கற்றுக் கொடுத்த பழைய

வாத்தியார்தான், ஆகவே, அந்த வாத்தியாரை விடாதீர்கள்' என்றால் எப்படி இருக்கும்?'' என்றார் ராஜாஜி.

ஃ ஃ ஃ

திரு கிருஷ்ண மேனன் பேசிய கான்பூர் கூட்டத்தில் அடிதடி — கலாட்டா என்று செய்திகள் கூறுகின்றன. முன்பு லட்சுமணபுரியிலும் இது மாதிரிதான் நடந்தது. மாணவர்களே அவரைப் பேச விடாதபடி தடுத்தனர். 'மைக்' செட் வைத்தவர் தம் சாமான்களைப் பாதுகாக்கப் படாத பாடுபட்டார் என்று செய்திகள் வந்தன. இப்போது கான்பூரிலும் அதே கதைதான்.

எனினும் பலத்த போலீஸ் பந்தோபஸ்துடன் திரு மேனன், ''சீனவுடன் தீர்வுகாணப் பொறுமையுடனிருங்கள்'' என்று பேசியிருக்கிறார்.

'பொறுமை' என்று அவர் பேசியது தான் தகராறு. ஏனெனில் அவர் பாதுகாப்பு மந்திரியாக இருந்தபோது மிகப் பொறுமையாக இருந்தார். 12,500 சதுர மைல் பிரதேசத்தைச் சீனன் கைப்பற்றியும் அவர் பொறுமையைக் கைவிடவில்லை. மக்களும் பொறுமையுடன் இருந்தார்கள். ஆனால் எதிரி என்ன செய்தான்? இவர் பொறுமை வரம்பற்றது, நமக்கு ஆபத்தே இல்லையென்று அக்டோபரில் மேலும் பாய்ந்தான். அப்போதும் திரு மேனனின் பொறுமை கலையவில்லை. ஆனால் மக்கள் பொறுமையை இழந்து சீனனை விரட்டுமுன் இவரை விரட்ட வேண்டும் என்று பதவியிலிருந்து இறக்கி விட்டார்கள்.

இப்போது திரு மேனன் அதே பொறுமையைப் பற்றிப் பேசினால் எப்படி இருக்கும்? கான்பூர் — லட்சுமணபுரி அமளிகளுக்கு இதுதான் காரணம்.

திரு மேனன் போகிற இடங்களில் எல்லாம் இந்தக் கதைதான் நடக்கிறது. இதனால் அமைதி கெடப் பாதுகாப்பு முயற்சிகள் பாதிக்கப்படுகின்றன. இந்த உண்மையை அவரும் அவரை அழைக்கும் பிரமுகர்களும் ஏன் உணரவில்லையோ, தெரியவில்லை.

ஃ ஃ ஃ

மொத்தம் 510 அங்கத்தினர்கள் கொண்ட பார்லிமெண்டில் 18 அங்கத்தினர்களே வந்திருந்ததால் 'கோரம்' இல்லாதபடி கூட்டம் ஒத்தி வைக்கப்பட்டது என்று டில்லிச் செய்தி ஒன்று கூறுகிறது. இந்தச் செய்தியைக் கேட்டவர்கள் 'இதென்ன கோரம்' என்பார்கள். ஆம், பாராளுமன்றத்தில் கோரமில்லாத காட்சி ஒரு கோரமான காட்சிதான். இதற்காகவா உங்களுக்கு ஓட்டுப் போட்டு எங்களுக்குப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்தோம் என்ற மக்களின் கோபக் குரல் பாராளுமன்ற அங்கத்தினர்கள் காதுகளுக்கு எட்டுமா?

ஃ ஃ ஃ

''குறைவாகப் பயணம் செய்யும் மந்திரிகளுக்குப் பரிசு கொடுக்க வேண்டும்'' என்று சென்னை சட்ட சபையில் ஒரு தி. மு. க. அங்கத்தினர் கேட்டிருக்கிறார். பேஷான யோசனை!

இது போல் குறைவாகப் பிரசங்கம் செய்யும் மந்திரிகளுக்கும் பரிசு வழங்கப்படும் என்று கூறலாம். ஏனெனில் அவசர காலத்தில் குறைவான பேச்சு இருப்பதும் நல்லது. நீளமாகப் பேச வேண்டுமென்று பலர் ஏதேதோ பேசி விடுகிறார்கள். இவர்கள் சாதாரணமானவர்களாக இருந்தால் கவலையில்லை. 'கனம்' ஆக இருந்து ரகசியங்களை வெளியிட்டு விட்டால் எதிரிக்கு அநுகூலமாகி விடுமல்லவா? ஆகவே, ''குறைந்த பயணம் — குறைந்த பேச்சு'' இரண்டுக்கும் சேர்த்தே 14 காரட்டில் செய்த பதக்கம் ஒன்று பரிசு தரலாம்.

# அமித லாப வரி அழிவுக்கு ஒரு வழி!

இந்த ஆண்டில் விதிக்கப்பட்டுள்ள புதிய வரிகளினால் பாதிக்கப்படாத வகுப்பினரே இல்லை. கிராம விவசாயி முதல், நகர்ப்புறத் தொழிலாளிவரையில், சம்பளதாரியர் முதல் தொழில் நிர்வாகஸ்தர் வரை எல்லாரும் மொரார்ஜியின் பாக்கு வெட்டியில் அகப்பட்டுத் தவிக்கப் போகிறார்கள். சென்ற இதழில் ஏழை விவசாயிகளும் நகர்ப் புறங்களில் மாதச் சம்பளம் பெறுவோரும் எப்படி இப் புதிய வரிகளால் பாதிக்கப்படுகிறார்கள் என்று பார்த்தோம்.

'பணக்காரர்கள் பொதுவாகத் தொழில் வர்க்கத்தினர் என்று மேலெழுந்தவாரியாகப் பாகுபாடு செய்து, தொழில்களை இவர்கள் பெருக்குகின்றனர் என்று வைத்துக் கொண்டு நிலைமையைக் கவனித்தால் 'அமித லாப வரி' என்ற மொரார்ஜி பூதம் இவர்களைக் கதிகலங்க அடித்துவிட்டது. தொழில் வர்க்கத்தினர் மீது மட்டுமின்றித் தொழில்கள் மீதே மொரார்ஜி தொடுத்த பாணம் இந்தப் புது வரி.

திரு மொரார்ஜியின் திட்டப்படி தொழிற் கம்பெனிகள் ஆறு சதம் லாபம் சம்பாதித்தால் போதும், அதற்கு மேல் உள்ள வற்றில் பாதியைச் சர்க்காருக்குக் கொடுத்து



விட வேண்டும். இந்த ஆறு சதவிகித லாபம் என்பது வல்லான் வகுத்த கோடு. மொரார்ஜி அவர்களின் சுயேச்சைக் கணக்கு. எவ்வித ஆதாரமும் இல்லாதது.

பாங்குகளிலிருந்து கடன் வாங்க வேண்டுமானால் எட்டு சதம், சில சமயங்களில் ஒன்பது சதம் வட்டி கொடுக்க வேண்டும். சர்க்காரே தங்கப் பத்திரங்களுக்கு ஆறரை சதம் வட்டி கொடுக்கிறது. தொழில் வர்க்கத்தினர் தங்கள் தேவைக்கு எழுப்பும் கடன்களுக்கு 9 சதம் வரை வட்டி கொடுக்க வேண்டியிருக்கிறது. சலுகை பெற்ற ''பிரிபரன்ஸ்'' பங்குகளுக்கு 9.3 ''டிவிடெண்டு'' உத்தரவாதமாகக் கொடுக்கப்படுகிறது. ஆனால்சாதாரண பங்குதாரர்கள் மட்டும் ஆறு சதத்துடன் திருப்தியடைய வேண்டும் என்பது ஏனோ?

கம்பெனிகளின் பங்குகளில் பணத்தைப் போட்டுச் சேமிப்புச் செய்பவர்களில் பெரும்பான்மையினர் மத்தியதர வகுப்பினரே. அதாவது மாதம் ரூ. 250லிருந்து 500 வரை வருமானம் உள்ளவர்கள். தங்கள் சேமிப்பிலிருந்து கம்பெனி பங்குகளை வாங்குகிறார்கள். அந்தப் பங்குகளுக்குக் கிடைக்கும் ''டிவிடெண்ட்'' அவர்களுக்கு ஒரு வருமான இனம். வாழ்க்கைச் செலவு உயர்ந்து அதைச் சரிக்கட்ட முடியாமல் தவிக்கும் போது, இந்த வகையில் கிடைக்கும் வருமானம் அவர்களுக்குக் கைகொடுத்து உதவுகிறது. அவசர காலங்களில் தங்கள் பங்குகளை(ஷேர்) விற்றுச் செலவுகளைச் சமாளிப்பார்கள்.

புதுத் தொழிலாக இருந்தால் நான்கு அல்லது ஐந்தாண்டுகளுக்கு எவ்வித வருமானமும் கிடைக்காது. பிறகுதான் டிவிடெண்டு எதிர்பார்க்கலாம். அப்படிக் கிடைக்கும் போது பங்குதாரர்கள் ஆறு சதவிகித டிவிடெண்டுடன் திருப்தியடைய வேண்டும் என்றால் தொழில்களின் தேவைக்கு மூலதனம் திரட்டுவது கஷ்டம். முடியாமலே போகும் என்று கம்பெனி நிர்வாகஸ்தர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள். இதை 'வெற்றுக் கூச்சல்' என்றோ, வீண் பீதி என்றோ தள்ளி விடுவது மதியீனமாகும்.

இதை ஒரு சிறு உதாரணத்தின் மூலம் விளக்கலாம். ஒரு ரூபாய் நிகர லாபத்தில் ஐம்பது நயா பைசே இப்போதுள்ள விதிப்படி தொழில் வரி மூலம் சர்க்கார் எடுத்துக் கொண்டு வருகிறது. மீதமுள்ள ஐம்பது நயா பைசாவில் இப்போது விதிக்கப்பட்டுள்ள அமித லாப வரி மூலம் 25 நயா பைசாவும், சில கம்பெனிகள் விஷயத்தில் முப்பது நயா பைசாவும் சர்க்கார் எடுத்துக் கொள்ளப் போகிறார்கள். ஆக மிச்சமிருப்பது 20 அல்லது 25 நயா பைசா. இதைப் பூராவாக டிவிடெண்ட் மூலம் பங்குதாரர்களுக்கு விநியோகிப்பதாக வைத்துக் கொண்டாலும், அவற்றிலிருந்து ஆறு அல்லது ஏழரை பைசா ''பங்குதாரர்கள் வரி'' என்று அரசாங்கம் எடுத்துக் கொண்டு விடுகிறது. இப்படி ஒரு ரூபாய் லாபத்தில் எழுபத்தாறிலிருந்து எண்பத்து எட்டரை நயா பைசா வீதம் சர்க்கார் எடுத்துக் கொண்டால், தொழில் எப்படி நடைபெறும்? தினசரி நடவடிக்கையே ஸ்தம்பித்துப் போகும் என்றால், அபிவிருத்தி, விஸ்தரிப்பு, புது முயற்சி நாட்டின் பாதுகாப்புக்கு உற்பத்திப் பணி இவையெல்லாம் எப்படி நடைபெறும்?

கம்பெனிகள் ஆண்டுதோறும் கிடைக்கும் லாபத்தில் ஒரு பகுதியைத் தொழிலிலேயே நிறுத்தி, அபிவிருத்திக்காகத் தேக்கி விடுகின்றன. இதன் மூலம் பாங்கிகளிடமிருந்து கடன் வாங்குவது குறைவதுடன், குறைந்த மூலதனத்தைக் கொண்டே தொழில் விஸ்தரிப்பு வேலை நடைபெறுகிறது. ஆறு சத விகிதத்துக்கு உபரியாக உள்ள லாபத்தில் பாதியை அரசாங்கத்துக்குக் கொடுத்து விட்டால், தொழில் அபிவிருத்திக்கு மட்டுமின்றி, நடைமுறைச் செலவுகளுக்கும்கூட பாங்கிகளிடமிருந்து கடன் வாங்க வேண்டிய நிலைமை பல கம்பெனிகளுக்கு ஏற்படும். இதன்மூலம் கம்பெனிகளின் பொருளாதாரம் சீர்கெடும் என்பது நிச்சயம். இந்த வரி போடத் துணிந்ததிலிருந்து அரசாங்கத்துக்குத் தொழில் எப்படி

நடக்கிறது என்பதைப் பற்றிய அடிப்படை அறிவுகூட இல்லை என்றே நினைக்கவேண்டும்.

இதனால் பாதிக்கப்படுபவர்கள் கம்பெனியை நிர்வகிக்கும் மானேஜிங் டைரக்டர்களோ, சம்பள ஊழியர்களோ அல்ல. அந்தந்த கம்பெனிகளின் பங்குகளில் முதலீடு செய்துள்ள பெரும்பான்மையான மத்தியதர வகுப்பினரே. இதை மக்களும் அரசாங்கமும் நன்றாகக் கவனத்தில் இருத்தி இந்த வரிகளின் விளைவுகளை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

திறமையான கம்பெனி நிர்வாகம் நடத்துபவர்களுக்கு திரு மொரார்ஜி தேசாய் அளிக்கும் தண்டனை இந்த அமித லாபவரி. ஏனெனில் இந்த வரியைச் செலுத்த வேண்டியவர் தனியார்த் துறைத் தொழில்கள் மட்டும் தான் என்பதை இங்கே கவனிக்க வேண்டும். அவர்களுக்குத்தான் ஆறு சத வீதத்துக்கு மேல் லாபம் சம்பாதிக்கும்திறமை உண்டு. சர்க்கார்த் துறைத் தொழில்கள் —ஏதோ ஒன்றிரண்டைத் தவிர — பெரும்பான்மையும் லாபம் என்ற நிலைக்கே வரவில்லை. ஆறு சதவீதம் லாபம் சம்பாதித்த பிறகு தான் அமித லாப வரி பாதிக்குமாகையால், சுமார் 700 கோடி ரூபாய்வரை முதலீடு செய்து ஆரம்பிக்கப்பட்டுள்ள பற்பல சர்க்கார்த் தொழில்களுக்கு மொரார்ஜி தேசாயின் வரியைப் பற்றிய கவலையே கொஞ்சமும் இல்லை. சர்க்கார் தொழில்களின் திறமைக் குறைவை மூடி மறைக்க இப்படி ஒரு ஏற்பாடோ என்றுகூட எண்ண இடமிருக்கிறது.

தொழில் வளம் பெறுக வேண்டும் என்பதற்காகவும், இப் புது வரி சிந்தனையற்று விதிக்கப்பட்டுள்ளது என்பதற்காகவும், தொழிலதிபர்கள் நிதி அமைச்சரைப் பேட்டி கண்டு நயமாகவும் இதமாகவும், வெவ்வேறு யோசனைகளைத் தெரிவித்திருக்கின்றனர். லாப விகிதத்தைக் குறைந்தபட்சம் ஆறு சத வீதத்திலிருந்து பத்து அல்லது பன்னிரண்டு சதவீதத்துக்காவது உயர்த்த வேண்டும் என்று தொழில் நிர்வாகத்தினர் கேட்கின்றனர். இதைத் திரு மொரார்ஜி தேசாய் கவனிப்பாரோ, மாட்டாரோ நிச்சயமாகச் சொல்ல முடியாது. அசட்டுப் பிடிவாதத்துக்குப் பெயர் பெற்றவர் திரு தேசாய்.

சீனப் படையெடுப்பைக் காரணம் காட்டிப் போடப்படும் புதிய வரிகள் மூலம் கிடைக்கும் நிதி மட்டும் பாதுகாப்பைப் பலப்படுத்தப் போதுமானவையா என்று கேட்டால் அதுவும் இல்லை. வரி போட்டே யுத்தத்தை நடத்துவதென்பது சரித்திரம் அறியாதது. இவ்வரிகளால் மக்களின் உற்சாகம் குன்றும். அந்நியனுக்கு விரோதமாக மக்களின் சக்தியை ஒன்றுதிரட்டி எதிர்ப்பை உருவாக்குவது மேலும் கடினமாகும்.

ஆக்கிரமிப்பைச் சமாளிக்க வேறு ஒரு சுலபமான வழி உள்ளது. அது நமது நண்பர்களாக விளங்கி வரும் நாடுகளிடம் உதவியைக் கோரிப் பெறுவது. அத்துடன் அவசியமில்லாத திட்ட இனங்களைக் குறைத்தும் பண விரயத்தைத் தடுத்தும் வரிச் சுமையைக் குறைத்தும் மக்களின் நல்வாழ்வுக்கு வழி செய்ய வேண்டும். ஆனால் இவற்றைக் காங்கிரஸ் அரசாங்கத்திடம் எதிர்பார்க்க முடியாது.

— எம். எஸ். சிவஸ்வாமி

# உயிர்ப் பிச்சை

## பி.வி.ஆர்.




தீர்த்தத்துக்குப் போன குருக்களையும் பரிவாரங்களையும் இன்னும் காணோம். ஊரே அல்லோலகல்லோலப்பட்டுக் கொண்டிருந்தது. கிராமத்தின் பெரியவர்கள் முகூர்த்தம் தவறப் போகிறதே என்று அங்குமிங்கும் ஓடி அங்கலாய்த்தார்கள். கோவிலுக்கு முன்னும் தோரண அலங்காரங்கள் அமங்கலமாகக் காட்சியளித்தன. துவஜ ஸ்தம்பத்தின் அருகே நிறுத்திக் கட்டப்பட்டிருந்த இரு வாழைகளில் ஒரு வாழை தலை சாய்ந்து நின்றது. நாயனக்காரன் செய்வதறியாது தன் வாத்தியத்தை நிறுத்திவிட்டான். முகூர்த்த நேரம் புயல்வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது. சூரியனின் கிரணங்கள் கர்ப்பக் கிரகத்தினுள் பாயலாயின.

இன்றைக்கு விச்வேசரருக்கு எப்படிக் கும்பாபிஷேகம் நடக்கப் போகிறது?

இந்தக் கேள்வி எல்லாருடைய மனத்திலும் எழுந்தாலும் ஒருவரால்கூடப் பதில் சொல்ல முடியவில்லை. மணி ஏழு அடித்து விட்டது. ஏழரைக்குள் தீர்த்தம் வந்தால்தானே எட்டரைக்குள் கும்பாபிஷேகத்தை ஆரம்பிக்கலாம்?

கிராமத்தின் மீது ஏதாவது...? இல்லை, தெய்வத்துக்கே பிடிக்கவில்லையா இந்தக் கும்பாபிஷேகம்?

இந்த அமர்க்களத்தில் குருக்களுடன் அதிகாலையிலேயே சென்ற பரிவாரத்திலிருந்து இரண்டு மூன்று பேர் பரபரக்க ஓடி வந்தனர்.

''யானை நகராமல் அடம் பிடிக்கிறது. குருக்களையும் இறங்கவிட மாட்டேன் என்கிறது. ஆற்றுக்கும் கரைக்குமாய் அலைகிறது.''

இந்தச் செய்தி ஊரைக் கலக்கியது. ஊரார் குருக்களுக்காகக் கண்ணீர் விட்டார்களோ என்னவோ, கும்பாபிஷேகம் தடைபடுகிறதே, கஷ்டப்பட்டு வசூல் செய்த பணம் விரயமாகிறதே என ஓலமிட்டார்கள்.

''மாவுத்தன் என்ன செய்கிறான்?'' என்று ஒருவர் கேட்டார் நிதானமாக.

''அவன் தான் கத்த வித்தையெல்லாம் பிரயோகிச்சாச்சு..... ஒண்ணும் பிரயோசனமில்லை. குருக்கள் பாவம், வேர்த்து வெலவெலத்து ஈசுவரா ஈசுவரான்னு ஓலமிடுகிறார்.''

கூட்டத்தில் ஒருவருக்குக் கோபம் வந்தது.

''அவரை அந்த யானை இன்னும் கீழே உதறிக் குதறி எடுத்து மிதிக்காதது புண்ணியம்.... ஒரு சுமங்கலியின் கண்ணீருக்கு... சும்மா விடுமா?''

''ஓய், அதை இங்கே ஏன் பேசறீர்? ஆக வேண்டிய காரியத்தைப் பாரும். போலீசுக்குச் சொல்லி அனுப்பும்....''

''ஆனையைக் கொல்றது மகா பாவம். அதுவும் இன்னிக்கு....'' கூட்டத்தில் ஒருவன் யாரும் அவன் யோசனையைக் கேட்கு முன்னேயே தொடங்கினான்.

''யாரடா அவன் புத்திசாலி.... நீ போய் யானையின் காலைப் பிடித்துக் கெஞ்சேன்.....''

இன்றைக்குக் கும்பாபிஷேகம் இல்லை என்று தீர்மானமாகி விட்டது.

ஃ ஃ ஃ

செய்தியைக் கேட்ட குஞ்சு அலறினாள். உடல் 'படபடத்தது. எடுத்த பாத்திரத்தை வைக்காமல் தூக்கி ஒரு மூலையில் எறிந்துவிட்டு



ஆற்றங்கரையை நோக்கி ஓடினாள். வீட்டில் வெறும் அடுப்பு எரிவதோ, தன் நெற்றியில் குங்குமம் இருக்கிறதா என்ற நினைப்போ, உடலைப் புடவைத் தலைப்பு நன்றாகமூடியிருக்கிறதா என்ற உணர்வோ ஒன்றும் அந்த வேளையில் தோன்றவில்லை.

தியாகராஜ குருக்கள் அன்று விடியும் முன்பே ஆற்றங் கரைக்குக் கிளம்பினார். பிதிரார்ஜிதமாகக் கிடைத்த பதவிக்கு அவர் வந்த பிறகு முதன் முதலாக நடக்கும் கும்பாபிஷேகம். அவர்தான் தீர்த்தமாடி நதியை ஆராதித்து, நீரைப் பொற்குடத்தில் ஏந்தி யானையின் மீதேறிக் கோவிலுக்கு வரவேண்டும். அன்றைய விழாவில் தெய்வத்துக்கு அடுத்தபடி முக்கியம் வாய்ந்தவர் அவரே.

ஆற்றங்கரைக்குப் போகும்போது, பிள்ளையார் தெருவைத் தாண்டும்போது ஒரு நிமிடம் சாம்பசிவ தீட்சிதர் வீட்டுக்கு முன்னால் நின்றார். அவருடைய கால்கள் தாமாக நின்றன என்றுகூடச் சொல்லலாம். இந்தக் கும்பாபிஷேகம் இல்லாவிட்டால் மங்களத்துக்கும் அவருக்கும் கல்யாணமாகியிருக்கும், தன் ஸ்தானத்தை வந்தவளுக்கு ஒதுக்கிக் கொடுத்து விட்டு, குஞ்சு வெளியேறியிருப்பாள். பாழாய்ப் போன ஜோசியர் இன்னும் மூன்று மாதங்களுக்கு அவர் கல்யாணத்தைப் பற்றி நினைக்கக் கூடாது என்று சொல்லி விட்டார்.

குருக்கள் மேலே நடந்தார். சில நிமிஷங்களுக்குக் கும்பாபிஷேகத்தைக்கூட மனம் மறந்து விட்டது. அவருடைய கண்களுக்குப் பிடித்த மங்களமும் பத்து வருஷங்களாக மனம் வெறுத்த குஞ்சுவும் இரு நிழல்களாக அவருடன் நடந்தார்கள். உறவு முறை அற்று விடக் கூடாதே என்று, பலவந்தமாக அவரை மணையில் உட்காரவைத்துக் குஞ்சுவை மனைவியாக்கி விட்டார் அவருடைய தகப்பனார். அவர் உயிரோடு இருக்கிற வரைக்கும் தியாகராஜ குருக்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. இரண்டு வருஷங்களுக்கு முன்னால் அவர் இறந்து போனது ஒரு விதத்தில் திருப்தியாகக்கூட இருந்தது.

இது காலம் வரையில் மௌனமாகத் தம் வெறுப்பைக் கொட்டி வந்த குருக்கள் இப்போது வெளிப்படையாகவே குஞ்சுவைச் சித்திரவதை செய்யலானார். எதைச் சொன்னாலும் குற்றம்; எதை நினைத்தாலும் குற்றம். நினைத்துச் சொன்னதைச் செய்து விட்டால் கேட்கவே வேண்டாம். அஷ்டோத்திரமும் சகஸ்ரநாமமும்தான். சில நாட்கள் கையும் நீண்டு விடும். குஞ்சுவுக்குக் கண்ணீர்தான் துணை. ''என்னை அடிக்கிறதாலே உங்களுக்குத் திருப்தி கிடைச்சால் நன்னா அடியுங்கோ! எனக்குப் பெருமைதான்'' என்பாள் அவள்.

முப்பது வயதில் தியாகராஜ குருக்கள் காதுகளில் வைரக் கடுக்கன்கள் மின்ன, நெற்றியில் திருநீறு பளிச்சிட, உருண்ட திரண்ட கைகால்களுடன் மதமத வென்று வளர்ந்த உடற்கட்டோடு நடந்து வருவதைப் பார்த்தால் எந்தக் கண்களும் ஒரு நிமிடம் இமைக்க மறந்து விடும். அவருடைய பொன்னிற மேனியின் நிழல்கூடக் கறுப்பு இல்லை என்று பார்ப்பவர்கள் அசந்து போவார்கள்.

இரண்டாம் கல்யாணம் என்ற எண்ணமே, மங்களம் அவருள் குளத்தில் விழுந்த சிறு கல் சலனம் எழுப்புவது போல, சலனம் எழுப்பியிருந்துதான்.

## இராணுவ இரகசியம்!

ஒரு காட்டுப் பகுதியில் உள்ள ஒரு ரயில்வே ஸ்டேஷனில் ஒரு நீண்ட வண்டித் தொடர் புறப்படுவதற்குத் தயாராக நின்று கொண்டிருந்தது.

ஒரு ராணுவ அதிகாரி மிடுக்குடன் வந்து, ''படையினர் யாவரும் புறப் படத் தயாரா யிருங்கள்!'' என்று கட்டளையிட்டார். பிறகு ஸ்டேஷன் மாஸ்டரைப் பார்த்து,''நம் ராணுவத் தினர் யாவரும் ஏறிக் கொண்டதும் வண்டி உடனே புறப்பட வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்துவிட்டீர் களா?'' என்று கேட் டார்.

ஸ்டேஷன் மாஸ் டர் மிகவும் அடக்க மாக ''எந்த ஊருக் குப் போக வேண் டும்?'' என்று கேட் டார்.

அடுத்த நிமிஷம் ராணுவ அதிகாரிக் குக் கோபம் மூக்குக்குமேல் வந்து விட் டது. மீசை துடித்தது. ''அதை நீர் எப்படிக் கேட்கலாம்? இது ஒரு பெரிய ராணுவ ரகசியமாயிற்றே! நீர் அதைப் பற்றிக் கேட்பதும் குற்றம். நான் சொல்வதும் குற்றம்....!'' என்று எரிந்து விழுந்தார்.

பிறகு ஸ்டேஷன் மாஸ்டர் இன்னும் கொஞ்சம் குழைவுடன், ''...ஸார், மன்னிக்க வேண்டும். ரயில்வண்டித் தொடரில் இன்னும் இஞ்ஜின்இணைக்கப் படவில்லை. எந்தப் பக்கம் இஞ்ஜினை இணைக்க வேண்டும் என்பதைத் தெரி வித்தால் போதுமானது....'' என்று கூறினார்.

ஒரு நாள் ஜரைப் புடவையில் அவள் குளத்தி லிருந்து வீடு திரும்புகையில் எதிர்ப்பட்டாள். அவளது பேரெழில் அவர் மதியைக் கிறங்க வைத்தது. அவர் மனத்தில் அவள் பொங்கப் பொங்க, குஞ்சுவின் மீது வெறுப்பு மலை யாக வளர்ந்தது.

இரண்டாம் கலியாணத்துக்குச் சட்டம் இடம் கொடுக்காது என்று அவருக்குத் தெரியும். குஞ்சு எளிதில் தன் ஸ்தானத்தை விட்டுக் கொடுக்க மாட்டாள்.

நூற்றுக்கணக்கான பக்த நெஞ்சுகளைப் புரிந்து கொண்ட அவருக்குக் குஞ்சுவையா வழிக்குக் கொண்டு வரத்தெரியாது? குழந்தை யில்லாத வீட்டில் குழந்தை பிறக்க வேண்டு மானால் குஞ்சு இன்னொருத்திக்குத் தன் இடத் தைக் காலி செய்து கொடுக்க வேண்டும் என்று நெகிழ்ந்தார். வம்சம் அவருடன் நின்று விட்டால், ஏழு தலை முறையாகக் கிடைத்து வரும் பதவியும் பெருமையும் மறைந்து விடும் என்று அழுதார்.

ஆனால் எதற்கும் குஞ்சு விட்டுக் கொடுக்க வில்லை. அவருடைய நெகிழ்ச்சியையும் கண் ணீரையும்விட, ரௌத்ராகாரமே மேல் என்று எண்ணினாள்.

கடைசியாகச் சட்டத்தை மீறி விடுகிறது என்று அவர் தீர்மானித்தார். புகார் செய் தால் குஞ்சுவோ, அவளுடைய உறவுக்காரர் களோ செய்யணும். அவளுக்கு 'நான் உறவு' என்று கொண்டாடி வந்து, கோர்ட்டு ஏறிப் பணத்தை வீசி எறியக் கூடிய உறவினர் யாரு மில்லை. குஞ்சு கணவனைத் தெய்வமாக மதிப்பவள். அவரைக் கைதிக் கூண்டில் பார்த்தாலே உயிரிழந்து விடுவாள். அவளா தானாகப் போய்ப் புகார் செய்வாள்?

ஆக, பெண் வீட்டாருக்கு — சாம்பசிவ தீட்சிதருக்கு — தாமாகவே பணம் கொடுத்து, அவருடைய ஏழைமையைத் தமக்குச் சாதக மாக்கிக் கொண்டு நாள் பார்க்க ஏற்பாடு செய்தார். தாம் பெற்ற ஆறு பெண்களில் ஒருத்திக்காவது கலியாணம் ஆகிறதே என்ற திருப்தியில் பணத்தைப் பெற்று, தம் சில்ல றைக் கடன்களை யெல்லாம் தீர்த்துக் கொண் டார் சாம்பசிவ தீட்சிதர்.

ஆனால் ஜோஸ்யர் குறுக்கே நின்றார்; கும்பாபிஷேகமும் குறுக்கே நின்றது.

அதிகாலையின் குளிர்காற்று, பழகிப்போன குருக்களுக்கு இதமாக இருந்தது. ''கிசுவேக வரா!'' என்று தண்ணீரில் மூழ்கி மூழ்கி எழுந்தார். கூட வந்த பரிவாரமும் ஸ்நான மாகிக் கரையேறி விட்டார்கள். மந்திர உச்சாடனத்துடன் குருக்கள் பொற்குடத்தில் நீர் எடுத்துக் கரையேறினார்.

பட்டு சோமன் உடுத்தி, பட்டை பட்டை யாக உடலெல்லாம் திருநீறு அணிந்து, நெற்றி யில் விபூதிக்கு நடுவே, குங்குமத்தை வட்ட வடிவமாக இட்டுக் கொண்டு, ''டேய், பிச்சாமி! சரியா இருக்கா பாரு....'' என்று ஒருவனைக் கேட்கவும், யானையின் மணியோசை ஒலிக்கவும் சரியாக இருந்தது.

கிழக்கு வெளுத்த வெளிச்சத்தில், ''குருக் களே பிரமாதம்.... மதுரை மீனாட்சி கலி யாண மண்டபத்திலே நீர் இருந்தவர். அந்த தேஜஸ் மனுஷ ரூபத்திலே நன்னாத் தெரிய றது இந்த இருட்டிலேகூட....'' என்று பிச்சாமி சிரித்தான்.

''அதுதான் ஆகப் போகிறதே இன்னொரு தடவை!'' என்றான் மாது.

''அப்புறம் மங்களம் போய் ஒரு சிங்காரி வருவாள்....''

''டேய், குருக்களை என்ன அப்படி மட்ட மாய்ப் பேசறே.... அதுவும் இன்னிக்கு.....'' என்று சிரித்த பிச்சாமி, ''எனக்கு ஒரு சந் தேகம்'' என்றான்.

''என்னடா?'' என்று கேட்டுக் கொண்டே குருக்கள் பட்டு அங்கவஸ்திரத்தை நாலுக் காக இடுப்பில் கட்டினார்.

''ரெண்டு பெண்டாட்டி செத்து மூணும் கலியாணம் பண்ணினால்தான் வாழை மரத் துக்கு மூணும் தாலி கட்டணுமா இல்லே, உசிரோடு இருக்கிறப்போ பண்ணிக்கிறதானு லும் வாழை மரம் வேணுமா?''

குருக்கள் எப்படிப் பார்த்தாரோ, இச் சாமியை இரண்டும் கெட்டான் வெளிச்சத்தில் தெரியவில்லை.

**யா**னைப் பாகன் தாமோதரன் உத்தர விட, யானை மண்டியிட்டது.

குருக்கள் லாகவமாக முன்னங் காலின் மேல் நின்று, காதை இழுத்துப் பிடித்து ஏறினார். ஏறி உட்கார்ந்தபோது தம் முன்னால் ஒரு பிரும்மாண்டமான நிலைக் கண்ணாடியும் வெளிச்சமும் இல்லையே என்ற துக்கம் பிறந்தது. அடுத்த கணமே, இப்போது மங்களம் அவர் முன்னால் யானை மீது....

இச்சாமி, ''தாமோதரா! புறப்படலாம்!'' என்றான்.

கரையை விட்டு யானை நகரவில்லை. திடீரென்று அதற்கு என்ன வந்து விட்டது? ஆணி அடித்தாற்போல் நின்ற அதைத் தாமோதரன் மிரட்டினான். அங்குசத்தால் காதுகளுக்குக் கீழேயும் மேலேயும் குத்தினான். அது நதியில் இறங்கியது. அதைக் கெஞ்சினான். கரைக்கு ஏறியதே தவிர, மேலே நகரவில்லை.

மண்டையை அது வேகமாக ஆட்டி ஆட்டி, துதிக்கையைச் சுழற்ற ஆரம்பித்தது. ஜமுக்காளத்தைச் சுற்றிக் கட்டியிருந்த கயிற்றில் இரு கால்களையும் மாட்டி உட்கார்ந்திருந்த குருக்கள் — எல்லாம் சரியாகி விடும் என்று இது வரையில் திருப்திப்பட்ட குருக்கள் — திடீரென்று பயப்படலானார். அந்த யானையின்மேல் இது வரையில் அவர் ஏறினதில்லை.

அவருடைய பயத்தில் கைகள் உதற, பொற்குடம் தவறி உருண்டு கீழே ஒரு பாறையின் மேல் விழுந்தது.

பரிவாரம் சிறிது நேரம் தூரத்தே நின்று கொண்டு தவித்தது. இரண்டு மைல்களுக்கு அப்பால் உள்ள ஊருக்கு விஷயத்தை உடனேயே தெரியப்படுத்துவதா, வேண்டாமா என்று தெரிய வில்லை. பலர் பல யோசனைகளைச் சொன்னார்கள். சூரியன் உதித்துப் பத்து நிமிடங்களாகி விட்டன.

நதிக் கரையில் யானையும் அதனுடன் போராடும் தாமோதரனும், அதன் மேல் உட்கார்ந்து கீழே குதிக்க முடியாமல் தவிக்கும் குருக்களும்—காண முடியாத காட்சி!

யானை நதியில் இறங்கிய போது குதித்து விடலாம் என்று முன்னேற்பாடாக, கயிற்றிலே பின்னியிருந்த கால்களை மெதுவாக எடுக்க முற்பட்டார் குருக்கள். அடுத்தகணம் அதன் துதிக்கை முழங்கால்களில் வந்து அடித்தது.

யானை இன்னும் பிரளவில்லை. மத நீர் உற்பத்தியாகி விட்டது. இன்னும் கொஞ்ச நேரம் போனால் அது அவரையும் தூக்கிக் கொண்டு கண்மூடித்தனமாக ஓடும். ஓடும் போது, கால்கள் அந்த வேகத்தில் தவறும். அவர் விழுந்து விடுவார். யானை அவரைத் துவையலாக்கி விடும்.

குருக்கள் முன், சூரியனின் பிரகாசத்தில், இருள் கவிந்தது. அவருடைய உடல் நடுங்கி வியர்த்தது. ஈசுவரன் அவருக்கு முப்பது வயதைத்தான் அளித்திருக்கிறானா?

அவர் இந்த மாதிரி சாவைப் பெற என்ன பாபம் செய்தார்? எந்தப் பிராயச்சித்தம் செய்தால் இதிலிருந்து மீளுவார்?

## நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது

எகிப்து நாட்டின ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்க வேண்டிய தினம் வந்த போது குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளும் ஆயா பாத்தியா ரொம்பவும் பரபரப்படைந்து போனாள். அன்றைய தினம் லீவு எடுத்துக் கொண்டு ஓட்டுப்போடுவதற்காகத் தன் தொகுதிக்குச் சென்றாள். தேர்தல் முடிவு பின்னர் வெளியாகியது. கர்னல்நாஸர் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது விகிதம் வோட்டுக்கள் பெற்று ஜனநாயகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்று அறிவிக்கப்பட்டதும் பாத்தியா அடைந்த சந்தோஷத்துக்கு அளவில்லை. ஆனால் ஏதோ ஒரு புதிரை விடுவிக்க முடியாமல் கலக்கம் அடைந்தவள் போலவும் அவள் காணப்பட்டாள். என் கணவரை அணுகி அவள் ஒரு கேள்வி கேட்டதும் அவள் மனச் சங்கடம் என்னவென்று புரிந்தது. ''மற்ற நாடுகளில் தேர்தலில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் அபேட்சகர்களாக இருந்து கொண்டு போட்டியிடுவார்களாமே, வாஸ்தவம்தானா?'' என்பதுதான் அவள் கேள்வி!



**(ஜாக்குலின் கரால் எழுதிய 'காக்டெய்ல்ஸ் அண்டு காமல்ஸ்' என்ற நூலிலிருந்து)**

அவர் கண்கள் இருண்டன. தாம் மூர்ச்சையாகிக் கொண்டு வருகிறோம் என்ற பிரமை அவருக்குப் பிறந்தது.

அவருடைய பழைய நாட்கள் அவரைச் சுற்றிச் சுற்றி வந்தன. இளம் பருவத்தின் திமிரில் அவர் செய்த காரியங்கள் எல்லாம் நினைவுக்கு வந்தன.

குஞ்சுவை அவர் எப்படியெல்லாம் அலைக் கழிய வைத்திருக்கிறார்?

ஒரு நாள் சாதம் சரியாக வேகவில்லை; அவர் என்ன செய்தார்? சாதம் இருந்த வெண்கலப் பாத்திரத்தை அவளுடைய மண்டை மீது எறிந்தார். அன்று அவளுடைய நெற்றியில் கசிந்த இரத்தத்தையாவது அவர் துடைத்தாரா?

இன்னொரு நாள் அவள் ஈர விறகுடன் போராடிக் கொண்டிருக்கையில் சமையல் ஆக வில்லை என்ற காரணம் காட்டி, விறகாலே முழங்காலில் அடித்து, பதினைந்து நாட்கள் படுக்கையோடு படுக்கையாகக் கிடந்தாளே!

எல்லாவற்றுக்கும் மேலாக அவர் அவளையே அவளுடைய பதவியிலிருந்து ஒதுக்கி,

இன்னொருத்தியை அல்லவா கொண்டு வரப் பார்த்து விட்டார்? '

பத்து வருஷங்களில் அவளை அவர் உயிரோடு கொன்றதற்கு, இன்றைக்குத் தெய்வம் பழி வாங்குகிறதா? தெய்வம் நின்று கொல்லும் என்கிறார்களே, அது இதுதானா?

'ஐயோ, யானை மீண்டும் நதியில் இறங்குகிறதே? விரைவாக ஓடுகிறதே.... ஐயோ! இந்த இடத்தில் பெரிய மடுவாச்சே! இங்கே நிற்கிறதே... ஈசுவரா...சம்போ மகாதேவா! என்னைக் காப்பாத்த மாட்டியா?'

தாமோதரன் கத்தினான். கூட்டம் பெருகி விட்டது. பிச்சாமி இரண்டு மூன்று பேர்களை ஊருக்கு விரட்டினான்.

திடீரென்று யானை திரும்பியது. முன்னங் கால்கள் இரண்டும் கரையில் இருந்தன.

மதம் பிடித்து விட்டது. சந்தேகம் இல்லை. தாமோதரன் அருகே வந்த போது, பிளிறிட்ட அது துதிக்கையை ஆவேசமாக வீசி முன்னேறியது.

தாமோதரன் அங்குசத்தைத் தூக்கி எறிந்து விட்டுத் தலைகால் தெரியாமல் ஓடினான்.

'இனி யாரும் என்னை அசைக்க முடியாது!' என்று வெறியுடன் அது நின்ற போது —

யானையின் மேல் மூர்ச்சையாகிக்கொண்டு வரும் கணவனைப் பார்த்துப் புலம்பிக்கொண்டு குஞ்சு ஓடி வந்தாள்.

ஏதோ அவளுள் பிறந்துவிட்ட நம்பிக்கையும் தைரியமும் அவளை முன்னால் உந்தின. ஆவேசமாக நிற்கும் பிரும்மாண்டமான யானையைவிட, அதன் மேல் இருந்தவர்தான் பிரும்மாண்டமாகத் தோன்றினார் அவளுக்கு.

அவளைத் தடுத்து நிறுத்த ஒருவருக்குமே இயலவில்லை. பயத்தில் நா ஒலி கிளம்பவில்லை.

அவள் யானையின் அருகே வந்து விட்டாள்.

''விச்வேச்வரா! அவரை விட்டுவிடு.... உயிர்ப் பிச்சை கொடு. தெய்வமே...!''

அடுத்தகணம், பிரும்மாண்டமான கயிறு ஒன்று அவள் இடையைப் பற்றியது. அவள் அக்கணத்தில் தன் நினைவிழந்தாள். தான் ஆகாய மூலம் பறப்பதையும் உணரவில்லை.

நீரில் வீழ்ந்த அவளைப் பலர் சேர்ந்து கரையில் போட்டார்கள். கால்மணி நேரத்துக்குப் பிறகு கண்களைத் திறந்த போது, ''அவர் எங்கே?'' என்ற கேள்விதான் அவள் உதடுகளில் தவழ்ந்தது.

''இதோ, இருக்கேன் குஞ்சு!''

அவள், தலைமாட்டில் இருந்த குருக்களைத் தலையை உயர்த்திப் பார்த்தாள். ''எப்படிப் பிழைத்தீர்கள்?''. என்ற கேள்வி அப்பார்வையில் பிரதிபலித்தது.

''உன்னை அது இழுத்துத் தூக்கின போது, நான் திடீரென்று ஆத்துலே குதிச்சுட்டேன். நல்ல வேளை உன்னைத் தண்ணீரிலேதான் வீசி எறிந்தது.....''

''அது போயிடுத்தா ?''

''நான் அதன் மேலே இல்லேன்னு தெரிஞ்சுடுத்து போலிருக்கு.... கரையோரமா வேகமா ஓட ஆரம்பிச்சுட்டது.... இன்னிக்குப் பிழைத்தது புனர் ஜென்மம்....''

''இனி இந்த ஜன்மத்துக்கு அந்த யானை கண் முன்னாலே குருக்கள் படக்கூடாது!'' என்று பிச்சாமி சிரித்தான்.

''வா, வீட்டுக்குப் போகலாம்'' என்று குருக்கள் குஞ்சுவைப் பிடித்துக்கொண்டு மெதுவாக நடந்தார்.

அவர் செய்த பாவத்துக்கு யார் பிராயச்சித்தம் செய்தார்கள்? பாபம் செய்த அவரா? செய்யப்பட்ட அவளா? கேள்விகள் வழி நெடுக அவரைத் துளைத்தன.

# அன்னை அருள் பெற ஆராதனை

**சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்**

ஜகன்மாதாவான ஸ்ரீ புவனேசுவரி மணித்வீபம் என்றும், ஸர்வலோகம் என்றும் வழங்கப்படும் உலகில் வசிக்கிறாள். இந்த உலகமானது புவனேசுவரி தேவியால் ப்ரம்ம லோகத்திற்கும் மேலே மனத்தினால் அமைக்கப்பட்டது. அந்த மணித்வீபத்தைச் சுற்றி அமிருத மயமான ஸமுத்திரம் உள்ளது. அதன் அலைகள் நித்தியம் மணித்வீபத்தைத் தொட்டு விளையாடுகின்றன. மணித்வீபத்தில் உள்ள சங்க நிதி, பதும நிதி இரண்டுக்கும் நடுவில் புவனேசுவரி நான்கு கைகளுடன் விளங்குகிறாள். இம்மாதிரி புவனேசுவரியைத் தியானித்தால் தீங்குகள் நீங்கும். உலகத்தைக் காக்கும் நிலையில் உள்ள தேவிக்கே புவனேசுவரி எனப் பெயர். இந்தத் தாயே உலகுக்கு யுத்தம் முதலிய கஷ்டங்கள் ஏற்படும்போது சத்துருக்களை அழிக்கிறாள். அந்த நிலையில் ஸ்ரீ சண்டி என்றும், ஸ்ரீ துர்கா பரமேசுவரி என்றும் அவளை சாஸ்திரங்கள் அழைக்கின்றன.

இந்தத் தேவியின் அருளை உலகெல்லாம் பெறுவதற்காக ஸ்ரீ ஸஹஸ்ர சண்டி மஹா யாகத்தை 28—5—63ல் ஆரம்பித்து 2—6—63ல் பூர்த்தியாகும்படி புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் ஸ்ரீ புவனேசுவரி அம்பாளின் சந்நிதியில் ஸ்ரீ சாந்தானந்தஸ்வாமிகள் என்னும் பெரியோர்களாகிய அவதூத சந்நியாஸிகள் நடத்தப் போகிறார்கள்.

பத்து அக்னி குண்டங்களும், முப்பது கலசங்களும், பத்து நவாக்ஷரீ யந்திரங்களும் நிறுவப்பட்டு, நூற்றுப் பத்து தேவி உபாஸகர்களும், சதுர்வேத பாராயணத்துக்காக நூறு வேத வித்துக்களும் முறைப்படி வரிக்கப்பட்டு லக்ஷக்கணக்கான ஜப ஹோமங்கள் ஆறு தினங்கள் நடத்தப்படும். பதினாயிரக் கணக்கான புஷ்பார்ச்சனைகளும், பிரதி தினமும் பல்லாயிரக் கணக்கானவர்களுக்கு அன்னதானமும் நடக்கவிருக்கின்றன. இந்த ஸஹஸ்ர சண்டி மகா யாகத்தால் துக்கங்கள், பயங்கள் யாவும் அழிந்து விடும். வைசூரி, பஞ்சம், வியாதி முதலிய மிகப் பெரிய துன்பங்கள் நீங்கி விடும் என்கிறது மந்திர சாஸ்திரம்.

ஸ்ரீ அம்பாள் எங்கும் அன்பைப் பரவச் செய்வாள். அவள் உலகிற்கெல்லாம் தாய். மக்களின் குறைகளைத் தாய்தான் நீக்குவாள். இப்படிப்பட்ட தெய்வத்தின் அருளை அடைய நடத்தப்படும் ஸஹஸ்ர சண்டி மஹா யாகத்துக்கு ரூ. 80,000 செலவாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. உத்தம தபஸ்வி ஒருவர் நடத்தும் இந்த ஆராதனைக்குத் தங்களால் இயன்ற திரவிய சகாயம் செய்து புண்ணியத்தை ஒவ்வொருவரும் அடைய வேண்டும். ஸ்ரீ அம்பாளுடைய அருளும் இந்த மஹா யாகத்தின் பயனும், நம்மையும், நமது குடும்பத்தையும் நிச்சயம் ரட்சிக்கும். ஸஹஸ்ர சண்டிக்குப் பொருள் உதவி செய்ய வேண்டிய விலாசம்:
**ஸ்ரீ சாந்தானந்தஸ்வாமிகள் அதிஷ்டானம், புவனேசுவரி நகர், புதுக்கோட்டை.**

---

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளாகிய ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் சமீபத்தில் புதுக்கோட்டையில் முகாமிட்டிருந்தபோது அங்குள்ள டி. வி. எஸ். கிளை காரியாலயத்தினர் அற்புதமான முறையில் திருவீதி உலா நடத்திவைத்து ஸ்ரீ ஆசாரியர்களைத் தங்களது அலுவலகத்தில் வரவேற்று வந்தனம் செய்தனர். ஆசாரியர்களுக்குப் பக்கத்தில் இருப்பவர்தான் ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள்.



# இன்று ஒரு சபதம் செய்வோம் எந்த நாளும் காப்போம்

ஆக்கிரமிப்பாளரை விரட்டி அடிப்போம எனற நமமுடைய சபதத்தை மீண்டும் இன்று உறுதிப் படுத்திக்கொள்வோம். விழிப்புடனும. உறுதியுடனும் ஆயுத்தங்கள் செய்வோம். இப்பொழுதே வேண்டியதை செய்வோம். தேசீய சேவைப் பணியில் சேவை புரிய முன்வருவோம் ● வீண் செலவுகளைக் குறைத்துக் கொள்வோம ● உணவும் உடையும மதிப்பிட முடியாத மதிப்பு வாய்ந்தது. ஓரளவும் வீணுககவேண்டாம ● காலமும், நேரமும்கூட மிக முக்கியம். ஒரு நிமிஷமும் சும்மா இருககவேண்டாம் ● உங்கள் பொறுப்புகளை நிறைவேற்றுங்கள் எப்பொழுதும் எல்லா விஷயங்களிலும் ஒழுங்கு முறையை கையாள்வோம

## தேசம் எழும்போது தேர்ந்து எழுங்கள்



# மூவர் பெருமிதம்!

அவர்கள் மூவரும் நண்பர்கள். ஆனால் வெவ்வேறு நாட்டைச் சேர்ந்தவர்கள். ஒருவர் ருஷ்யாவைச் சேர்ந்தவர். இன்னொருவர் அமெரிக்கர். மூன்றாமவர் இந்தியர்.

அன்று மூவரும் ஒரு ஹோட்டலில் சந்தித்தனர். தேநீர் அருந்திய வண்ணம் பேசலாயினர். பேச்சு பல விஷயங்களைப் பற்றித் திரும்பிக் கடைசியில் தத்தம் நாட்டுப் பெருமையில் வந்து முடிந்தது. ஒருவருக்கொருவர் சளைக்காமல் தங்கள் சிறப்பை எடுத்துரைத்தார்கள். முதலில் பேச்சு வாக்கில் ருஷ்யர், ''எங்கள் நாட்டில் நாங்கள் பெருங் கப்பல் ஒன்று கட்டியிருக்கிறோம். அது நீருக்கு அடியில் உள்ள பூமியைத் தொட்டுக் கொண்டு போகிறது'' என்று கூறினார்.

''நிஜமாகவா? பூமியைத் தொட்டுக் கொண்டா?'' என்று மிகவும் வியந்தார் இந்தியர். அவருக்கு அது வியப்பையும் திகைப்பையும் அளித்தது.

''ஓர் அடி, இரண்டடி வேண்டுமானால் மேலாகப் போகலாம் என்று வைத்துக் கொள்ளுங்களேன்?'' என்று பதில் அளித்தார் ருஷ்யர்.

இதைக் கேட்டு அமெரிக்கர் சும்மா இருந்தால் அவர் அமெரிக்கரா? அடுத்தபடியாக அவர் தொடர்ந்தார்:

''எங்கள் நாட்டில் ஆகாய விமானம் ஒன்று செய்திருக்கிறோம். அது வானத்தையே தொட்டுக் கொண்டு போகிறது!'' என்றார்.

''அப்படியா வானத்தைத் தொட்டுக் கொண்டா?'' என்று தம் வியப்பைக் காட்டிக்கொண்டார் மீண்டும் இந்தியர்.

''இல்லை, ஓரடி, இரண்டடி தாழ்வாகப் போகலாம்!'' என்று திருத்திக் கொண்டார் அமெரிக்கர்.

இரண்டு பேர் பெருமையையும் கேட்டாயிற்று. இந்தியரால் தம் பெருமையைப்பற்றிச் சொல்லாமலிருக்க முடியவில்லை. அவர்களுக்குச் சூடு கொடுக்கும் முறையில், ''எங்கள் நாட்டில் மக்கள் மூக்கினால் சாப்பிடுகிறார்களே, தெரியுமா?'' என்று கேட்டார் இந்தியர்.

அமெரிக்கர், ருஷ்யர் இருவருக்குமே வியப்புத் தாளவில்லை. இது எத்தனாவது அதிசயமோ என்று கணக்கிடத் தெரியாதவர்களாய், ''என்ன? மூக்கினால் சாப்பிடுகிறார்களா?'' என்று கேட்டு இந்தியரின் முகத்தை நோக்கினர்.

''இல்லை, ஒரு விரற்கிடை அல்லது இரண்டு விரற்கிடை கீழாகத்தான் சாப்பிடுகிறார்கள்!'' என்று கூறிப் பெருமிதமுற்றார் இந்தியர். —அக்ஷயம்

அட்டைப்பட விளக்கம்

# அணிலுக்கு அருளிய அருங்குணச் செல்வன்

ஸ்ரீராமனின் அனந்த கல்யாண குணங்களை யெல்லாம் அயோத்யாகாண்டத்தில் எடுத்துரைக்கும் வால்மீகி முனிவர் 'அவன் பிராணிகளை அவமதிப்பதில்லை' (ந சாவமந்தா பூதானாம்) என்பதாக ஒரு குணநலனைக் குறிப்பிடுகிறார். இந்தக் குண விசேஷத்தின் எளிமைச் சிறப்பை அணிலுக்கு அவன் அருளிய சம்பவத்தில் காண்கிறோம். இலங்கை சென்று ராவணனை வென்று அசோக வனத்தில் சிறைப்பட்டிருந்த மைதிலியை மீட்பதற்காக ரகுநாதன் கடலில் அணைகட்டிக் கொண்டிருக்கிறான். வானரர்கள் எல்லாரும் சேதுபந்தனத்தில் முழுமூச்சுடன் ஈடுபட்டிருக்கிறார்கள். அப்போது சின்னஞ்சிறிய அணில் ஒன்றும், தான் பழங்களை வைத்துக் கொரிக்கும் போது கைகளாக உபயோகப்படுத்தும் முன்னங் கால்களால் மணலை எடுத்து வந்து போட்டுப் பாலத்தைப் 'பலப்படுத்த'த் தொடங்கியது. அணில் சிறியதாக இருக்கலாம்; அது கொண்டு வந்த மணல் மிக மிகச் சொற்பமாக இருக்கலாம்; அது புரிந்த உதவி அற்பமாக இருக்கலாம்; ஆனால் அதன் பக்தி? பக்திக்குக் கட்டுப்படும் பிரபு அணிலை அன்போடு எடுத்துத் தனது பட்டு விரல்கள் மூன்றால் அதன் ஈரம் பட்ட முதுகைத் தடவிக் கொடுத்தான். அன்பின் வெண்மையில் அந்த ஸ்பரிசம் திருநீறு பூசினாற்போல் மூன்று கோடுகளாக அணிலின் முதுகில் பதிந்தது. அப்போது தசரத நந்தனன் பொழிந்த பரிவையும், மணல் கொண்டு வந்த முன்னங் கால்களால் அவனைக் கும்பிடும் அணிலின் பக்தியையும் இந்த இதழ் அட்டைச் சித்திரத்தில் அழகுறக் கொணர்ந்திருக்கிறார் ஓவியர் மணியம்.

'அற்ப தருமம் புரிந்தாலும் பெரும் பயத்திலிருந்து ஒருவனை அது காக்கும்' என்ற கீதா வாக்கியத்தை மெய்ப்பிக்கும் காட்சி அது. நம்முடைய தர்மசிந்தனையைத் தூண்டி, பயமறியாத பெருவாழ்வளிக்குமாறு ஸ்ரீராமநவமியின் போது ரகு குல திலகனையும், பிராட்டியையும் பிரார்த்திப்போம்!

# ஜோடிப் பறவைகள்



இரண்டு குருவிகளும் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தன!

''பஞ்சம் தலைவிரித்தாடும் இந்த நாளில், நாம் இரண்டு பேரும் ஒரே இடத்தில் சென்று இரை தேடுவது நம் இருவருக்குமே கஷ்டமாகத்தான் இருக்கிறது. அரை வயிறுகூட நிரம்புவதில்லையே? மேலும் வேறு யாரேனும் மூன்றுமவர் நம்மோடு போட்டிக்கு வந்துவிட்டால் கேட்கவே வேண்டாம். அன்றைக்கு நம் பாடு திண்டாட்டமாகிவிடுகிறது. இதையெல்லாம் மனசில் வைத்துத்தான் நான் தீர்மானமாக இந்த முடிவுக்கு வந்தேன். வேறு வழியும் இல்லை. நீ தயவுசெய்து என் பேச்சைக் கேள். நாளை விடிந்ததும் எழுந்து முதலில் நீ கிழக்குப் பக்கம் உள்ள வயல்வெளிகள் காடுகள் முதலான இடங்களில் எல்லாம் திரிந்து வயிற்றை நிரப்பிக் கொள். நான் மேற்கு மலைப் பக்கம் போகிறேன். ஏதோ கிடைத்ததைக் கொண்டு பசியைப் போக்கிக் கொள்கிறேன். என்ன சரிதானே?'' என்று மிகுந்த ஏக்கத்தோடு பெண் குருவியை நோக்கிக் கேட்டது ஆண் குருவி.

பெண் குருவி ஒரு கணம் ஒன்றுமே பேசவில்லை. கண்கள் கண்ணீரில் அமிழ நீல வானத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டது. ஆத்திரமும் சோகமும் அதன் தொண்டையை அடைத்தன. துணிச்சலோடு இதுவரை பேசிய ஆண் குருவியைப் பார்த்து அழாக்குறையாக விசும்பலோடு,

''சரிதான், சரிதான். உங்களுக்கென்ன ஆண் ஜென்மம். எப்படியும் பேசுவீர்கள். ஆசையாய்க் காதலித்துவிட்டு, காதல் கைகூடியதும், ஆசைப்பட்டவளை அவஸ்தைப்படுத்திவிட்டு, எங்காவது கண் காணாமல் ஓடிவிடவும் உங்கள் இரும்பு மனம் சம்மதப்படும். ஆனால் நாங்களெல்லாம் அப்படியா? எங்களை நம்பியவர்களுக்கு ஒரு சின்னக் காயம் பட்டாலும் போதும், எங்கள் உயிர் போனது போல் தவித்து விடுவோம்.... நீங்கள் எப்படியோ துணிச்சலோடு பேசி விட்டீர்கள். எனக்கு நெஞ்சை அடைக்கிறது! இவ்வளவு காலமும் நாம் சேர்ந்தே இருந்துவிட்டு, இப்போது போய்ப் பிரிவதென்றால் என்னால் முடியுமா?... போன இடத்தில் என் மனம் என்ன பாடுபடப் போகிறதோ? உயிரோடு திரும்பி வருவேனோ, என்னவோ பாரேன்! எனக்கு என்னவோ செய்கிறதே'' என்று கண்களை மூடிக் கொண்டது பெண் குருவி.

வெகு பிரயாசைப்பட்டுப் பெண் பறவையைச் சமாதானப்படுத்துவதற்குள் ஆண் குருவிக்குப் போதும் போதும் என்றாகி விட்டது. 'இந்த ஒரு வழியைத் தவிர வேறு எந்த வழியும் இல்லை' என்பதை அதற்குத் தீவிரமாக உணர்த்துவதற்குள் பொழுதும் சாய்ந்து இரவும் வந்துவிட்டது. அரைப் பட்டினியோடு இரண்டும் ஒன்றை ஒன்று அணைத்துக் கொண்டு தம் கூட்டுக்குள் அடைந்து விட்டன. விடிந்ததும் அவை இரண்டும் பிரியப் போகிற துயரத்தில் அப்படியே தூங்கி விட்டன.

விடிந்ததும் அவை இரண்டும் எழுந்து, கடைசியாக ஒருமுறை ஒன்றை ஒன்று தழுவிக்கொண்டு 'கோ'வென்று அழுது தீர்த்தன. பிரிவுத் துயரில் நெஞ்சம் விண்டது!

''அப்படியானால் வேறு வழியே இல்லையா? உங்களைப் பிரியத்தானா வேண்டும்? போகிற இடத்தில் எனக்கு ஏதாவது நேர்ந்தால் நான் என்ன செய்வேன்? நான் தனித்திருந்து பழக்கமே

திலீபன்

இல்லையே? உங்களைப் பிரிந்து 'தேவாமிர்த'த்தைத் தின்னவும் எனக்குப் பிடிக்காதே! என்ன செய்வேன்?'' என்று மீண்டும் அழுதது பெண் பறவை.

ஆண் குருவி அதைச் சமாதானப் படுத்தி விட்டு, ''அடி பைத்தியமே! இதற்குப் போய் அழுவார்களா? அப்படி என்ன காலம் காலமும் பிரிந்திருக்கப் போகிறோமா? ஏதோ ஒரு பொழுது. அதற்குள் என்ன குடிமூழ்கி விடப் போகிறது? உனக்கு எந்த ஆபத்தும் வராது. தைரியமாய்ப் போய் வா. போய்விட்டுச் சாயந்திரம் நானும் பத்திரமாய்த் திரும்பி விடுகிறேன்!...... என்ன சரிதானே?... என் கண்ணல்ல. நீ அழக் கூடாது'' என்று பெண் குருவியின் கன்னத்தில் ஒரு முத்திரையைப் பதித்துவிட்டு ஆண் குருவி விடை பெற்றுக் கொண்டது.

சில விநாடிகள் அப்படியே மெய் மறந்து ஆண் பறவை சென்ற திசையையே கூர்ந்து நோக்கிப் பெருமூச்சு விட்டபடி பெண் குருவி கிழக்கு நோக்கிப் புறப்பட்டது. 'சே! இந்த ஆண்களுக்கு என்ன துணிச்சலப்பா! பூவான மனசைப் பெண்ணுக்கும், இரும்பான இதயத்தை ஆணுக்கும் இந்த ஆண்டவன் ஏன்தான் படைத்தானோ?' என்று வாய்க்குள் முணுமுணுத்துக்கொண்டது.

வெகு நேரம் எங்கெல்லாமோ அலைந்து திரிந்து விட்டு ஒரு வயலை அடுத்த களத்துமேட்டுக்குப் பெண் குருவி வரும்போது, சூரியன் உச்சிக்கு வந்தான். 'சுள்'ளென்ற வெய்யிலின் வேகம் உச்சியில் தீய்ப்பதையும் பொருட்படுத்தாமல் களத்து மேட்டைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்த பெண் குருவியின் கண்களில் முட்புதருக்கு அருகில் சிதறிக் கிடந்த கொஞ்சம் தானியங்கள் பட்டன!

பொங்கி எழும் ஆனந்தத்தோடு அந்தத் தானிய மணிகளைப் பொறுக்கப் பெண் குருவி குனிந்தது. மனசில் ஏதோ ஒரு பாரம் வந்து அழுத்திற்று. 'ஐயோ பாவம்! அவர் என்ன பாடுபடுகிறாரோ? எங்கெல்லாம் அலைகிறாரோ? பேசாமல் கூடவே வந்திருக்கக் கூடாதா? ஏதோ இங்கிருக்கும் மணிகள் அரை வயிற்றுக்கேனும் தாளுமே. இருவரும் தின்று விட்டு நிம்மதியாய்த் திரும்பி இருக்கலாமே!... இவ்வளவையும் நான்மட்டும் தின்று விட்டு என்ன சுகப்படப் போகிறேன்? போனவர் ஊரெல்லாம் அலைந்து விட்டு வெறும் வயிற்றோடு திரும்பும்போது நான்மட்டும் வயிற்றை நிரப்பிக் கொண்டு திரிய வேண்டுமா? நான் என்ன அவ்வளவு பெரிய ராட்சசியா?... சே, சே! எனக்கு இந்த ஜென்மமே வேண்டாம்!..... இப்படியே திரும்பிப் போய் மேற்கு மலைப் பக்கம் தேடிப் பார்த்து அவரை அழைத்துக் கொண்டு வந்து அவரும் நானும் சேர்ந்து தின்பதானால் சரி-இல்லையானால் இவ்வளவு தானியமும் எனக்கு வேண்டவே வேண்டாம்!' என்று விடாப்பிடியாய் எண்ணியபடி வந்த வழியே திரும்பியது!

வேகமாய் வந்த அவசரத்தில் எதிரில் வருவது தெரியாமல் பெண் குருவி ஆண் குருவியின் மேல் மோதிக்கொண்டு விட்டது!

இரண்டும் ஒன்றை ஒன்று பார்த்து ஒரு கணம் 'திருதிரு'வென விழித்துக் கொண்டன. ''என்ன! எங்கே இவ்வளவு அவசரமாய்த் திரும்பிவிட்டீர்கள்? போன இடத்தில் எதுவுமே அகப்படவில்லையா? ஐயோ, பாவம்! பட்டினியோடு திரும்பி விட்டீர்களோ?.. நான் முன்பே நினைத்தேன்...'' என்றது பெண் குருவி.

''அப்படியானால், உனக்கு நிறையக் கிடைத்ததா? சாப்பிட்டாயா?...... ஆனால் நீ நினைத்த மாதிரி நான் போன இடத்தில் எதுவுமே கிடைக்காமல் போகவில்லை. மலைச்சாரலில் ஓர் எறும்புப் பொந்தில் நம் இருவருக்கும் போதுமான அரிசிகளைப் பார்த்தேன். ஆனால் உன்னை விட்டுத் தின்பதற்கு மனசு ஒப்பவில்லை. நீ, ஏதும் கிடைக்காமல் பசியோடு திரும்பி விடுவாயோ என்ற கவலையில் உன்னையும் அழைத்துப் போய்ச் சேர்ந்தே சாப்பிடலாம் என்று வந்து விட்டேன். நீ இல்லாமல் எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. உன்னைத் தேடி வந்துவிட்டேன். ஆனால், ஐயய்யோ! அதற்குள் பொழுது சாய்ந்துவிட்டதே, இனிமேல் நாம் என்ன செய்யலாம்?'' என்று கூறிய ஆண் பறவையின் அளவற்ற பாசத்தைப் பார்க்கும்போது பெண் குருவிக்கு அழுகையும் சிரிப்பும் தான் வந்தன!



# ராமாயண திரிவேணி

'நமது நாட்டு அரும் பெரும் செல்வங்கள் யாவை?' என்று கேட்டால் ராமாயணமும் பாரதமும்தான் என்று யாரும் சொல்வார்கள். ராமாயணத்தை எத்தனையோ ஆண்டுகளாகக் கேட்டு வருகிறோம்; அப்படியே



பாரதத்தையும் கேட்டு வருகிறோம். ஆனால் நமக்கு அலுப்பதே இல்லை. கதை ஒன்றாயினும் ஒவ்வொருவர் சொல்லும் முறையிலும், அவரவர் பெற்றிருக்கும் அனுபவத்துடன் அது கலந்து வரும்போது தனி மெருகு பெற்று விடுகிறது.

சமயப் பணியாளர்களில் ஒரு புதிய நட்சத்திரம் போல் தோன்றி யிருக்கிறார் ஸ்ரீமதி சிவானந்த விஜயலட்சுமி. இளம் வயதிலேயே அவர் வடமொழியில் உள்ள வால்மீகி ராமாயணம், ஹிந்தியிலுள்ள துளசி ராமாயணம், நமது தமிழ்க் கம்பனின் ராம காதை மூன்றையும் நன்றாகப் பயின்று, அவற்றைப் பிணைத்து, 'ராமாயண திரிவேணி' என்று அரிய விருந்து படைத்து வருகிறார். இனிய இசையோடு, அவர் சுலோகங்களையும், கம்ப ராமாயணப் பாடல்களையும் பாடும் போது சபையோர் மெய்ம்மறந்து விடுகின்றனர். முக்கியமாக, துளசியின் தோஹாக்களை உள்ளம் உருகிப் பாடும் போது சபையோர் பரவசமாகி விடுகின்றனர்.

கதையை மிகத் தெளிவான தமிழில் கொச்சையின்றி அவர் கடல் மடை திறந்தாற் போல் கூறுகின்ற போது, சபையோர் அதில் திளைத்து மகிழ்கின்றனர்.

மூன்று ராமாயணங்களையும் ஆங்காங்கே ஒப்பிடும்போது சிறந்த இலக்கிய வருப்பாகவே தோன்றுகிறது.

ஸ்ரீமதி விஜயலட்சுமியின் இப்புதிய முயற்சிக்கு மக்களிடையே பெரிய ஆர்வத்தைக் காண முடிகிறது. சென்னை தியாகராய நகர் வாணி மகாலில் — ஸ்ரீ தியாகப் பிரம்ம கான சபையில் இடம் கொள்ளாமல் ஆண்களும் பெண்களும் குழுமுகின்றனர். இம் மாதம் 31ம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீ ராம பட்டாபிஷேகம் அமோகமாக நடக்கவிருக்கிறது. சென்னை மக்களின் பூரண ஆசி ஸ்ரீமதி சிவானந்த விஜயலட்சுமிக்கு நிறையக் கிடைக்கும்.






# இளமைப் பருவம்

ஒரு அழகுப் பெண்மணியாகத் திகழ தயார் செய்துகொண்டிருக்கிறீர்களா? உங்கள் இடைக்கால வருடங்களில் தான் மேனி எழிலுக்கு அதிகப்படியான பராமரிப்பு மிகவும் தேவை.

லட்சக் கணக்கானவர்களால் உபயோகிக்கப்பட்டு நம்பிக்கைக்குப் பாத்திரமான, இந்தியாவிலேயே பிரமிக்கச்செய்யும் ஜி–11* சேர்ந்த ஒரே சோப்பான சிந்தால் உபயோகித்து உங்கள் மேனியெழிலைப் பராமரிப்பதைவிட வேறு சிறந்தவழி யேது? சாதாரணமாக சருமத்தில் களங்கத்தை உண்டுபண்ணும், துர்நாற்றத்தை எழுப்பும் கிருமிகளை ஒழித்துக் களங்கமற்ற பரிசுத்தமான மேனி யெழிலோங்க சிந்தால் உறுதி செய்கிறது.




மிகுந்த வனப்பிற்கும், பூரணப் பாதுகாப்பிற்கும் இனிய மணங்கமழும், வியர்வை நாற்றத்தைப் போக்கி ஆறுதல் அளிக்கும் ஜி-11 அடங்கியுள்ள கோத்ரெஜ் சிந்தால் டாய்லெட் பவுடர் உபயோகியுங்கள்.

கோத்ரெஜ் ஹேர்டானிக் கிலும் ஜி-11 அடங்கியுள்ளது.

* விவரமான "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு 'கோத்ரெஜ், பம்பாய்-12', என்ற விலாசத்திற்கு எழுதுங்கள்.




**சோப்புகளில் முதன்மையான பெயர்**

CT. 2 A. 2/63 (26cm x ... cm) TAM.

*எல். ஜிவாடன் அண்டு கம்பெனியின் ட்ரேட் மார்க்

# சந்திரனே சாட்சி

கதை: கௌசிகன்

15

சித்திரம்: விநு

அழுதேன், அரற்றினேன், விம்மினேன், வேதனையால் வெந்து போனேன். ஆற்றுவாரும் தேற்றுவாரும் இன்றி நானே கதறிக் கதறிக் கண்ணீர் உலர்ந்து மனசைக் கல்லாக் கிக் கொண்டேன். மறு நாள் காலை...















கண்மணியின் உள்ளம் எரிமலையாகியது..
பாபு... பாபு. பாபு.. என் குழந்தை பாபு அதை நான் தான் வளர்ப் பேன்.
கைகளில் ரத்தம் கசிந்ததுதான் கண்ட பலன். அந்த வீட்டின் கதவு திறக்கப்படவில்லை.


நடைப்பிணமாக வீடு திரும்பும் மகளுக்கா கக் காத்திருக்கிறார் கள் பெற்றோர்


அப்பா...!


நடந்ததைக் கேட்ட ராஜூ மகேந்ர பேச வில்லை. தன் ஒரே மகள் அநியாய மாக வஞ்சிக்கப்பட்டதை எண்ணிக் கண்ணீர் வடித்தார்.


நெஞ்சின் நெருப்பு அவர் கண்களைக் காய வைத்த போது...
அந்த அயோக்கியன் ஜெயபாலின் கொட்டத்தை அடக்குவேன். உன் குழந்தையை உன்னிடம் கொண்டு வந்து சேர்ப்பேன்


நீதி மன்றத்திலே மக ளின் வாழ்வுக்காக நியாயம் வேண்டி வழக் காடினார். ஆனால் ஜெய ராமனின் உயிரும் ஜெய பாலின் பணமும் நளி
னிக்கு நியாயம் கிடைக் காமல் செய்துவிட்டன.


இடிந்த உள்ளத்தோடு வீடு திரும்பிய ராஜூ மகேந்ர படுக்கையானார்.
அம்மா நளினி! உன் வேதனையைத் துடைக்காமலேயே போய் விடுவேனோ?
இப்படியெல்லாம் பேசாதீர்கள் அப்பா... அவர் மனமும் மாறும் என் வாழ்வும் மலரும்.


கல்லுங் கரையும் வகையில் கணவனுக்கு எழுதிய கடிதங் களால் எவ்விதப் பயனுமில்லை. மாதங்கள் உருண்டன... ஒரு நாள்...


சார், தந்தி!

# தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்...

கல்ஸானா-டி யின் நற்பயனே. கருவுற்றிருக்கையில் தாயிடம் கால்சியம் மிகையாகச் செலவாகி விடுகிறது. தாயிடமிருந்துதான் குழந்தையின் எலும்புகள், நகங்கள் இவற்றின் வளர்ச்சிக்கான கால்சியம் போய்ச் சேருகிறது....அதனால் அவளிடத்தில் கால்சியம் பற்றாக்குறை ஏற்படுகிறது. அவளுக்கும் அவள் குழந்தைக்கும் வேண்டிய கால்சியத்தைச் சரிக்கட்டி வைக்க, இந்தப் புத்திசாலியான அன்னை வைட்டமின் சிறப்புறச் சேர்ந்த கால்சியம் கொண்ட கல்ஸானா-டியை உட்கொண்டு வந்தாள். கால்சியம் பற்றாக்குறையை நிவர்த்திக்க கல்ஸானா-டி முற்றிலும் சரியான மருந்தென வருடக்கணக்கான சோதனைகளினால் நிரூபணமாகி ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. கல்ஸானா-டியினால் தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்.




# கல்ஸானா-டி

**வைட்டமின் தீவிரச் சேர்க்கையுடைய கால்சியம்**

கர்ப்பிணிகள், குழந்தையை அரவணைக்கும் அன்னைகள் மற்றும் வளரும் குழந்தைகள் இவர்களுக்கு ஏற்றது

GR.KD.39 TAM.

# இவரைத் தெரியுமா?

இந்த உலகத்திலே இன்றைக்கு நாம் காணும் பல விஞ்ஞான அற்புதங்களுக்கெல்லாம் இவர்தான் காரணம். இவர் இல்லாவிட்டால் கிராமபோன் கிடையாது; சினிமாவைப் பற்றிச் சிந்திக்க முடியாது. ரேடியோ, டெலிவிஷன், எக்ஸ்ரே இப்படி எத்தனை எத்தனையோ சாதனங்கள் நமக்குக் கிடைத்திருக்காது. மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்காக இவர் 1200 பொருள்களைக் கண்டுபிடித்திருக்கிறார்!

இந்தத் தலைசிறந்த மேதையின் வாழ்க்கையை நீங்கள் படித்தீர்களானால் வியந்து போவீர்கள். 84 வருடங்கள் வாழ்ந்த இவர் பள்ளிக்கூடத்துக்குப் போனதெல்லாம் மூன்றே மாதங்கள்தான். வாத்தியார் எதைச் சொல்லிக் கொடுத்தாலும் மறந்து விடுவார். பள்ளியிலேயே 'அடி மண்டு, மக்கு' என்ற பட்டப் பெயர் வாங்கியவர். உபாத்தியாயர்களுக்குப் பெரிய தலைவேதனையாக இருந்த இவரது மூளையில் ஒன்றுமே இல்லை என்று அவர்கள் முடிவு கட்டினார்கள். டாக்டர்கள், 'பையனுக்கு மூளையில் ஏதோ கோளாறு இருக்கிறது' என்றுகூடச் சொன்னார்கள். இவரது தலையின் அமைப்பு விநோதமாக இருந்தது கூட இதற்கு ஒரு காரணம். ஆகவே தாயார் தன் அருமை மகனைப் பள்ளிக்குப் போகச் சொல்லவில்லை. தானே அவனுக்குக் கல்வி பயிற்றுவித்து வந்தாள். சாதாரணக் கல்வியா? அடேயப்பா! இந்த உலகத்தையே மாற்றியமைக்கும் அதிசயமான ஆற்றலைத் தன் மகனிடம் உண்டாக்கிய உத்தமி அந்த அன்னை.



மின்சாரத்தைத் தான் நினைத்தபடி யெல்லாம் ஆட்டிப் படைத்துப் பல அரிய பொருள்களை உலகுக்கு அளித்த இந்த மேதைக்கு ஞாபக மறதி ரொம்ப ரொம்ப உண்டு. ஆராய்ச்சி விஷயங்களில் அபாரமான ஞாபகசக்தியுடைய இவர் பொதுவாழ்வில் எதையும் நினைவில் வைத்துக் கொள்ள மாட்டார். ஒருசமயம் ஏதோ ரசாயனச் சிக்கலை விடுவிப்பதில் மூழ்கியிருந்த இவர் அதே சிந்தனையோடு வரி கட்டுவதற்காகச் சென்றார். பெரிய 'க்யூ' வரிசை! அதில் போய் நின்றவர் தம் ஆராய்ச்சியின் சிக்கலை விடுவிப்பதிலேயே சிந்தனையாக இருந்தார். 'க்யூ' மெள்ள மெள்ள நகர்ந்து இவர் முறை வந்த போது அதிகாரியின் முன் போய் நின்றார். அவர் இவரது பெயரைக் கேட்டபோது தம் பெயரேகூட இவருக்கு மறந்து விட்டது. வேறு விஷயத்தில் தீவிரமாக மூளை வேலை செய்யும்போது மற்ற எதற்காகவும் அது வேலை செய்வதில்லை. நல்ல வேளையாக அடுத்து நின்றவர் இவர் பெயரைக் கூறி நிலைமையைச் சமாளித்தார்.

இந்த மகத்தான மேதை பிறந்தது 1847ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 11ந்தேதி ஒஹியோவிலுள்ள மிலான் நகரில். பன்னிரண்டு வயதில் ஓடும் ரயில் வண்டிகளில் மிட்டாய் விற்கும் வேலையில் இருந்தவாறே 'தி கிராண்ட் ட்ரங்க் ஹெரால்ட்' என்ற பத்திரிகையின் ஆசிரியராக அதை வெளியிட்டார். இரண்டே பக்கங்கள் உள்ள அதில் ஒரே தப்பும் தவறுமாக இருக்கும். இப்படி ஒரு வேலையில் இருக்கும் போதே வேறு பல வேலைகளைச் செய்து அதனால் ஒவ்வொரு தடவையும் தாம் பார்த்து வந்த வேலையைத் தொலைத்துக் கொண்டார். ஒரு விநாடி சும்மா இருக்கமாட்டார்; இருக்க முடியாது. இப்படிச் சதா ஆராய்ச்சியிலேயே ஈடுபட்டுப் பல அற்புத சாதனங்களை நமக்கு அளித்த இவர் 1931ம் வருடம் அக்டோபர் மாதம் 18ந் தேதி காலமானார்.

புகழுடம்புடன் இன்றும் நம்மிடையே வாழும் இவர் யார் என்று தெரிய வில்லையா? இவர்தான் தாமஸ் ஆல்வா எடிசன். பல மின்சார சாதனங்களின் தந்தை. சமீப காலம்வரை வாழ்ந்த தனிப் பெரும் விஞ்ஞான மேதை.

**உங்கள் ஆல்பத்துக்கு: 7**

ஆப்பிரிக்கா கண்டத்தில் வாழும் நீக்ரோக்களில் எண்ணிமானாத இனத்தவர்களுண்டு. இக்குயு என்ற இனத்துப் பெண்ணை இங்கு பார்க்கிறீர்கள்.

எப்படிச் செய்கிறார்கள்?

## 'சூயிங் கம்'

உங்களுக்கெல்லாம் ரொம்பப் பிரியமான மிட்டாய் அல்லவா இது? உங்களில் சிலர் நாளெல்லாம் இதை மென்றுகொண்டே இருப்பீர்களோ? ஐவ்வு போன்ற இதை எப்படித் தயாரிக்கிறார்கள் என்று தெரியுமா?

மத்திய அமெரிக்காவின் அதி உஷ்ணப் பிரதேசக் காடுகளில் ஒருவகை மரங்கள் வளருகின்றன. மனிதர்கள் இதன் மீது ஏறி இதன் கிளைகளில் வெட்டு வாய்களை ஏற்படுத்துகிறார்கள். ரப்பர் மரத்திலிருந்து ரப்பர் பால் வடிவது போல் இந்த மரங்களிலிருந்தும் ஒருவித (பாலைப் போன்ற வெள்ளை நிறமான) திரவம் வடிகிறது. இதைப் பாத்திரங்களில் சேகரித்துக் காய்ச்சுகிறார்கள். ரப்பரைப் போலக் கெட்டியாக ஆனதும் இதைத் தலையணை போன்ற வில்லைகளாக வார்க்கிறார்கள். இந்த வில்லைகள் முதலில் குதிரைகளின் முதுகிலும், பிறகு படகிலும் பிரயாணம் செய்து 'சூயிங்கம்' தொழிற்சாலைக்கு வந்து சேருகிறது. இந்த நிலையில் இதற்கு 'சிக்கிள்' என்று பெயர். தொழிற்சாலைக்கு



வந்ததும் இந்த சிக்கிள்களை மறுபடியும் சமைக்கிறார்கள். அதாவது காய்ச்சி, அத்துடன் சர்க்கரை, ருசிக்குப் பலவித எஸென்ஸ் ஆகியவற்றையும் கலந்து ரொட்டி மாவை அடித்து அடித்துப் பிசைவது போல் ஒரு யந்திரம் இதைப் பிசைகிறது. பிறகு இன்னொரு யந்திரம் இதை நீங்கள் அசை போடும் உருவத்தில் சிறுசிறு துண்டுகளாக்கிக் காகிதத்தைச் சுற்றித் தள்ளுகிறது. நீங்கள் சுவைக்கும் 'சூயிங்கம்' எதனால் எப்படித் தயாராகிறது என்று இப்போது புரிகிறதா?

## நந்தவனத்தில் திருடன்!

அகழியில் மிதந்த படகில் துடுப்பில்லாமல் துண்டுக் கயிற்றுடன் நின்ற திருடன் எப்படிப் படகை வலித்தான் தெரியுமா? கயிற்றைப் படகின் பின்பக்கத்தில் (ஸ்டெர்ன்) கட்டிப் படகின் நடுவில் நின்றபடி வேகமாகப் பல தடவைகள் கண்டிச் கண்டி இழுத்தான். இப்படி இழுத்தபோது படகு தானாக மெல்ல முன்னேறியது. இப்படிச் செய்தால் மணிக்கு 2, 3 மைல் வேகத்துக்குப் படகைச் செலுத்த முடியும்.




அகழியைக் கடந்தவனுக்கு இன்னுமொரு தடை காத்திருந்தது. ஒரு பெரிய நந்தவனம். மேலே உள்ளது போன்று பதினாறு பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு பகுதிக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட வழிகள் உண்டு. இதற்குள் இறங்கு வெளுத்து விட்டால் தோட்டக்காரர்கள் செடிகளுக்கு நீர் ஊற்றவும் மலர் கொய்யவும் ஆரம்பித்து விட்டார்கள். ஆகவே திருடன் அவர்கள் கண்ணில் படாமல் தப்பியாக வேண்டும். Aஎன்ற இடத்தில் புகுந்து ஒளிந்து மறைந்து 'B' என்ற தோட்டத்தின் வழியாக வெளியேறினான். வெளியேறுமுன் பதினாறு தோட்டத்துக்குள்ளும் தான் நுழைந்து வந்திருக்கிறோம் என்பதை அறிந்து அவனுக்கே வியப்பாக இருந்தது. ஆனால் ஒவ்வொரு தோட்டத்திலும் ஒரே ஒரு முறைதான் அவன் புகுந்திருக்கிறான். எப்படி? திருடன் சென்ற வழி எந்த வழி தெரியுமா?



## உங்களுக்குத் தெரியுமா?

❀ ரத்தம் தண்ணீரைப்போல் ஆறு மடங்கு கனமானது.

❀ சிந்தனையின் வேகத்தைக் கூட அளந்திருக்கிறார்கள். அதன் வேகம் என்ன தெரியுமா? மணிக்கு 150 மைல்கள்!

❀ (Run) என்ற ஆங்கிலப் பதத்துக்கு 832 விதமான பொருள்கள் உண்டு.

❀ ஒரு கோழிக் குஞ்சுக்கு 8,000க்கும் மேலான இறகுகள் முளைக்கின்றன.

❀ திபெத்தில் வசிக்கும் 'யாக்' என்ற எருமையின் பால் இளஞ்சிவப்பாக இருக்குமாம்.

❀ தலைவலிகள் எத்தனை வகை என்று தெரியுமா? 47 விதமான தலைவலிகள் இருக்கின்றனவாம்!

❀ 200 மிலியன் வருஷங்களாக ஒரு பிராணி கொஞ்சமும் மாறுமல் இன்னமும் அதன் சந்ததிகள் உலகில் இருக்கின்றன என்றால் வியப்பாக இல்லை? அது எந்தப் பிராணி தெரியுமா? ஆமைதான்!

❀ ஆண்களை விடப் பெண்கள் ⅛ மடங்கு வேகமாகச் சுவாசிப்பார்களாம்.

❀ 'காட்' என்று ஒரு வகை மீன். இதிலிருந்து தான் 'காட்லிவர் ஆயில்' என்ற பிரசித்தமான மீன் எண்ணெய் தயாரிக்கிறார்கள். இந்த 'காட்' மீன்கள் கடலின் ஆழத்தில் வசிப்பவை. இவைகளின் ஈரலில் சூரிய வெளிச்சத்திலிருந்து கிரகிக்கப்பட்ட விடமின்கள் அடங்கி இருக்கின்றன. ஆனால் இந்தக் காட் மீன்கள் சூரியனையே பார்ப்பதில்லை என்றால் விந்தையாக இல்லையா?

# வாட்டர்பரீஸ்

# வைடமின் காம்பவுண்ட்

# சாப்பிடவேண்டியது எப்பொழுது?




■ எந்த சீதவெப்ப நிலையிலும், எப்பருவத்திலும் வயதுவந்தோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு உகந்த பொது டானிக் வாட்டர்பரீஸ் வைட்டடமின் காம்பவுண்ட்.

■ வைட்டமின் பி காம்ப்ளெக்ஸ், மால்ட் எக்ஸ்ட்ராக்ட் மற்றும் உடல் நலம், தெம்பு ஆகியவற்றுக்கு அவசியமான பொருள்கள் செறிந்தது வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட். பசியைத்தூண்டுவதுடன், ஆரோக்கிய உணர்வை ஊட்டுகிறது அது.

## வாட்டர்பரீஸ்

## வைடமின்

## காம்பவுண்ட்

வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி. (வரையறுக்கப்பட்டபொறுப்புடன் யு. எஸ். ஏவில் இணைக்கப்பெற்றது)

WLY-9 TAM



# அறிவாளி

காந்தன்

'வருகிறது, வருகிறது' என்று பல ஆண்டுகளாக விளம்பரம் செய்யப்பட்டு வந்த படம் ஒரு நாள் உண்மையாகவே வந்துவிட்டது. அடங்காப் பிடாரியின் கதை. (Taming of the Shrew) என்ற ஷேக்ஸ்பியரின் அருமையான நாடகத்தை அடிப்படையாகக் கொண்ட கதை.

யாருக்கும் அடங்காமல் சண்டித்தனம் செய்யும் ஒரு பெண்ணை ஆளவந்தான் என்ற பணக்கார வாலிபன் தைரியமாக மணந்து கொண்டு அடக்கியாள்கிறான். இவ்வளவு தான் கதை. அந்தப் பழங்காலத்துக் கதைக்குப் புதுமை ஊட்டுவதாக நினைத்துக்கொண்டு கதாநாயகன் கிராம சேவை, கூட்டுறவு விவசாயம் முதலியவற்றிலெல்லாம் ஈடுபடுவதாகக் காட்டுகிறார்கள். இவ்வளவும் காட்டி விட்டு அவன் அறிவாளி என்பதை மக்கள் மனத்தில் பதியும் வண்ணம் காட்டா விட்டால் படத்தின் தலைப்பு என்ன ஆவது! அதற்காகத்தான் திருக்குறளின் பெருமையைப் பற்றி வானொலியில் பாட்டும், சொற்பொழிவுமாக வெளுத்து வாங்குகிறான் கதாநாயகன் என்று நினைக்கிறேன். எவ்வளவு உயர்ந்த விஷயமாக இருந்தாலும், மூலக் கதையோடு சரியானபடி சம்பந்தப்படா விட்டால் அசடு வழியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது இந்த வானொலிப் பிரசங்கம்.

மாதுரி தேவி நடித்த ''மாலா ஒரு மங்கல விளக்கு'' என்னும் பழைய படமும் இதே மாதிரி அடங்காப்பிடாரியின் கதை தான். அதைப் பார்த்துத் தொலைத்த நான் எப்படி அதைச் சொல்லாமல் இருக்க முடியும்?

இப்படி வந்த கதையே மீண்டும் படமாக வந்து சோதிக்கும் வேதனை என்று தீருமோ!

சிவாஜி கணேசன்தான் அறிவாளி. அதாவது கதாநாயகன் ஆளவந்தான். ஒரு கட்டத்தில்கூட அவருக்கே உரிய நடிப்பைப் பார்க்க முடிய வில்லை. கிராம மக்களின் தலைவனாகத் தலையில் கட்டுடன் அஹிம்சைப் பிரசாரம் செய்யும் போது ஜெமினியின் ''இரும்புத் திரை'' நினைவுக்கு வருகிறதே! சிவாஜி கணேசனின் நல்ல நடிப்புக்கு இழுக்கு உண்டாக்கும் விதத்தில் இதே மாதிரி படங்கள் வந்து கொண்டேயிருந்தால்......?

படம் தயாரிக்க ஆரம்பித்து எத்தனை ஆண்டுகள் ஆகின்றன என்பதை அறிந்து கொள்ளச் சிறிதும் சிரமப்பட வேண்டாம். ஆரம்பக் காட்சிகளில் வரும் சிவாஜியையும் பிற்பகுதிகளில் வரும் சிவாஜியையும் எடை போட்டுப் பார்த்தாலே போதும்!

பானுமதியை அன்னையாகப் பார்த்து மகிழ்ந்த மக்களுக்கு அவர் வேஷம் திருப்தி தருவதாயில்லை என்பதைச் சொல்லித்தானாக வேண்டும். 'மேக்கப்' சாதனங்கள் இளமை எழிலை எடுத்துக் காட்ட எவ்வளவுதான் உதவி செய்தாலும், இயற்கையைப் பரிபூரணமாக வெற்றி கொள்ள முடியவில்லையே!

பானுமதி வெடுக் வெடுக் கென்று பேசுகிறார். மிடுக்காகப் பார்க்கிறார். துடுக்காகத் துள்ளு நடை போடுகிறார். பாலையாவின் சதியை அம்பலப்படுத்தும் இடத்தில் அவர் நடிப்புத் திறன் பளிச்சிடுகிறது.

அடங்காப்பிடாரியின் ஆட்டபாட்டங்களை ரஸிக்கும் அளவுக்கு அவளை அடக்கியாளும் கட்டங்களை ரசிக்க முடிய வில்லை. மேற்படி கட்டங்கள் சப்பென்று போய் விடுகின்றன.

பாலையாவுக்குப் பழக்கமான பாகம்தான் தரப்பட்டிருக்கிறது என்றாலும், அவர் நடிப்பில் ஏனோ சுரத்தில்லை. வந்து வந்து போகிறார். ஓய்ந்து போனாற்போல் காணப்படுகிறார்! அட, பாண்டுரங்கா!

''அறிவாளி'' படத்தில் அதிர்ஷ்டக்காரர் டி. ஆர். ராமச்சந்திரன்தான். மிக நன்றாக நடித்திருக்கிறார். அவர் பேச்சில் விழும் ஹாஸ்யம் தியேட்டரில் கலகலப்பை உண்டு பண்ணுகிறது.

தங்கவேலுவின் ஹாஸ்யங்கள் இரண்டாம் தரமாகத்தான் இருக்கின்றன.

பாடல்கள் எதுவும் நன்றாயில்லை; பாபநாசம் சிவன் அவர்களின் பாட்டு ஒன்றைத் தவிர. தமிழ்ப் படங்களின் தனிநாயகமாக இருந்து பின்னணிக் குரல் கொடுத்துப் புகழ்பெற்றிருக்கும் டி. எம். சௌந்தரராஜனின் குரல் கூட ''அறிவாளி''யில் ஏனோ எடுபட வில்லை.

தேனாக இனிக்கும் பானுமதியின் சொந்தக் குரலுக்குப் பாடல்கள் உதவி செய்ய வில்லை.

இடிந்து போன வீட்டுக்கு வெள்ளை அடித்த மாதிரி பழங்கதையை வைத்துக் கொண்டு வசனம் ஒப்பேற்றப்பட்டிருக்கிறது.

கே. சாரங்கபாணியைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ள வில்லை. ஜமீன்தாரின் காதலியாக வரும் ஜெமினி சந்திராவின் பேச்சு புரிய வில்லை. அவர் தெளிவாய்ப் பேச முயல்வது நலம்.

ஐயகோ! ''அறிவாளி'' எல்லா வகையிலும் பெரிய ஏமாற்றம்!



உங்கள்

வீட்டிற்கு

தேவை

உலகத்தில் 40 நாடுகளில் வசிக்கும் லக்ஷக்கணக்கானவர்கள் திறமைக்கும் துல்லியமான எந்திர வேலைப்பாட்டுக்கும் உஷா விசிறிகளையே தேர்ந்தெடுக்கிறார்கள்.

இந்தியாவில் மிக அதிகமாக விற்பனையாகும் உஷா விசிறிகள் ஸிங்கின் யூனிட் தொழிற்சாலைகளில் உலகத்திலேயே பெரிதான தொழிற்சாலையில் திறமை வாய்ந்தவர்களால் செய்யப்பட்டவை

நீங்கள் ஒரு விசிறி வாங்கும்போது நம்பிக்கையுடன் உஷாவை வாங்கலாம் ... அதுதான் இன்று விற்பனையிலிருக்கும் விசிறிகளில் ஜனங்களால் மிக விரும்பப்படுவது



# மிக சிறந்ததே

எல்லா ஏ. ஸி. விசிறிகளும் நீண்ட காலம் தொல்லையின்றி சேவை செய்ய டபிள் பால் பேரிங்ஸ் பொருத்தப்பட்டவை.



## உஷா விசிறிகள்



தி ஜே என்ஜினியரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31

# பொன் விலங்கு

## பன்னிரண்டாவது அத்தியாயம்

நாட்கள் சுவாரசியம் இல்லாமல் மெல்ல நகர்ந்து கொண்டிருந்தன. மல்லிகைப் பந்தல் கல்லூரியிலிருந்து ஒரு விவரமும் தெரியவில்லை. கோடை வெயிலின் கொடுமை காலை எட்டு மணிக்குமேல் மாலை ஆறு மணி வரை நகரத்தை வாட்டி எடுத்துக் கொண்டிருந்தது. நாள் தவறாமல் சத்தியமூர்த்தியின் தங்கை ஆண்டாள் தபால்காரனை எதிர்பார்த்து வாசலுக்கு வந்து காத்து நிற்பதும், ஏமாற்றத்தோடு திரும்பி வந்து, ''அண்ணா! தபால் ஒண்ணும் இல்லையாம்!'' என்று தமையனிடம் சொல்லிவிட்டுப் போவதுமாக எதிர்பார்ப்பது எதுவோ அது நிகழாத நாட்கள் ஒவ்வொன்றாக நீண்டு கொண்டிருந்தன. மதுரை நகரமும் சுற்று வட்டாரத்துப் பட்டிதொட்டிகளும் ஒன்று சேர்ந்து மொத்தமாக எதிர்பார்க்கும் நிகழ்ச்சியாகச் சித்திரைத் திருவிழா வந்து கொண்டிருந்தது. எந்தப் பக்கம் திரும்பினாலும், ''சாமி என்னைக்கு ஆத்திலே எறங்குது?'' என்று அழகர் ஆற்றில் இறங்குவதைப்பற்றி விசாரித்துக் கொண்டிருந்தார்கள். தெருக்களில் கோடைக்கான கீற்றுப் பந்தல்களும், தண்ணீர்ப் பானைகளும் அதிகமாயின. கல்லூரிகளிலும், பள்ளிக்கூடங்களிலும், தங்கள் மக்களைச் சேர்க்க இடம் தேடி அலையும் பெற்றோர்களும் பெண் குழந்தைகளுக்கு வரன் தேடி அலையும் பெற்றோர்களுமாக எங்கும் ஒருவிதமான பரபரப்போடு வாழ்க்கை ஓடத் தொடங்கியிருந்தது. பகல் நேரம் முழுவதும் சத்தியமூர்த்தி விட்டிலேயே அடைந்து கிடந்தான். அப்பா கண்ணாயிரத்தைச் சந்திக்கச் சொல்லி அவனை நச்சரித்துக் கொண்டிருந்தார். ஒவ்வொரு நாளும் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லிக் கண்ணாயிரத்தைப் பார்க்காமல் தட்டிக் கழித்துக் கொண்டிருந்தான் அவன். மல்லிகைப் பந்தலில் இருந்து ஒருவிதமான தகவலும் வராமற்போகவே தந்தை சத்தியமூர்த்தியை அதிகமாக வற்புறுத்தத் தொடங்கியிருந்தார்.



மணிவண்ணன்

தந்தை அவனிடம் நேரடியாகச் சொல்லா விட்டாலும் அம்மாவின் மூலம் இன்னொரு தகவலும் அவனுக்குத் தெரிந்தது. வீட்டு மாடியை இடித்துக் கட்டுவதற்காகவும் தங்கை ஆண்டாளின் திருமணச் செலவுக்காகவும் அப்பா கண்ணாயிரத்திடம் ஐயாயிரம் ரூபாய்க்கு மேல் கடன் கேட்டு அலைந்து கொண்டிருக்கிறாராம். முதலை வாய்க்குள் காலை விடுவதைப் போல் அப்பா கண்ணாயிரத்தின் பிடியில் தானாகப் போய் வலுவில் சிக்கிக் கொள்கிறாரே என்பதை எண்ணிப் பார்த்த போது அவனுக்கு மிகவும் வேதனையாக இருந்தது. இந்தச் செய்தியை அறிந்த பின்பே கண்ணாயிரத்தோடு தன் தந்தை அடிக்கடி சுற்றிக் கொண்டிருப்பதற்கும், உடனே கண்ணாயிரத்தைப் பார்க்கும்படி தன்னைத் தூண்டுவதற்கும் சரியான காரணம் அவனுக்குப் புரிந்தது. காலையும், மாலையும் எப்போது வந்து கண்ணாயிரம் கூப்பிட்டாலும் அப்பா மறுக்காமல் அவரோடு காரேறிப் போய்க் கொண்டிருந்ததற்கு வெளிப்படையாக வேறு என்னவோ காரணம் சொல்லிக் கொண்டிருந்தார். ''மஞ்சள்பட்டி ஜமீன்தார் மக்கள்சபைத் தேர்தலுக்கு நிற்கப் போகிறானாம். ஆங்கிலமும் தெரியாமல் இந்தியும் தெரியாமல் தில்லிக்குப் போனால் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரி இருக்காதா? அதனால் ஜமீன்தாருக்கு மிக இரகசியமாக ஆங்கிலமும் இந்தியும் கற்பித்துக் கொண்டிருக்கிறேன். பெரிய இடத்து விவகாரம் அல்லவா? அதனால் வெளியே சொல்லப்படாது. இது வெளியில் தெரியக் கூடாது என்று ஜமீன்தார் கூச்சப்படுகிறார். 'இத்தனை வயதுக்கு மேல் ஜமீன்தாருக்குப் படிப்பில் மோகமா?' என்று மக்கள் பேசிக் கொள்ளத் தொடங்கி விடுவார்களோ என்பதாக அவர் பயப்படுகிறார்'' என்று அப்பா ஒரு நாள் பேச்சு வாக்கில் சிரித்துக் கொண்டே சொல்லியிருந்தார். அப்பா கண்ணாயிரத்தினிடம் கடன் வாங்க முயல்வதும், மஞ்சள்பட்டி ஜமீன்தாருக்கு ஆங்கிலமும் இந்தியும் கற்பிப்பதாக அலைந்து கொண்டிருப்பதும் சத்தியமூர்த்திக்குச் சிறிதுகூடப் பிடிக்கவில்லை. 'நான் சம்பாதித்துப் போடுவதற்குத் தயாராகாத வரையில் இதையெல்லாம் தடுப்பதற்கு எனக்கு உரிமை ஏது?' என்று அடங்கியிருந்தான் அவன். ஆங்கிலச் செய்தித்தாளில் விடுமுறைக்குப் பின் மல்லிகைப் பந்தல் கல்லூரி திறக்கப்போகிற நாளைக் குறிப்பிட்டு விளம்பரம்கூட அன்று காலையில் வெளி வந்துவிட்டது. ஏமாற்றமும், குழப்பமும் அவனை ஒடுங்கிப் போகச் செய்திருந்தன. பெட்டியில் இருந்த பாரதியின் கடிதத்தை அவன் இரண்டாவது முறையாக எடுத்துப் படித்தான். அந்தக் கடிதத்தைப் படிப்பதில் அவன் மனம் சிறிது ஆறுதல் அடைந்தது. 'என்னை ஏமாற்றி விடாதீர்கள் சார்! உங்களை அவசியம் இங்கே எதிர்பார்க்கிறேன்' என்று அந்தக் கடிதத்தை முடித்திருந்தாள் பூபதியின் மகள். அதைப் படிக்கும்போது அவன் தன் ஞாபகத்தில் முழுமையான மகிழ்ச்சியை உணர்ந்தான்.

'நான் உன் விருப்பப்படியே மல்லிகைப் பந்தலுக்கு வந்துவிட வேண்டும் என்று நினைத்தாலும் உன் தந்தை என்னை ஏமாற்றி விடுவார் போல் இருக்கிறது பெண்ணே!' என்று எண்ணிக் கொண்டே மனத் துயரத்தோடு அந்தக் கடிதத்தைப் பெட்டியில் வைத்துப் பூட்டினான் சத்தியமூர்த்தி. இனிமேல் மல்லிகைப் பந்தலிலிருந்து கடிதமோ, ஆர்டரோ வரும் என்ற நம்பிக்கைகூட அவனுக்கு இல்லை. தன்னுடைய உருக்கமான கடிதம்கூடப் பூபதியின் மனத்தை மாற்றவில்லை என்று எண்ணிய போது அவனால் அந்த ஏமாற்றத்தைத் தாங்கிக் கொள்ளவே முடியாமல் இருந்தது. வெளியில் எங்கும் புறப்பட்டுப் போகவே பிடிக்காமல் வீட்டின் தனிமையில் புத்தகங்களை நாடி மன அமைதி பெற முயன்றான் அவன். அவன் கண்ணாயிரத்தைப் பார்க்காமலே தட்டிக் கழித்தது பிடிக்காததனால் தந்தை அவனோடு பேசுவதையே நிறுத்தியிருந்தார். அம்மாதான் அவன் மனமறிந்து ஆறுதலாக இரண்டொரு வார்த்தைகள் பேசிக் கொண்டிருந்தாள்.

''வருத்தப்படாதே சத்தியம்! உனக்கென்று எப்படியும் ஒரு வேலை காத்துக் கொண்டுதான் இருக்கும். இல்லாததையெல்லாம் நினைத்து நீயாக மனத்தைக் கெடுத்துக் கொள்ளாதே. நிம்மதியாயிரு'' என்று அவன் முகமும் மனமும் வாடுவதைப் பொறுக்க முடியாமல் அம்மா ஆறுதல் கூறும் வேளையில் அவனுக்குச் சிறிது மன அமைதி கிடைக்கும்.

சித்திரா பௌர்ணமிக்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்தன. 'பூபதிக்கு இன்னொரு கடிதம் எழுதலாமா அல்லது ஒரேயடியாக மல்லிகைப் பந்தலை மறந்து விட்டு வேறு கல்லூரிகளுக்கு முயற்சி செய்யலாமா?' என்று அவன் தயங்கிக் கொண்டிருந்த போது அந்த நல்ல செய்தி வந்து சேர்ந்தது. அவ்வளவு நாட்கள் அவனைக் காக்க வைத்ததற்கு வட்டியும் முதலுமாகச் சேர்த்து வருவது போல் அன்று பகல் ஒரு மணித் தபாலில் மூன்று தனித் தனிக் கடிதங்கள் மல்லிகைப் பந்தலிலிருந்து அவனுக்கு வந்தன. அந்தக்

கடிதங்கள் கைக்குக் கிடைத்த போது அவன் அடைந்த மகிழ்ச்சியும் ஆர்வமும் எல்லையற்றவையாக இருந்தன. பூபதி தன் கடிதத்தைக் கண்டு அதில் தான் வேண்டிக் கொண்டிருந்த படி தனக்கு மல்லிகைப் பந்தல் கல்லூரியில் வேலை கொடுப்பார் அல்லது விரும்பா விட்டால் கொடுக்க மாட்டார் என்று மட்டும்தான் சத்தியமூர்த்தி எதிர்பார்த்திருந்தான். அவரோ அவனுக்கு ஆர்டரும் அனுப்பி விட்டுத் தனியாக ஒரு கடிதமும் எழுதி யிருந்தார். ஆர்டர் கல்லூரி அலுவலக மூலம் தனியாக வேறோர் உறையில் வந்திருந்தது. மூன்றாவது கடிதம் பாரதியிடமிருந்து வந்திருந்தது. படிப்பதற்கு மனம் முந்துகிற அந்தக் கடிதத்தை இறுதியில் படித்துக் கொள்ளலாம் என்று வைத்து விட்டுப் பூபதியின் கடிதத்தை முதலில் பிரித்துப் படிக்கலானான்:

"அன்புக்குரிய இளைஞர் சத்தியமூர்த்திக்கு அநேக ஆசிகள். உங்கள்.... கடிதம் கிடைத்தது. மல்லிகைப்பந்தல் கல்லூரியில் வேலை பார்க்க வேண்டும் என்று நீங்கள் மிகுந்த ஆர்வம் கொண்டிருப்பதாக எழுதியிருக்கிறீர்கள். எடுத்த எடுப்பில் உங்களைப் பார்த்தவுடன் தமிழ் விரிவுரையாளர் பதவியை உங்களுக்குத்தான் தர வேண்டும் என்று எனக்கே தோன்றியது. ஆனால் நமது சந்திப்பின் முடிவில் நீங்கள் பேசிய சில வார்த்தைகள் என் மனத்தை மிகவும் ஆழமாகப் புண்படுத்தி விட்டன. உங்களைத் தவிர வயதும் அநுபவமும் அதிகமாக உள்ள வேறு சிலரும் இந்தப் பதவிக்கு விண்ணப்பித்திருக்கிறார்கள். இருந்தாலும் இப்போது உங்களையே இந்தப் பதவிக்கு நான் நியமித்திருக்கிறேன். ஆர்டர் கல்லூரி அலுவலகத்திலிருந்து தனித் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும். நல்ல ஆசிரியர்கள்தான் என்னுடைய கல்லூரியின் செல்வம். நீங்கள் என்னுடைய கல்லூரிக்கு ஆசிரியராக வந்து பாடங்கள் கற்பிப்பது தவிர மல்லிகைப்பந்தல் கல்லூரியின் அநுபவங்கள் உங்களுக்கே சில நல்ல பாடங்களைக் கற்பிக்கும் என்பது என் கருத்து. நான் எதிர்பார்க்கிற பணிவும் விநயமும் நாளடைவில் தானாகவே உங்களிடம் ஏற்பட்டு விடும் என்று நம்புகிறேன்...."

என்று மிகவும் சுருக்கமாகக் கடிதத்தை முடித்திருந்தார் பூபதி. இந்தக் கடிதத்தில் ஒரே ஒரு வாக்கியத்தை மட்டும் இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பப் படித்தான் சத்தியமூர்த்தி. 'மல்லிகைப் பந்தல் கல்லூரியின் அநுபவங்கள் உங்களுக்கே சில நல்ல பாடங்களைக் கற்பிக்கும் என்பது என் கருத்து' என்று எழுதியிருக்கும் வாக்கியத்தை எந்த அர்த்தத்தில் எப்படிப் புரிந்து கொள்வது என்று தயங்கினான் அவன். தனக்கு ஓர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்ற அர்த்தத்தில் அந்த வாக்கியம் எழுதப்பட்டுள்ளதா அல்லது குத்திக் காட்டும் முறையில் எழுதப்பட்டுள்ளதா என்று சத்தியமூர்த்தியால், விளங்கிக் கொள்ள முடியவில்லை. கல்லூரிக் கடிதத் தாளில் சம்பள விகிதம்—வந்து வேலையை ஒப்புக் கொள்ளவேண்டிய தேதி — எல்லாம் குறிப்பிட்டு ஆர்டர் டைப் செய்து அனுப்பியிருந்தார்கள். நிர்வாகி என்ற முறையில் அந்த ஆர்டரின் கீழேயும் பூபதிதான் கையொப்பமிட்டிருந்தார். கல்லூரி கோடை விடுமுறைக்குப் பின் திறக்கப்படும் முதல் நாளிலேயே அவன் மல்லிகைப் பந்தலுக்கு வந்து வேலையை ஒப்புக் கொண்டு விட வேண்டும் என்று ஆர்டரில் கண்டிருந்தது. பூபதியின் கடிதத்தையும் கல்லூரி ஆர்டரையும், மடித்து வைத்து விட்டுப் பாரதியின்

> **பொன்மொழி**
>
> ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தேவைகளை நிறைவேற்றியவுடன் தான் தெய்வத்துக்கு நன்றி செலுத்துவ தென்று வைத்துக்கொண்டு தெய்வமும் அப்படிப்பட்ட நன்றியிலேயே திருப்தியடைந்து விடுமானால், அப்புறம் சர்க்கார் அதிகாரிகளுக்கும் தெய்வத்துக்கும் என்ன வித்தியாசம் இருக்க முடியும்?

கடிதத்தை எடுத்து ஆவலோடு பிரித்துப் பார்த்தான் அவன். சென்ற கடிதத்தில் வைத்திருந்ததைப் போலவே இந்தக் கடிதத்திலும் இரண்டு மூன்று குடைமல்லிகைப் பூக்களை மறக்காமல் சொருகியிருந்தாள் அவள்.

"........................

என் இதயமாகிய பீடத்தில் யாருடைய ரோஜாப் பாதங்கள் பதிந்து கொண்டிருக்கின்றனவோ அவருக்கு அநேக கோடி வணக்கங்களுடன் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். என்னுடைய முன் கடிதத்தில் நான் உங்களை வேண்டிக் கொண்டிருந்தபடி அப்பாவுக்கு நீங்கள் எழுதிய கடிதத்தை அவர் வெளியே போயிருந்த போது அவருக்குத் தெரியாமல் நானும் எடுத்துப் படித்தேன். அவ்வளவு அருமையான இலக்கிய நயம் நிறைந்த கடிதத்தைப் படித்த பின்பும் அப்பாவால் எப்படி மனம் நெகிழாமல் இருக்க முடியும்? வேறு ஒரு சமயமாயிருந்தால் அப்பாவை உங்களுக்

குச் சாதகமாக நினைக்க விடாமல் கல்லூரி முதல்வர் பிடிவாதமாக ஏதாவது சொல்லிக் கெடுத்துக் கொண்டே யிருப்பார். ஆனால் இப்போது சூழ்நிலை எந்த விதத்திலும் கல்லூரி முதல்வருக்குச் சாதகமாக இல்லை. சில நாட்களுக்கு முன் இங்கு ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அதைப் பற்றி உங்களுக்கும் தெரிந்திருக்க வேண்டியது அவசியம். இராஜாராமன் என்று ஒரு மாணவன் — பி. எஸ்ஸி. பரீட்சை முடிவுகள் செய்தித் தாளில் வெளியான தினத்தன்று தான் பரீட்சையில் தேறவில்லை என்பதற்காகக் கல்லூரி முதல்வரைக் குத்திக் கொலை செய்ய முயன்றான். 'பல்கலைக் கழகத்தார் நடத்துகிற பொதுப் பரீட்சையில் நீ தேறாமல் போனால் அதற்குக் கல்லூரி முதல்வர் எப்படி அப்பா காரணமாக முடியும்?' என்று அப்பா அந்தப் பையனை விசாரிக்கும்போது கேட்டார். அந்தப் பையனோ, 'கல்லூரி நாட்களிலிருந்தே நான் உருப்படாமல் போக வேண்டும் என்று பிரின்ஸிபல் திட்டமிட்டுக் கொண்டு சதி செய்தார் சார்' என்று ஒரே முரண்டு பிடிக்கிறான். பல்கலைக் கழகப் பரீட்சையில் அந்தப் பையன் தேறாமல் போனதற்குக் கல்லூரியின் முதல்வர்காரணமாகஇருக்க முடியாதென்று அப்பாவுக்குத் தெரிந்திருந்தாலும் இந்த நிகழ்ச்சியால் முதல்வரிடம் அவர் வைத்திருந்த நம்பிக்கை குறைந்திருக்கிறது. மாணவர்களைக் கொலை செய்யவும் துணிந்துவிடத் தூண்டுமளவுக்கு முதல்வரிடம் என்ன கெட்ட குணம் இருக்க முடியும் என்று அப்பா சிந்திக்கத் தொடங்கி யிருக்கிறார். முதல்வருக்குச் சம்பந்தமில்லாத பொதுப் பரீட்சையில் தான் தேறாமல் போனதற்கு முதல்வர் காரணம் என்று அந்தப் பையன் கூறுவது உணர்ச்சிவெறியால் இருக்கலாம் என்று தெரிந்திருந்தும் இப்படி ஒரு சம்பவம் நேர்ந்ததால் அப்பா மிகவும் மனம் குழம்பிப் போயிருக்கிறார். இந்தச் செய்தி பத்திரிகைகளில் வெளியானால் மல்லிகைப்பந்தல் கல்லூரியின் பெயர் கெட்டுவிடுமே என்று அஞ்சி மிகவும் சிரமப்பட்டுத் தடுத்திருக்கிறார். கல்லூரி முதல்வர் தோள் பட்டையில் கத்திக் குத்துக் காயத்தோடு நாலைந்து நாள் ஆஸ்பத்திரியில் இருந்தார். முதல் நாள் சம்பவம் நடந்த தினத்தன்று நானும் அப்பாவும் கல்லூரி முதல்வரைப் பார்ப்பதற்காக ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தோம். அப்பா ஆஸ்பத்திரியிலேயே முதல்வரைக் கண்டித்தார்.

''இளம் பிள்ளைகளை நிறைய மன்னித்த பின்பே திருத்த



முடியும். ஒரு பையன் நீங்கள் காரணமில்லாத ஒரு காரியத்துக்காக உங்களைக் கொலை செய்துவிடக் கத்தியைத் தூக்கிக் கொண்டு வரும் அளவு என்ன கெடுதலை நீங்கள் அவனுக்குச் செய்திருக்க முடியும் என்று எனக்குப் புரியவே இல்லை! இந்த விதமான அசம்பாவிதங்களில் இதுவே கடைசியாக இருக்க வேண்டும்'' என்று கடுமையான குரலில் அப்பா முதல்வரைக் கண்டித்த போது நானும் அருகில்தான் இருந்தேன். கேம்பிரிட்ஜில் படித்து ஆக்ஸ்போர்டில் டாக்டர் பட்டம் வாங்கி விட்டால் மட்டும் போதுமா? பையன்களிடம் அன்பும் நெகிழ்ச்சியும் கொண்டு பழகி அவர்களை வசப்படுத்தத் தெரியா விட்டால் என்ன பயன்? நீங்கள் உங்களுடைய பட்டுப் பாதங்களால் இந்தக் கல்லூரிக் காம்பவுண்டுக்குள் நடக்கப் போகிற முதல் தினத்திலிருந்து இந்தவிதமான வம்புகள் எல்லாம் தொலைந்து போகும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். நீங்கள் இங்கு விரிவுரையாளராக வந்தபின் எப்படிப் பட்ட முரட்டு இளைஞர்களும் உங்களைச் சுற்றிக் கைகூப்பிக் கொண்டு திரியப் போகிறார்கள்; பாருங்களேன். நீங்கள் இங்கே மல்லிகைப் பந்தலுக்கு வந்து விட்டுத் திரும்பிய தினத்தன்று மாலை வேறொரு முதியவருக்கு 'இண்டர்வியூ' நடத்தி முடித்து அவரை அனுப்பியபின் அப்பாவும் கல்லூரி முதல்வரும் தனியாக அமர்ந்து பேசிக் கொண்டிருந்ததை நானே என் செவிகளால் கேட்டேன். அப்போது கல்லூரி முதல்வர் உங்களைப் பற்றி அப்பாவிடம் என்ன சொன்னார் தெரியுமா?

'சத்தியமூர்த்தியைப் போல் இளம் பருவமும் தோற்றப் பொலிவும் கேட்பவர்களை மயக்கி விடுகிற பேச்சுக் கவர்ச்சியும் உள்ள இளைஞனால் மாணவர் மனங்களை விரைவில் கெடுக்க முடியும்' என்று நாவு கூசாமல் அப்பாவிடம் குறை சொன்னவர்தானே இவர்? அப்படிச் சொன்னவருக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும். அப்பப்பா! இந்த மனிதர் இருக்கிற இடத்தில் நெருப்புப் பிடித்து வெந்து போகும். நல்ல வேளையாக இவர் நினைத்தபடி எதுவும் நடக்க வில்லை. உங்கள் கடிதம் கிடைப்பதற்கு முன்பே அப்பா தமிழ் விரிவுரையாளராக உங்களைத்தான் நியமிக்க எண்ணியிருந்தார். உங்கள் கடிதம் கிடைத்தபின் அந்த எண்ணம் நிச்சயமாகி விட்டது. ஆனாலும் ஏனோ இத்தனை நாள் தாமதமாகியபின் நேற்றுத்தான் உங்களுக்கு ஆர்டர் டைப் செய்யச் சொல்லி ஹெட் கிளார்க்கினிடம் கூறினார். அப்பாவும் உங்களுக்குத் தனியாக ஒரு கடிதம் எழுதியிருப்பார் என்று நினைக்கிறேன். தெய்வம் நம்மைக் கை விட்டுவிட வில்லை. நீங்கள் இங்கு வந்து எங்கள் கல்லூரியில் பணி புரியப் போகிறீர்கள் என்ற ஞாபகத்தையே கொண்டாடும் மனத்தோடு நான் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். நான் கூடத் தமிழ் குரூப்' எடுத்துக் கொள்ளத் தீர்மானம் செய்துவிட்டேன். அப்பாவிடம் அவர் சம்மதிக்கிற சமயம் பார்த்து ஒரு வார்த்தை சொல்லிச் சம்மதம் பெற்ற பின் நிச்சயமாகத் தமிழ்ப் பிரிவில் நானும் சேர்ந்து விடுவேன். உங்களிடம் மாணவியாக இருந்து படிப்பது ஒரு பாக்கியம். இனி அது எனக்குக் கிடைக்கப் போகிறது. 'ஆர்டர்' கிடைத்ததற்கு நன்றி தெரிவித்து அப்பாவுக்கு ஒரு வரி எழுதி விடுங்கள். கல்லூரி திறக்கும் நாளன்று உங்களை ஆவலோடு எதிர்பார்க்கிறேன். உங்களுக்கு மிகவும் விருப்பமான மல்லிகைப் பந்தலின் மணம் மிகுந்த பூக்கள் இரண்டையும் இந்தக் கடிதத்தில் சொருகியிருக்கிறேன்...... உங்கள் பாரதி.''

இந்தக் கடிதத்தைப் படித்ததும் இப்படிக் கூட ஓர் அன்பு உலகத்தில் உண்டா என்று ஆச்சரியம் அடைந்தான் சத்தியமூர்த்தி. உடனே பூபதிக்கு நன்றி தெரிவித்து ஒரு கடிதமும் எழுதினான். அந்தக் கடிதத்தைத் தபாலில் சேர்த்து விட்டு அவன் வீடு திரும்பிய போது அன்றொரு நாள் மோகினியோடு கோவிலில் பார்த்த அந்தச் சிறுவன் உள்ளே செல்வதா திரும்பிப் போய் விடுவதா என்ற தயக்கத்தோடு வீட்டு வாசலில் வந்து நின்றுகொண்டிருப்பது தெரிந்தது.

''என்ன தம்பீ?''

''சார்! அக்கா உங்களைப் பார்த்து ஒரு சங்கதி சொல்லி விட்டு வரச் சொன்னாங்க.....''

''சொல்லேன்! என்ன சங்கதி அது?''

''சித்திரா பௌர்ணமியன்று மாலை ஏழு மணிக்குத் தமுக்கம் பொருட்காட்சியில் மோகினி அக்காவோட நாட்டியம் இருக்கு. அதுக்கு நீங்க அவசியம் வரணுமின்னு அக்கா ஆசைப்படறாங்க! 'வேறே யாருக்கும் தெரியப் படாது. உடனே இதைப் போய் அவரிடம் சொல்லி விட்டு வா'ன்னாங்க. இந்த வீட்டைக் கூட அக்கா சொன்ன அடையாளத்திலிருந்துதான் நான் தேடிக் கண்டு பிடித்தேன்.''

''சரி! வருவதற்கு முயற்சி செய்கிறேன் என்று உன் மோகினி அக்காவிடம் போய்ச் சொல்.''

''அப்படிச் சொல்லாதீங்க சார். கண்டிப்பா வரேன்னு சொல்லுங்க—

நீங்க வரேன்னு சொன்னாத்தான் அக்கா வுக்கு நிம்மதி...''

சத்தியமூர்த்தியிடமிருந்து சரியான பதில் கிடைக்கிற வரை போவதில்லை என்பது போல் விடாப் பிடியாக நின்று கொண்டிருந்தான் அந்தப் பையன். ஏற்கெனவே பல விதமாகப் புண்பட்டுப் போயிருக்கும் அந்த அபலையின் மனத்தைத் தானும் புண்படுத்துவானேன் என்ற எண்ணத்தோடு, ''நான் அவசியம் உன் அக்காவின் நாட்டியத்தைப் பார்க்க வருகிறேன் தம்பி!'' என்று மேலும் நம்பிக்கை யளிக்கிற விதத்தில் சொல்லி அந்தப் பையனை அனுப்பினான் சத்திய மூர்த்தி. வீட்டுக்குள் நுழைந்து பார்த்தால் அப்பா அம்மா எல்லாரும் கூடத்தில்தான் இருந்தார்கள். ஆர்டரை எடுத்து அப்பாவின் கையில் கொடுத்தான் அவன். அதைக் கையில் வாங்கிக் கொண்டதும் பிரித்துப் பார்க்காமலே, 'என்னது?' என்று அவனை நிமிர்ந்து பார்த்துக் கேட்டார் அப்பா. சத்திய மூர்த்தி நிதானமாக மறுமொழி கூறினான்:

''மல்லிகைப் பந்தல் கல்லூரியிலிருந்து ஆர்டர் வந்திருக்கிறது.''

தன்னுடைய இந்தச் சொற்களைக் கேட்டு அம்மா, அப்பா, தங்கைகள் எல்லாரும் முகம் மலர்வதைக் கவனித்தான் அவன். ஆர்டரைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினார் அப்பா.

அம்மா அவனை நோக்கிக் கேட்டாள்: ''சம்பளம் என்ன போட்டிருக்கிறார்கள்?''

அம்மாவின் இந்தக் கேள்வியைப் பொறுத்துக் கொள்ளவும் முடியாமல் கோபித்துக் கொள்ளவும் முடியாமல்,

''சம்பளத்தைப் பற்றி என்ன வந்தது இப்போது? இருநூறு ரூபாய்க்கு மேல் வருகிறாற்போல் ஏதோ போட்டிருக்கிறார்கள்'' என்று பதில் கூறினான் அவன்.

''இன்று சாயங்காலம் பேச்சியம்மன் கோவிலில் நெய் விளக்குப் போட்டு விடு கல்யாணி! நான் சத்தியத்தின் நட்சத்திரத்துக்குப் பழைய சொக்கநாதர் கோவிலில் ஓர் அர்ச்சனையும் செய்து விடுகிறேன்'' என்று அம்மா கூறியபோது அந்தப் பக்தியும் பேதைமை நிறைந்ததாகவே தோன்றியது சத்திய மூர்த்திக்கு.

'ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தேவைகளை நிறைவேற்றியவுடன்தான் தெய்வத்துக்கு நன்றி செலுத்துவது என்று வைத்துக் கொண்டால் என்ன ஆவது? அப்படிப்பட்ட நன்றியிலேயே தெய்வமும் திருப்தியடைந்து விடுமானால் அப்புறம் சாதாரணமான சர்க்கார்

## என்ன கவலையோ?

''உங்க தலைமயிர் எப்படி உதிர்ந்தது?''
''கவலைதான்!''
''எதைப் பற்றி?''
''தலைமயிர் உதிர்வதைப் பற்றித்தான்!''

அதிகாரிகளுக்கும் தெய்வத்துக்கும்என்ன வித்தியாசம் இருக்க முடியும்? ஆர்டர் அனுப்பியவுடன் நன்றி செலுத்திப் பூபதிக்கு நான் எழுதிய கடிதத்துக்கும் அம்மாவின் அர்ச்சனைக்கும்தான் என்ன வேறுபாடு?' என்று நினைத்து வியந்தான் சத்தியமூர்த்தி.

''அண்ணா! இந்த வேலை எப்படியும் உனக்குக் கிடைத்து விடும் என்று எனக்குத் தெரியும். நீ இண்டர்வ்யூவுக்குப் புறப்பட்டுப் போன அன்று இரவே நான் கோவிலில் பூக்கட்டிவைத்துப் பார்த்துத் தெரிந்து கொண்டேன்'' என்று தனியாக அவன் அருகே வந்து தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டாள் தங்கை ஆண்டாள். நாலைந்து முறை கண்ணாயிரத்தைப் பார்க்கச் சொல்லித் தன்னைத் துன்புறுத்திவிட்ட காரணத்தினால் இன்று எதிர்பாராதநிலையில் இந்த ஆர்டர் கிடைத்ததைக்கண்டதும் தந்தை தன்னிடம் மனத்தை விட்டுப் பேசவோ மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளவோ முடியாமல் தயங்கி வெட்கப்படுகிறார் என்பதையும் அப்போது அவனால் புரிந்து கொள்ள முடிந்தது. அன்று மாலையில் அவன் குமரப்பனைச் சந்திக்கப் போயிருந்தான். மல்லிகைப் பந்தல் கல்லூரியிலிருந்து தனக்கு ஆர்டர் கிடைத்து விட்ட செய்தியைச் சத்தியமூர்த்தி மகிழ்ச்சியோடு தன் நண்பனிடம் தெரிவித்தான். அந்த நல்ல செய்தி குமரப்பனுக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கிற்று. இருவரும் வழக்கம் போல் உலாவப் போனார்கள். திரும்பி வரும் போது குமரப்பனே தற்செயலாகச் சித்திரைப் பொருட்காட்சியைப் பற்றிப் பேச்சை ஆரம்பித்தான்.

''சத்தியம்! சித்திரைப் பொருட்காட்சிக்கு ஒரு நாள் போக வேண்டும். எங்கள் பத்திரிகைக்குப் பாஸ் வந்திருக்கிறது. உனக்கு என்றைக்கு வசதிப்படும் என்று சொன்னால் அன்றைக்கு நாம் இருவரும் போய் வரலாம்.''

''பௌர்ணமியன்று போகலாம் குமரப்பன்! நான் ஏற்கெனவே பௌர்ணமியன்று அந்தப் பொருட்காட்சிக்குப் போகலாமென்று நினைத்திருந்தேன்.''

''ஐயையோ! அழகர் ஆற்றில் இறங்குகிற நாளில் பார்த்தா போக வேண்டும் என்கிறாய்? கூட்டம் தாங்க முடியாதே? போதாத குறைக்குச் சித்திரா பௌர்ணமியன்று நாட்டியக் கலைமணி குமாரி மோகினியின் ஆண்டாள் நடனம் வேறு ஏற்பாடாகி யிருக்கிறது.''

''அதையும்தான் பார்ப்போமே?'' என்று சிரித்துக் கொண்டே சொன்னான் சத்தியமூர்த்தி. குமரப்பனும் ஒருவாறு அதற்குச் சம்மதித்தான். சித்திரா பௌர்ணமியன்று மாலை ஐந்துமணிக்கே வீட்டை விட்டுப் புறப்பட வேண்டும் என்று பேசிக் கொண்டு பிரிந்தார்கள் நண்பர்கள். நடுவில் ஒரு நாள்தான் இருந்தது. அதுவும் வேகமாகக் கழிந்து விட்டது. பௌர்ணமியன்று காலையில் மோகினியக்கா ஞாபகப்படுத்துமாறு சொல்லி அனுப்பியதாக மறுபடியும் அந்தச் சிறுவன் சத்தியமூர்த்தியிடம் வந்து விட்டுப் போனான்.

குமரப்பன் அன்று மாலை நாலரை மணிக்கே சத்தியமூர்த்தியின் வீட்டுக்கு வந்து விட்டான். இருவருமாகப் புறப்பட்டுத் தமுக்கம் பொருட்காட்சிமைதானத்துக்கு யானைக்கல் கல்பாலம் வழியாக நடந்தே சென்றார்கள். பொருட்காட்சியின் பகுதிகள் எல்லாவற்றையும் நன்றாகச் சுற்றிப் பார்த்து விட்டு மோகினியின் நாட்டியம் நடைபெற இருந்த திறந்தவெளி அரங்குக்குள் அவர்கள் நுழையும் பொழுது ஆறே கால் மணி. கூட்டம் எள் போட்டால் விழ இடமில்லை போலக் கூடியிருந்தது. அரங்குக்கு மிக அருகில் இரண்டாவது வரிசையில் வசதியான இடத்தில் நடுவாக உட்கார்ந்து கொண்டிருந்தார்கள் சத்தியமூர்த்தியும் குமரப்பனும்.

அப்போதும் அந்தச் சிறுவன் வந்து கூட்டத்தை நன்றாக உற்றுப் பார்த்து இரண்டாவது வரிசையில் சத்தியமூர்த்தி அமர்ந்திருப்பதைக் கண்டதும் முக மலர்ச்சியோடு திரும்பிச் சென்றான். முன் வரிசையில் வேறு சில பிரமுகர்களோடு கண்ணாயிரமும் தென்பட்டார். சிறிதும் தாமதமில்லாமல் சரியாக ஏழு மணிக்கு நாட்டியம் ஆரம்பமாகி விட்டது. அரங்கை மறைத்துக் கொண்டிருந்த திரை விலகியதும் பாட்டும் தாளமும் சலங்கை ஒலியுமாகத் தெரிந்த முதல் காட்சியே சத்தியமூர்த்தியை மெய் சிலிர்க்கச் செய்தது.

'தன்னுடைய வாழ்வையும் உடல் பொருள் ஆவி முதலிய சகலத்தையும் கண்ணபிரானோடு சேர்க்குமாறு காதற் கடவுளாகிய மன்மதனை ஆண்டாள் வேண்டிக் கொள்வதாக' ஆரம்பமாகும் நாச்சியார் திருமொழிப் பாசுரங்களோடு மோகினியின் நாட்டியம் தொடங்கியது. மோகினி ஆண்டாளாக நிற்க அவள் எதிரே கரும்பு வில்லில் மலர்க் கணை தொடுக்கும் கோலத்தில் இன்னொரு பெண் மன்மதனாக ஆண் வேடத்தில் நின்றாள்.

''வானிடை வாழும் அவ்வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தஅவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப
ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க்கென்று
உன்னித்து எழுந்தஎன் தடமுலைகள்
மானிடவர்க்கு என்று பேச்சுப்படின்
வாழ கில்லேன் கண்டாய்
மன்மதனே!''

என்ற விருத்தத்தை ஸாவேரி ராகத்தில் கெஞ்சி வேண்டிக் கொள்கிற குழைவோடு பாடியவாறே மன்மதனை நோக்கிக் கைகூப்பினாள் மோகினி. மன்மதனை வணங்கிக் கெஞ்சும் கண்களும் தாமரை மொட்டுப் போல் அழகாகக் கூப்பிய கையுமாக அவளுடைய அந்தத் தோற்றம் மிக வனப்பாயிருந்தது. ஆண்டாளையும் மன்மதனையுமே நேரில் கண்டு கட்டுண்டிருப்பது போல் கூட்டம் பேரமைதியில் ஒடுங்கிப் போயிருந்தது. 'கமல வண்ணத் திருவுடை முகத்தில் இருக் கண்களால் திருந்த நோக்கு எனக்கு அருளு கண்டாய்' என்று அடுத்த பாசுரத்தின் கடைசி வரிக்கு அவள் அபிநயம் பிடித்தபோது தன் முகத்தையே உற்றுப் பார்ப்பதைக் கண்டு சத்தியமூர்த்தி கூச்சத்துடனே தரையைப் பார்த்தான். 'கேசவநம்பியைக் கால்பிடிப்பா ளென்னுமிப் பேறு எனக்கு அருளுகண்டாய்' என்று மற்றொரு பாசுரத்தின் கடைசி வரிக்கு அபிநயம் பிடித்த போதும் அவள் சத்தியமூர்த்தியையே பார்த்தாள். மீனாட்சி கோவில் பிராகாரத்தில் அவன் தன்பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டதை இப்போது அவன் நினைத்துக் கொண்டான். அந்த நினைப்பால் அவன் உணர்ச்சி வசப்பட்டுக் கண்கலங்கினான். அப்போது யாரோ பின்வரிசையிலிருந்து தோள்பட்டையைத் தட்டிக் கூப்பிடுவதாகத் தோன்றவே இமைப் போது திரும்பிப் பார்த்தான் சத்தியமூர்த்தி. வந்து நின்றது அந்தச் சிறுவன்தான்.

அந்தச் சிறுவன் தன்னிடம் ஏதோ சொல்வதற்காகச் சிரமப்பட்டு வழி உண்டாக்கிக்கொண்டு அங்கே வந்திருப்பது அவனுக்குப் புரிந்தது. (தொடரும்)


என்ன இது அநசூயா மாதிரி இரும்பு ஆணி, நட்டு, போல்டு எல்லாத்தையும் கொண்டு வைத்துப் பரிமாறுகிறாய்?
நீங்க தானே ஆகாரத்திலே இரும்புச் சத்து சேரணும்னு சொன்னீர்


என் நாவலைப் படித்தீர்களா?
ஓ! படித்தேன்!
என் மற்ற நாவல்களுக்கும் இதுக்கும் என்ன வித்தியாசம்?
அவைகளைப் போல் இதைப் படித்து விட்டு அப்படி இலேசா எறிந்து விட முடியாது...


... கொஞ்சம் பலத்தை உபயோகப் படுத்த வேண்டும்!
? ! !


சார்! டிபன் வந்திருக்கு!


சார்! உங்களுக்கு கூல் டிரிங்க் வந்திருக்கு!


சார்! உங்களுக்கு டெலிபோன் வந்திருக்கு!


நான் உங்க திண்ணைப் பள்ளியின் பழைய மாணவன்
சரி! உட்காருங்கள்!


? ? ?

சாமா

# மறக்கமுடியாத திரைப்படங்கள்



# சிந்தாமணி

**ப**ல வாரங்கள் பல ஊர்களில் ஓடியதற்காக மட்டும் ''சிந்தாமணி''யை மறக்க முடியாத திரைப் படம் என்று சொல்வதற்கில்லை. ரஸிகர்கள் என்றுமே மறக்க முடியாத பாடல்கள் நிறைந்த படம் அது.

ஆம், பாகவதர் பாடிய படம் என்றால் திரளான மக்கள் தியேட்டர்களில் கூடிக் கண்ணை மூடிக்கொண்டு அவர் பாட்டை ரசிப்பார்கள். . ''சிந்தாமணி''யில் பாகவதர் தோன்றிய இடங்களிலெல்லாம் பாடினார். பாடிய இடங்களிலெல்லாம் தோன்றினார். சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பொழிந்தது போல் என்று இனிமையான விஷயத்துக்கு உபமானம் கூறுவார்கள். ஆனால் பாகவதரின் கந்தர்வ கானம் உண்மையிலேயே அந்த உதாரணத்துக்கு எடுத்துக்காட்டாக இருந்தது. தேனிலும் இனிய அந்தக் கான இன்பத்தில் லயித்தவர்கள் படம் பார்க்கிறோம் என்பதையும் மறந்து கண்ணை மூடிக்கொண்டு தங்களையும் மறந்து பாட்டுக் கேட்டனர். அதனால் பாகவதர் நடிக்க வேண்டிய அவசியமே இல்லாமற் போய்விட்டது!

**''மாயப் பிரபஞ்சத்தில்**
**ஆனந்தம் வேறில்லை''**

என்ற பாடலையும்,

**''ராதே உனக்குக் கோபம் ஆகாதடி''**

என்ற பாட்டையும் அன்று பாடாதவரில்லை. தமிழ் பேசும் படத்துக்குத் 'தமிழ் டாக்கி' என்ற பெயருக்குப் பதிலாக, 'தமிழ்ப் பாட்டி' என்று பெயர் மாறிவிடுமோ என்று அஞ்சும் அளவுக்குத் தியாகராஜ பாகவதர் புரட்சி செய்து விட்டார்.

பாகவதர் கிராப், பாகவதர் ஷர்ட், பாகவதர் கச்சம், பாகவ்தர் ஜவ்வாதுப் பொட்டு, பாகவதர் அங்கவஸ்திரம் — என்று அவர் சம்பந்தப்பட்டவைகளெல்லாம் தனி 'மவுஸ்' பெற்று விட்டன.

கே. அசுவத்தம்மாவும் தமக்கே உரிய தேன்குரலில் பாகவதருக்கு ஈடு கொடுத்து அருமையாய்ப் பாடியிருக்கிறார். ''கண்ணா நின் திவ்ய தரிசனம் தரலாகாதா'', ''ஜனனம் எடுத்தேன்'', ''கிருஷ்ணா கிருஷ்ணா முறையே கேள் நீ'' என்ற பாடல்களின் மூலம் காலஞ்சென்ற அசுவத்தம்மா இன்னும் வாழ்கிறார். ''யமுனா தீர விஹாரி'' என்ற நாமாவளி அசுவத்தம்மாவின் குரலில் இன்னும் செவியில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

சிந்தாமணியின் மூலக் கதை தெலுங்கு. அது ஆந்திர நாடுகளில் நாடகமாக நடிக்கப்பட்டு மிகப் பிரசித்தி அடைந்து வந்திருக்கிறது. இதைத் தமிழாக்கித் திரைக்கதை வசனம் எழுதியவர் அய்யலு சோமயாஜுலு.



ஒய். வி. ராவ்

கல்கத்தாவில் ஒரு ஸ்டுடியோவை ஏற்பாடு செய்யப் போன டைரக்டர் ஒய். வி. ராவுக்கு ஸ்டுடியோ அதிபர்களிடையே ஏகப்பட்ட கிராக்கி ஏற்பட்டுவிட்டது. சென்னை திரும்புகையில் அவருடன் தேவதத்தா பிலிம் ஸ்டுடியோ மானேஜரும் கர்ம சிரத்தையாகச் சென்னை வந்து ரூபாய் பத்தாயிரத்துக்கு ராயல் டாக்கீஸாருடன் சிந்தாமணிக்குப் படப்பிடிப்பு ஒப்பந்தம் எழுதிக் கொண்டு போனார் என்பதைக் கேட்டால் இந்தக் காலத்தில் யாராவது நம்புவார்களா?

ஒய். வி. ராவ் படத்தை டைரக்ட் செய்வதற்கு மட்டும்தான் ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்தார். ஆனால் பில்வமங்களின் நண்பன் பாகத்தையும் ஏற்று நடிக்கும்படியாயிற்று.

பி. எஸ். சீனிவாச ராவ் என்ற இளைஞர் ஒருவருக்கு அந்தப் பாகம் கொடுக்கப்பட்டது.

அவர் டைபாய்டு ஜுரத்தில் படுத்து விட்டார். வேறு யாரும் அப்பாகத்தை ஏற்றுக் கொள்ள முன்வரவில்லை. வேறு வழியில்லாமல் டைரக்டர் ஒய். வி. ராவ் அவர்களே அந்தப் பாகத்தை ஏற்க நேர்ந்தது. பின்னல், உப்புச் சப்பில்லாத பாத்திரம் எனக் கருதி அந்த வேஷத்தை ஏற்று நடிக்க மறுத்தவர்கள் 'ஓகோ! இந்த அளவுக்கு இதில் விஷயம் இருக்கிறதா?' என்று அதிசயித்தனர்.

கிருஷ்ண பரமாத்மாவாகவும், தெருவில் பாடிக்கொண்டு போகும் சாதுவாகவும் வந்து எல்லோரையும் மயக்கியவர் செருகளத்தூர் சாமா. அவர் அந்த நாளில் திரைப் படங்களின் நிரந்தரக் கிருஷ்ண பரமாத்மாவாக விளங்கி வந்தார்! பகவானுக்கு உரிய தோற்றமும், அந்தத் தோற்றத்துக்கு ஏற்ற விதத்தில் சொந்தக் குரலில் பாடும் திறமையும் அவர் பெற்றிருந்தார்.

டைரக்டர் ஒய். வி. ராவைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது அவர் கூறிய சுவையான சம்பவம் நினைவுக்கு வருகிறது.

பில்வமங்கள் பாம்பைப் பிடித்துக்கொண்டு சுவரேறிக் குதிக்கும் காட்சியைப் படமாக்க முக்கியமான பாத்திரமான பாம்பு தேவைப் பட்டது. அதைத் தேடிப் போக வேண்டிய அவசியமின்றி ஸ்டுடியோவுக்கு அருகிலேயே ஒரு பாம்பு இவர்களிடம் வந்து சிக்கியது. அதைப் பிடித்து, இரண்டு மூன்று நாட்கள் வைத்திருந்து படப் பிடிப்பைத் தொடங்கினர். பில்வமங்கள் சுவரேறிக் குதிக்கும் கட்டத்தில் பாகவதர் பாம்பைப் பிடித்துக் கொண்டு அவ்வாறு நடிக்கப் பயந்தார். டைரக்டர் ஒய். வி. ராவ் பாகவதருக்காக நடித்துக் காட்டினார். அப்பொழுது அந்தப் பாம்பு இறந்து விட்டதென்பது தெரிய வந்தது! அந்த இறந்த பாம்பைப் பிடிக்கக்கூடப் பாகவதர் அன்று பயந்து நடுங்கினாராம். அவருக்குத் தைரியம் கூறி ஒருவாறு அந்தக் காட்சியை எடுத்து முடித்தார்களாம்.



எல். நாராயண ராவ்

''சிந்தாமணி''யில் அழியாப் புகழ்பெற்ற நடிகர் எல். நாராயண ராவ். அவர் இப்பொழுது புகழுடம்பு பெற்று விட்டார். அவர் சிறந்த ஹாஸ்ய நடிகர். ஆழ்வார் செட்டியாக வந்து கண்டல் விற்று எல்லாருடைய உள்ளத்திலும் இடம் பெற்றவர் அவர்.

மறக்க முடியாத ''சிந்தாமணி''ப் பாடல்களை இயற்றியவர் மதிப்புக்குரிய ஸ்ரீபாபநாசம் சிவன் அவர்கள். பாடல்கள் இயற்றும் திறமையோடு அவற்றுக்கு அருமையாக இசையமைக்கும் ஆற்றலும் கொண்டவர்.

இந்த நாட்களில் ஒரே பாட்டைப் படத்தில் பல்வேறு சூழ்நிலைகளில் பாடக் கேட்கிறோம் அல்லவா? 'பிளேபாக்' என்னும் நவீன முறையினல்தான் அது சாத்தியமாகிறது. அந்த நாட்களில் 'பிளேபாக்' என்ற சொல் திரைப்பட உலகில் அடிபட ஆரம்பித்திருந்ததே ஒழிய அதைக் கையாண்டவர்கள் யாரும் இல்லை. திரு ஒய். வி. ராவ், பிளேபாக் முறையை முதன் முதலில் கையாண்டு வெற்றி கண்டு விட்டதாகவே பலர் எண்ணினர்.



பின்னர்தான் அது பிளேபாக் இல்லை என்பதும் ஒய். வி. ராவின் கலை நுணுக்கத் திறமைதான் அவ்வாறு தங்களை நம்பவைத்தது என்றும் புரிந்து கொண்டனர்.

''சிந்தாமணி''யில் மறக்க முடியாத அதியற்புதக் காட்சி ஒன்று வருகிறது:

பிருந்தாவனத்து முனிபுங்கவர்களைச் சோதிக்க விரும்பிய சாது அவர்களிடம் ஒரு சிறு பேழையைக் காண்பித்து, ''பேழையின் உள்ளே இருக்கும் பொருளைத் தெரிவித்து அதைத் தானகத் திறந்து கொள்ளச் செய்ய வேண்டும்'' என்றார். எல்லாரும் முயன்று பார்த்துத் தோற்று விட்டனர். பில்வமங்களிடம் அதே கேள்வியைக் கேட்டபோது அவன் ''எங்கும் உள்ள பரம்பொருளே அங்கும் உள்ளான்'' என்று கூறியதும் பேழை திறந்து கொள்கிறது. அதனுள்ளே ருக்மிணி சமேதனாக வாசுதேவன் காட்சி தருகிறான்.

''இந்தக் காட்சிகளையெல்லாம் அக்காலத்தில் உள்ள வசதிகளை வைத்துக்கொண்டு நல்லபடியாகவே படமாக்கினேம். ஆனாலும் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. இந்தக் காலமாயிருந்தால் இன்னும் எவ்வளவோ சிறப்பாகச் செய்திருக்கலாம்....'' என்று ஆழ்ந்த சிந்தனையோடு ஒய். வி. ராவ் கூறினார்: ஒரு நல்ல டைரக்டருக்கு அதுதானே லட்சணம்! இருப்பதைக் கொண்டு திருப்தியடையும் சுபாவம் கலைஞனுக்கு இருந்துவிட்டால் அப்புறம் கலை வளருவது எப்படி?

- விஜயம்



# மேலைமலைச் சோலையிலே

ரா. வீ.

"விமானப் பயணம் செய்வது இது தானே உங்களுக்கு முதல் தடவை?"

"ஆமாம்!"

"அப்படியானால் கொஞ்சம் கர்ப்பூரமும் பாக்கும் வாங்கி வைத்துக் கொள்ளுங்கள்!"

"இன்னும் இரண்டொரு முக்கியமான பொருள்களை விட்டு விட்டீர்களே!"

"என்ன?" என்று வியப்புடன் வினவினார், சொன்னவர்.

"வெற்றிலை, பழம், தேங்காய்...."

"என்ன சார், என்னையே கேலி செய்கிறீர்களே! நான் நிசமாகத்தான் சார் சொல்லுகிறேன்...!"

"நானும் ஒன்றும் தவறாகச் சொல்லிவிடவில்லையே! அந்த நாளில் — அதாவது ரயில் வண்டி நம் நாட்டுக்கு முதன் முதலாக வந்த நாளில், மக்கள் அதை ஒரு தெய்வமாக மதித்துப் பூஜித்து வந்தார்களாம். வண்டி ஓடுவதற்காகவும் புறப்படுவதற்காகவும் அடிக்கும் மணியைப் பூசை செய்வதாக எண்ணிக் கன்னத்தில்கூடப் போட்டுக் கொள்வார்களாம். சிலர் கர்ப்பூரம் கொளுத்தித் தேங்காய்கூட உடைத்திருக்கிறார்கள் என்று என் அப்பாவுக்குத் தாத்தா — அதாவது என் கொள்ளுத் தாத்தா — சொல்லக் கேட்டிருக்கிறேன். அது போல...."

"என்ன சார், என்னையும் உங்கள் கொள்ளுத் தாத்தா காலத்தவனாகச் சேர்த்து விட்டீர்களே! அதற்குச் சொல்ல வில்லை, சார்!" சொன்னவருக்கு வயது எண்பத்து ஏழுதான்! "வானத்தில் பறக்கும் பொழுது சிலருக்கு வயிற்றைக் குமட்டிக் கொண்டு வரும். அப்பொழுது கர்ப்பூரத்தைக் கைக்குட்டையில் முடிந்து வைத்துக் கொண்டு முகர்ந்து பார்த்தால், சௌகரியமாய் இருக்கும். அதோடு கொஞ்சம் பாக்குத்தூளையும் வாயில் அடக்கிக் கொண்டால் இன்னும் நல்லது!"

அவர் சொன்ன யோசனையை அந்த நேரத்துக்கு நான் கேலி செய்து காற்றில் பறக்க விட்டாலும், கர்ப்பூரத்தை வாங்கிக் கைக்குட்டையில் முடிந்து கொள்ளவும் பாக்குத் தூளை வாங்கிப் பத்திரப்படுத்திக் கொள்ளவும் தவற வில்லை. காரணம் சொல்லவும் வேண்டுமா? நாலு பேருக்கு நடுவில் விமானப் பயணம் தனக்குப் புதிது என்று காட்டிக் கொள்ள யாருக்குத்தான் மனம் வரும்? நண்பர் பயமுறுத்தியது போல் ஏதாவது நேரும் போல் இருந்தால், நண்பர் சொன்ன முறையைப் பிறருக்குத் தெரியாமல் கையாண்டு காத்துக் கொள்ளலாம் என்ற எண்ணம் எனக்கும் எழுந்ததில் வியப்பில்லையே!

குறிப்பிட்ட நாளன்று, குறிப்பிட்ட நேரத்தில் விமானம் புறப்பட்டது. விமான உபசாரிணி ஒரு தட்டைக் கொண்டு வந்து என் எதிரே நீட்டினாள். அதில் ஒரு சிறு காகிதப் பை, பப்பர்மெண்ட் ஆகியவை இருந்தன. விமானப் பயணம் எனக்குப் புதிதல்ல என்பதைக் காட்டிக்கொள்ளும் தோரணையில், நான் எதையும் எடுத்துக் கொள்ளாமல், கையசைத்து விட்டேன்.

அவள் அப்பால் போனதும் பாக்குப் பொட்டணமும் கர்ப்பூரமும் முடிந்து வைத்திருந்த கைக்குட்டை இருக்கிறதா என்பதைப் பார்த்துக் கொள்ளச் சட்டைப் பையில்



கையை விட்டேன். தூக்கி வாரிப் போட்டது. கர்ப்பூரமும் பாக்குப் பொட்டணமும் பத்திரமாகத்தான் இருந்தன. எங்கே? என் சட்டைப் பையிலா? இல்லே; நான் உடைகள் எடுத்துச் சென்ற பெட்டியில். அந்தப் பெட்டி விமானத்தில் எங்கோ ஒரு மூலையில் பத்திரமாக இருந்தது. ஆண்டவன் அருளில் திருவனந்தபுரம் போனதும், என்னோடு என் பெட்டி நான் தங்க வேண்டிய வீடுடிக்கு வந்தது. பெட்டியைத் திறந்ததும் முதற் காரியமாக மறக்காமல் கர்ப்பூரத்தை எடுத்துக் கொண்டேன். பத்மநாப ஸ்வாமி கோவிலுக்குப் போனேன். கர்ப்பூரம் ஆண்டவனுக்குச் சேர வேண்டிய பொருள் அல்லவா? அதை அவன் சந்நிதிக்கே கொடுத்தேன். பாக்குப் பொட்டணத்தை என்ன செய்தேன் என்று கேட்கிறீர்களா? விமானத்தில் எடுத்துக் கொள்ளாமல் விட்ட பப்பர்மெண்டாக நினைத்து வாயில் போட்டுக் கொண்டேன்!

மறு நாள் நடுப் பகல் ஐம்பது பேர் உட்காரக் கூடிய பஸ்ஸில் நாங்கள் இருபத்தைந்தே பேர்கள் உட்கார்ந்திருந்தோம். சென்னையாக இருந்தால் எண்பது எண்பத்தைந்து பேர் இடித்த புளியாக அடைந்திருப்பார்கள். ஏன்? கேரளத்தில்கூட அப்படித் தான்! ஆனால் எங்களுக்கென்று பிரத்தியேகமாக அமர்த்திக் கொள்ளப்பட்ட அந்த பஸ், அனந்தபத்மநாபன் வழியனுப்ப, மேலேமலேச் சாரலிலே ஏறக்குறைய நூறு மைல்களுக்கு அப்பால் இருக்கும் சபரிகிரியை நோக்கிப் பயணமாயிற்று. சேர நன்னாட்டின் பூமியிலே மலை ஏற்றத்திலும், இறக்கத்திலும் வளைவிலும் சரிவிலும் பஸ் போகும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. அநாயாசமாக ஓட்டிய டிரைவரை ஒரு முறை பார்த்தேன். நல்ல கம்பீரமான ஆகிருதி. அஞ்சா நெஞ்சம் படைத்தவர். உறுதி மிக்கவர். முறுக்கி வளர்த்திருந்த நீண்ட மீசை அவரை இப்படியாக இனங் காட்டியது.

கேரள பூமி மலைப் பிரதேசமான பூமி. மலையின் இயல்புக்கேற்ப ஏற்றமும், தாழ்வும், வளைவும் நெளிவுமான பாதை. ஆங்காங்கே பாதையைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தார்கள். பஸ் பாதையைக் கீறிக் கொண்டு ஏறியும் இறங்கியும் ஓடுவதைக் காணக் காணக் குதூகலமாயிருந்தது. இத்தனை வளைவுகளிலும் இப்படிச் சுலபமாக, அநாயாசமாக இவர் பஸ் ஓட்டுகிறாரே என்று வியந்தோம்.

சில மைல்கள் மலைப் பாதையில் போன பின் பார்த்தால், ஒருபுறம் வானத்தை முட்டும் மலைகள்; அவற்றின் மீது வானவர்களோடு சரிநிகர் சமானமாக நின்று உரையாடும் மரங்கள்; இன்னொரு புறம் திரும்பினால் கதிகலங்க வைக்கும் பள்ளம்; அந்தப் பள்ளத்தி லிருந்து நம்மோடு உரையாட ஓடோடி வரும் மரங்கள்.

பட்டிக்காட்டான் யானை பார்த்த கதையாக, — இல்லை, இல்லை, பட்டினத்தான் மலை பார்த்த கதையாக, இவ்வழிக் காட்சிகளைத் திறந்த கண் மூடாமல் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றதில் கழுத்தை வலித்தது.

'சபரி மலைக் காட்டிலே யானை மந்தை மந்தையாக வரும் என்று சொல்வார்களே, இது வரை ஒரு யானைகூடத் தட்டுப்படக் காணுமே!' என்று எண்ணிக் கொண்டிருந்த நேரத்தில், பாதையில் போய்க் கொண்டிருந்த ஒரு சிலர் 'ஆனை இருக்கு, ஆனை இருக்கு!' என்று குரல் கொடுத்தார்கள்.

''எங்கே? எங்கே?'' என்று ஆவலோடு பார்வையை ஓட்டினோம். 'ஒரு வழிப் பாதை' யாக இருக்க வேண்டிய அப்பாதையில் எதிர்த்தாற்போல், நான்கைந்து யானைகள் கூட்டமாக வருவது போல் மரங்களை வெட்டி ஏற்றிக் கொண்டு லாரிகள்தான் ஒன்றன்பின் ஒன்றாக வந்தன. நாங்கள் 'டூரிஸ்டுகள்' என்றெண்ணி ஒரு வேளை அப்படி ஆவலைக் கிளறி விட்டார்களோ என்னவோ? அதை மறந்து, 'இத்தனை பெரிய மரங்களை லாரியின் இருபுறமும் எப்படித்தான் ஏற்றிக் கட்டிக் கொண்டு வருகிறார்களோ?' என்று வியக்க முற்பட்டு விட்டேன். இடையிடையே பாதையைச் சீர் செய்யும் வேலை வேறு நடந்து கொண்டிருந்தது. 'சரி, யாருக்கு யார் வழி விடப் போகிறார்கள்? இனி பெருத்த சண்டைதான். இராப் பொழுதை இங்கேயே கழிக்க வேண்டியதுதான்!' என்று நாங்கள் எண்ணியிருந்த



**மேலே உள்ள படம் :**

சபரி மலையைச் சேர்ந்த பம்பையாற்றிலே அணை கட்டும் வேலை மும்முரமாக நடைபெற்று வருகிறது.

**கீழே உள்ள படங்கள் :**

மலையை வெடி வைத்துத் துளைத்துச் சமைத்த சுரங்கப் பாதை. இதில் குழாய்களைப் பொருத்தி நீரைக் கக்கியிலிருந்தும் கக்கியிலிருந்து மின் நிலையத்துக்கும் எடுத்துச் செல்லப் போகின்றனர். துளைத்தெடுக்கும் பாறைகளை அப்புறப்படுத்தும் பணி டிராலிகளைச் சேர்ந்தது.

## " கயோனை - காய் "

"ஏன்டா, ஒருநாளைக்குக்கூட கிளப் பக்கம் எட்டிப் பார்க்கமாட்டே னென்கிறாயே?" என்று நண்பர்கள் கேட் கும்போதெல்லாம் குமாரசாமிக்கு ரொம்பவும் வருத்தமாக இருக்கும். மாலைப் பொழுதில் ஜாலியாகச் சீட்டா டிக் கொண்டிருக்க வேண்டும் என்று அவ னுக்கு மட்டும் ஆசை யில்லையா என்ன? ஆனால் மாலை ஐந்தரை மணிக்கு 'டாண்' என்று வீட்டுக்குத் திரும்பாவிட்டால் அவன் பெண்டாட்டி பத்திரகாளியாக மாறிவிடுவாள். என்ன செய்வது? அவ ளுக்கு லேடீஸ் கிளப், சமூக சேவை என்று ஏகப்பட்ட வேலைகள். குழந்தை களையும் வீட்டையும் பார்த்துக் கொள்ள ஆள் வேண்டாமா?



குமாரசாமி இப்படி ஏங்குகையில் ஒரு நாள் தினசரி மாலைப் பத்திரிகையில் ஒரு கட்டுரையைப் பார்த்துவிட்டுத் துள்ளிக் குதித்தான். மனைவி வீடு திரும்பியதும், "நண்பர்கள் சேர்ந்து புதிதாக ஆரம்பித் திருக்கும் கயோனை காய்க்கு நாளை முதல் நானும் போகப் போகிறேன்" என்று கூறிவிட்டு 'கயோனை காய்' என்பதற்கு என்ன அர்த்தம் என்பது பற்றியும் ஒரு விளக்கம் கொடுத்தான். யுக்தி பலித்தது. மறு நாள் முதல் மாலை நேரங்களைக் குமாரசாமி அரட்டையி லும் சீட்டாட்டத்திலும் ஆனந்தமாய்க் கழித்தான்.

அவன் மனைவியிடம் மன மாற்றத்தை உண்டாக்கிய அந்தக் 'கயோனை—காய்' என்பது என்ன? -அடுத்த பக்கம் பார்க்க!

நேரத்தில், லாரி டிரைவர்களும் எங்கள் பஸ் டிரைவரும் காட்டிய பொறுமையை என்ன வென்பது? ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்க முற்பட்ட மனப்பான்மையை என்னவென்பது? அத்தனை குறுகிய பாதையில், மேடும் பள்ளமுமான பாதையில் வேலை நடந்து கொண்டிருக்கும் பொழுது, 'ஓட்ட, ஓட்ட' என்று கூறி அவர்கள் வழி செய்து கொடுத்துக் கொண்டதை, நம் சென்னை நகரத்துக் கார் ஓட்டிகளும் கற்றுக் கொண்டு வந்தால், எவ்வளவோ நன்றாயிருக்கும்.

இதைப் பற்றியே பேசிக் கொண்டு வந்த எங்களிடையே பேச்சு கப்பென்று நின்றது. பஸ்ஸில் மரண அமைதி நிலவி விட்டது. காரணம் என்ன வென்று பார்த்தால் எதிரே ஒரு பாலம். மிகக் குறுகலானது. இருபுறமும் கைப் பிடியும் கிடையாது. குறுக்கே மரக் கட்டைகளைப் பரப்பி நெடுக்காகப் பலகை களைப் பரப்பியிருந்தார்கள்.

'இதற்கு மேல் பஸ் போகாது. நாம் எழுந்து நடக்க வேண்டியதுதான்' என்று எண்ணி எழுந்தேன்; பக்கத்தில் இருந்தவரை யும் எழுப்பினேன். இதைப் பார்த்த கண்டக் டர், "உட்காருங்கள், எதற்காக எழுந்திருக் கிறீர்கள்?" என்று கேட்டார்.

டிரைவர் திரும்பிப் பார்த்தார். நான் அவரது மீசையைப் பார்த்தேன். 'முன் சக் கரங்கள் இரண்டும் பாலத்தில் இருக்கின்ற னவா?' என்று கண்டக்டரைப் பார்க்கச் சொன்னார். பூனையின் நினைவு வந்தது. ஓரி டத்திலும் தட்டாமல் தன் மீசை நுழைந் தால் பூனை அத்தகைய இடங்களில் சுலபமாக நுழைந்து விடுமாம். அதே போலக் கண்டக் டர் இறங்கிப் பார்த்து விட்டு, 'ரைட்' கொடுத்ததும் வண்டி மரப் பாலத்தின் மீது ஓடியது. எங்கள் எல்லோருக்கும் மூச்சு முட் டியது. 'இன்று கூண்டோடு கைலாசம்தான்!' என்று தீர்மானித்து விட்டோம். ஐயப்பனை நினைத்துக் கொண்டோம்.

கடகட வெனச் சிரிப்பொலி எழுந்தது. வண்டி பாலத்தைத் தாண்டி விருந்தது. சிரித் தது ஆண்டவனோ? இல்லை, இல்லை! ஓர் அமெரிக்கர்! பஸ்ஸில் பிரயாணம் செய்த எங்களுள் ஒருவர் பயம் நீங்கிச் சிரித்த சிரிப்பு அது! பிரார்த்தனை பலன் தந்தது என்ற மகிழ்ச்சியில் எழுந்த சிரிப்பு அது!

இது போல் ஆண்டவனது அருளுதவி கொண்டு இன்னும் இரண்டு பாலங்களைக் கடந்தோம். மலை முகட்டில் எங்கள் எதிரே ஆங்கில எழுத்தான 'வி'யைத் திருப்பிப் போட்டாற்போல் பாதை திரும்பியது. அந் தக் கோணத்தில் பஸ் திரும்ப முடியாமல் நின்றது. பஸ்டிரைவர் என்ன செய்தார், தெரி யுமா? வண்டியை 'வி' முகட்டில் கொண்டு போய் நிறுத்தி விட்டு வண்டியை மேலே போக வேண்டிய பாதையில் பின்னாலேயே ஓட்டத் தொடங்கினார். ஒரு புறம் மலை, இன் னொரு புறம், அதலபாதாளமான பள்ளம். 'கரணம் தப்பினால் மரணம்' என்ற கதை தான். சிறிது தூரம் பின்னாலேயே ஓட்டி வந்த வர், ஒரு புறம் மலை நகர்ந்தாற் போல உள் ளடங்கியிருந்த இடத்தில் பஸ்ஸை ஒடித்துத் திருப்பி விடலாம் என்று தீர்மானித்தார். பஸ் பாதையை அடைத்துக் கொண்டு குறுக்கே நிற்கலாமே ஒழிய முன்பின் சென்று திரும்ப முடியாது. இப்படியிருக்கும் போது இந்த மனிதருக்கு ஏன் இந்த விளையாட்டு? டிரைவரா விளையாடுகிறார்? ஆண்டவன் அல் லவா ஆட்டிப் படைக்கிறார்! இப்படி எண் ணிப் பலர் கண்களை மூடிக் கொண்டு விட்ட னர். இருந்த இடத்திலேயே ஓர் அங்குலமும் இரண்டு அங்குலமும் முன்னுக்கும் பின்னுக்கு

மாய் ஓட்டி ஓடித்து பிரேக்கைப் போட்டு எப்படியோ பஸ்ஸைத் திருப்பி விட்டார். பஸ்ஸில் அப்பொழுது ஏற்பட்ட கைதட்டல் வானத்தை முட்டியது. 'பிரேக்'குக்குப் பதிலாக ஆக்ஸிலேட்டரை அவர் அமுக்கியிருந்தால்?' 'ஆண்டவன் ஒருவன் எதற்கு இருக்கிறான்?'

'வேறு எதற்கு? நான் படைத்த உலகிலே மனிதன் என்று ஒருவனைப் படைத்து அவனுக்கு அறிவைக் கொடுத்து, அவன் செய்யும் அற்புதங்களைக் கண்டு களிக்க!'

என் மனம் இப்படிப் பதில் அளிக்கவும், கேரள நாட்டிலே மின்சார நிலையம் அமைக்கப்பட இருக்கும் மொழியாறு என்னும் இடம் வரவும் சரியாக இருந்தது. அது மட்டுமா? மாலைக் கதிரவன் மலை வாயில் விழவும், மின்சார விளக்குகள் பளிச்சென்று ஒளி பரப்பவும்கூடச் சரியாக இருந்தது.

இந்த மின்சாரத்தைக் கண்டு பிடித்தானே ஒருவன், அவனை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். ஆண்டவனைப் போலவே அருவமாக இருந்து கொண்டு இந்த மின்சாரம் எத்தனை எத்தனை பெரிய விந்தைகளைச் செய்து விடுகிறது! வீட்டுக்கு ஒளி தருவதிலிருந்து பெரும் பெரும் தொழிற்சாலைகளை இயக்க உதவும் இந்த மின்சாரம் மூன்று வகையில் உற்பத்தி செய்யப்படுகிறது.

மலையிலிருந்து ஓடி வரும் மழை நீரைத் தேக்கி, அந்நீரைக் கொண்டு சக்கரங்களை இயக்கி மின்சாரம் உற்பத்தி செய்வது ஒரு வகை. இதை நீர் மின்சார நிலையம் என்பர்.

அனலைக் கொண்டு தயாரிக்கும் மின்சாரம் இன்னொரு வகை. இதை அனல் மின்சார நிலையம் என்று கூறுவர். நம் தமிழ் நாட்டு நெய்வேலியில் இவ்வகை மின்சார நிலையம் அமைக்கும் முயற்சி நடைபெற்று வருகிறது.

மூன்றாவது வகை அணு சக்தியைக் கொண்டு தயாரிக்கப்படும் மின்சாரம் ஆகும். இது அணு மின் நிலையம் எனப்படும். மாமல்லபுரத்துக்கு அருகில் இவ்வகை நிலையத்தை அமைக்கலாம் என்று யோசித்து வருகின்றனர். பம்பாய்க்கு அருகில்கூட அணு மின் நிலையம் அமைக்கப் பெருமுயற்சி நடைபெற்று வருகிறது.

பிரிட்டன் போன்ற மேல் நாடுகளில்கூட அணுசக்தி மின்சார நிலையங்களுக்குச் செலவு அதிகமாகின்றது என்றும், நீர் மின் நிலையமே சிக்கனமானது என்றும் கருதுகின்றனர். ஆகவே பொருளாதாரத்தைப் பொறுத்தமட்டில் ஏழையாகவே இருக்கும் இந்தியா அணு மின் நிலையங்களை அமைக்கு முன்னர் தீர்க்கமாக ஆலோசிக்க வேண்டியது அவசியமாகும்.

ஆண்டவன் படைத்த இவ்வுலகிலே ஒரு வேடிக்கை பாருங்கள்! நிலம் கால் பங்கு என்றால் நீர் முக்கால் பங்கு. நீர் ஆவியாகிப் பிறகு குளிர்ந்து மழையாகப் பொழிவதற்கு ஏற்ற வகையில் மேகங்களைத் தடுத்து நிறுத்த மலைப் பகுதிகளும் அதிகம். அதிலும் நம் பாரத நாடு இயற்கை வளம் கொழிக்கும்நாடு. மலைகளும், மலையாறுகளும் நிறைந்த நாடு. எனவே, நீரைக்கொண்டு மின்சாரம் உற்பத்தி செய்ய ஏற்ற நாடு. குறைந்த செலவில் நிறைய மின்சாரத்தைப் பெற வசதியுள்ள நாடு. அதுவும் கேரளத்தைச் சேர்ந்த இந்தப்

## "கயோனை - காய்!"

ஜப்பானிய மொழியில் கயோனை காய் என்றால் 'அகத்துக்காரியிடம் அஞ்சுவோர் சங்கம்' என்று அர்த்தம்! இத்தகைய ஒரு சங்கத்தில் தன் கணவன் அங்கத்தினராவதைக் குமாரசாமியின் மனைவி வரவேற்றதில் ஆச்சரியமென்ன?

ஆனால்...

அடுத்த பக்கம் பார்க்க

பம்பா — கக்கி ஆற்றுப் பகுதி இருக்கிறதே, இது மின் நிலையம் அமைப்பதற்கென்றே இயற்கையன்னை அமைத்துக் கொடுத்த இடமாகத் தோன்றுகிறது.

பம்பா கக்கி பிராஜக்டில் பணி புரியும் உயர்தர அதிகாரிகள் முதற்கொண்டு கீழ்த்தரச் சிப்பந்திகள் வரை தேசத்தின் பாராட்டுதல்களுக்குரியவர்கள். அவர்கள் செய்யும் பணி, விதை நெல்லின் பணியைப் போன்றது. அது தன்னை மாய்த்துத் தன்னைப் போன்ற நெல் மணிகளை ஏராளமாகத் தந்து நாட்டுக்கு உணவு தருவது போல் இவர்களும் தங்கள் நலனை மறந்து மக்கள் நலனுக்காகப் பணி புரிகிறார்கள் அல்லவா?

நல்ல நீர் வளமும் இயற்கை எழிலும் பொருந்திய பூமி இது. ஆண்டு ஒன்றுக்கு ஏறக்குறைய இருநூறு அங்குலம் மழை பொழிகிறது இப்பிரதேசத்தில். இந் நீரைத் தேக்கி அணை கட்டுவதற்கென்றே இயற்கையன்னை இருபுறத்திலும் மலைகளை வளர விட்டு இடையே ஆறுகளையும் ஓட விட்டிருக்கிறாள். பம்பையாறு ஓடும் இடத்தில் நாற்றெழுபத்தொரு அடி உயரத்துக்கு இருபுறமும் மலைகள் நிமிர்ந்து நிற்கின்றன. மலையின் மேல் பரப்பு வரை தொள்ளாயிரத்து இருபத்து நான்கு அடி அகலத்துக்கு அணை கட்டி நீரைத் தேக்கலாம். இவ்வேலை வெகு துரிதமாக நடைபெற்று வருகிறது. ஏறக்குறைய பத்தாயிரம் அடிகள் மலையைக் குடைந்து கரங்கம் அமைத்துக் குழாய்கள் வழியாக நீரைக் 'கக்கி' என்னும் இடத்தில் கட்டப் போகும் அணையோடு இணைக்கப் போகிறார்கள்.

மின்சார உதவி கொண்டு நவீன சாதனங்களோடு கூடிய வெடி வைத்து மலையைக் குடையும் வேலையில் இப்பொழுது தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள். கக்கியிலிருந்து மொழியாறு வரையும்கூட மலையைக் குடைந்து குழாய்கள் அமைத்து வருகிறார்கள். இவற்றின் வழியே பாயும் தண்ணீர் மின்சார உற்பத்திக்குச் சாதகமாகச் சக்கரங்களை இயக்கப் போகிறது. மொழியாறில் நிறுவப்படவிருக்கும் மின் நிலையத்தில் ஆறு ஜெனரேட்டர்கள் இயங்கப் போகின்றன. கக்கியிலிருந்து மொழியாறு வரை வரும் மலைச் கரங்கத்தின் நீளம் பதி

### "கயோஸை - காய்!"

குமாரசாமியின் மகிழ்ச்சி நீண்ட நாட்களுக்கு நிலைத்திருக்கவில்லை. ஜப்பான் தேசத்தில் ஏராளமாய் உள்ளது போல் இங்கும் அவன் 'அகத்துக்காரியிடம் அஞ்சுவோர் சங்கம்' ஒன்றினை ஸ்தாபித்தது சாமர்த்தியமான செயல்தான். ஆனால் ஒரு வாரத்துக்குள்ளாக அவன் மனைவி 'கணவனைக் கண்டு கலங்காதோர் சங்கம்' ஒன்றினைத் தோற்றுவித்து அதன் நிரந்தரத் தலைவியாகவும் ஆகிவிட்டாள்! ஆகக்கூடி குமாரசாமி பழைய குருடி கதையாகத் தினம் மாலை நேரங்களில் வீட்டுக்குக் காவல் இருக்கலானான்.



னெட்டாயிரம் அடிகளுக்கும் மேலானது. இங்கே வெகு தூரம் மலையைக் குடைந்து பாறைகளை அப்புறப்படுத்தியும் விட்டார்கள். இந்த வேலைகளுக்குப் பூர்வாங்கமாகத் திருவனந்தபுரம், கோட்டயம் முதலிய இடங்களிலிருந்து போக்குவரத்துக்குத் தேவையான சாலை வசதிகளும் செய்து முடித்துள்ளார்கள். சபரிகிரி மின்சார நிலயத்தில் இன்னும் இரண்டு வருஷங்களுக்குள் இரண்டு ஜெனரேடர்கள் இயங்கி மின்சார உற்பத்தி செய்யவும் தொடங்கி விடும்.

சபரிமலை பிராஜெக்டில் உற்பத்தியாகும் மின்சாரம்தான், இது வரை கிடைத்து வரும் மின்சார சக்திகளைக் காட்டிலும் மலிவாக இருக்கும் என்று சொல்கிறார்கள். கிலோவாட்டுக்கு எண்ணூறு ரூபாய்தான் செலவாகுமாம். இந்த நிலயத்தை அமைப்பதற்காகச் செலவாகும் தொகைக்கு 8.13 சதவிகிதம் லாபமும் கிடைக்கக் கூடுமாம்.

அணைக்கட்டு வேலை நடைபெற்று வருவதனால், மக்கள் நடமாட்டம் இந்தப் பகுதியில் அதிகமாகிவிட்டதல்லவா? அதோடு மலையைத் துளைக்க வெடிமருந்துகளையும் உபயோகிக்கிறார்கள் அல்லவா? அதனால் காட்டு யானைகள் நடுக்கமுற்று நாட்டை நோக்கிப் படையெடுத்து வருகின்றன. காடு கழனிகளையும் பயிர் வகைகளையும் அழித்து விடுகின்றன என்று சிலர் குறை கூறுகிறார்கள். இது நிரந்தரத் தொந்தரவு அல்லவே!

இந்தப் பிரதேசத்தில் கட்டப்படவிருக்கும் மின்சார நிலயம் மூன்று லட்சம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யும் ஆற்றல் வாய்ந்தது. இங்கு கட்டப்படவிருக்கும் அணைகள் ஏறக்குறைய முப்பத்து மூன்றாயிரம் ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதி செய்வதாக அமையப் போகின்றன. கேரளத்தில் இப்பொழுது உற்பத்தியாகும் மின்சாரத்தைப் போல இரண்டு மடங்கு அதிகமாக உற்பத்தியாகப் போகும் மின்சாரம் கேரளத் தொழில்கள் சிறந்து ஓங்க வழிவகை செய்யப் போகின்றது. அலுமினியத் தொழிற்சாலைகள், உரத் தொழிற்சாலைகள் ஆகியவை நிரம்பச் செயல் புரியவும், சிறு சிறு தொழில்கள் வளம் பெற்று ஓங்கவும் இது பெரிதும் பயன்படப் போகிறது. சிமிண்டு, பேப்பர், டயர், சைக்கிள், ரேயான், நைலான், பிளைவுட் போன்ற தொழில்கள் பெருகவும் கொச்சியில் கப்பல் கட்டும் வேலை தொடங்கவும் தேவையான மின் சக்தியை இது அளிக்கும். சென்னை ராஜ்யத்துக்கும் வேண்டிய மின்சார விநியோகம் செய்யக்கூடிய ஆற்றல் படைத்த நிலயமாக இது அமையப் போகிறது.

இதன் பூர்வாங்க வேலைகளிலேயே ஏறக்குறைய ஆறுயிரம் மக்கள் உழைப்பையும், அறிவையும் நல்கி வருகிறார்கள், மலைமுகடுகளைத் திருத்திப் பாதைகள் சமைக்கிறார்கள் என்றால் வருங் காலத்தில் இது மக்களுக்கு எப்படி உதவப் போகிறது என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

மேலை மலைச் சோலையாகத் திகழும் இப் பிரதேசம் மக்களின் வாழ்வை ஒளிபெறச் செய்யும் நாட்கள் அதிகத் தொலைவில் இல்லை. 1965ம் ஆண்டே, இந்தப் பிரதேசம் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கும்; பிருந்தாவனமாகக் காட்சியளிக்கும்.

இத்தனை பெரும் பணிக்குச் செலவாகப் போகும் தொகை இருபத்தெட்டுக் கோடி ரூபாய் ஆகும். இத்தனை பணத்துக்கு இந்த ஏழை நாடு எங்கே போகும் என்று கவலை உண்டாகிறதல்லவா? அன்றொரு நாள் ஆன்மீகத் துறையில் இந்த நாட்டுக்கு நன்றிக் கடன் பட்ட அமெரிக்கர்கள், இன்று இகவாழ்வுக்கு உதவும் முறையில் நமக்கு உதவ முன் வந்திருக்கிறார்கள்: 'நன்றி மறப்பது நன்றன்று' என்ற கொள்கையை அவர்களும் அறிவார்கள். நாமும் நன்கு அறிவோம். நீண்ட காலத் தவணையில் திரும்பப் பெறும் கடன் உதவியாகத் தந்திருக்கிறார்கள், முழுத் தொகையையும். இயந்திர சாதனங்கள் அனைத்தும் சப்ளை செய்வதோடு உழைப்புக்கான ஊதியத் தொகை கூட அமெரிக்கா அளிக்கும் இந்த உதவித் தொகையில் அடங்கியுள்ளது.

இவ்வுதவித் தொகையைக் கொண்டு அடுத்த சில ஆண்டுகளில் ஐயப்பன் கோயில் கொண்டிருக்கும் சபரி மலைப் பிரதேசம்கூடத் திருப்பதி, பழனி போல் ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கத் தொடங்கும்.

ஐயப்பன், மூட்டையும் முடிச்சும் சுமந்து கல்லிலும், முள்ளிலும், மலையிலும் பள்ளத்திலும் கால் நோக நடந்து தன்னைக் காண வரும் பக்தர் குழாத்தை எத்தனை நாட்கள் தான் சோதனைக்குள்ளாக்குவான்? பட்டினிக்கும் பசிக்கும் இலக்காக்கித் தொந்தரவு தருவான்? அடியார்களைக் காத்தருளும் தெய்வமான சாஸ்தா தன் பக்தர்களிடம் மகிழ்ந்து விட்டான், கண் திறந்து அருள்பாலித்து விட்டான் என்றால் அவனைக் காண மக்கள் மோட்டாரிலேயே வரலாம். உல்லாச தீர்த்தஸ்தலமாக மதித்து ஆண்டுதோறும் என்ன, நினைத்தபொழுதெல்லாம்கூட அவனை வணங்கி வழிபட வரலாம்.

அமெரிக்காகடனாக உதவியிருக்கும் தொகையையும் அதிவிரைவில் வட்டியும் முதலுமாக இம் மின்னொளி நிலயம் திருப்பிக் கொடுத்து விட ஐயப்பன் அருள் பாலிப்பானாக!

# இரண்டாம் பாகம்

# அறக்களம்



# பத்தினிக் கோட்டம்

## பூர்வ கதை

**வ**டக்கே வடபெண்ணையாறு முதல் தெற்கே புதுக்கோட்டை வரையில் விரிந்து பரந்திருந்த பல்லவப் பேரரசின் மாமன்னனாக முதலாம் பரமேசுவரவர்மன் முடிசூட்டிக் கொண்ட சில மாதங்களுக்குள்ளாகவே, சளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன் படையெடுத்து வந்து காஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றிக்கொண்டு உறையூரில் போய்த் தங்கியிருக்கிறான். பல்லவ நாட்டைச் சளுக்கியரிடம் பறிகொடுத்த பரமேசுவரவர்மன் உறையூருக்கு அண்மையிலுள்ள பெருவளநல்லூரில், சேதியக் கவிஞர் பரவாதிமல்லர் என்பவரின் இல்லத்தில் தலைமறைவாகப் புகலடைந்திருக்கிறான். அவனைத் தேடிப் பிடிக்கும் முயற்சியில் விக்கிரமாதித்தனும் அவனது படைத் தளபதி வில்வேலியும் தீவிரமாக ஈடுபடுகின்றனர். இதற்கிடையே, சளுக்கியரால் சிறைப்படுத்திப் பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் அடைத்து வைக்கப்பட்டிருந்த — பரமேசுவர வர்மனின் ஒன்றுவிட்ட தம்பியான — இளவரசன் கோவிந்த வர்மன், தனது காதலியும் பழையாறைச்சோழரின் மகளுமான இளவரசி இளங்கோப்பிச்சி என்பவளின் உதவியால் தப்பிச் சென்று விடுகிறான்.

பல்லவ நாட்டைக் கைப்பற்றிக் கொண்டிருக்கும் விக்கிரமாதித்தன் தனது ஆட்சியதிகாரத்தை உறுதிப்படுத்திக் கொள்ள முடியாமல் திண்டாடுகிறான். தமிழ் நாட்டில் அப்போது சைவ சமயம் தலை நிமிர்ந்தும், சமண சமயம் தாழ்வுற்றும் இருக்கின்றன. சமணனான விக்கிரமாதித்தன், பல்லவ நாடு முழுமையிலும் சமண சமயத்தைப் பரப்பி விட்டால் தன் ஆட்சியை எதிர்ப்பாரின்றி நிரந்தரப்படுத்தி விடலாம் என்று கனவு காண்கிறான். அந்தக் கனவை நனவாக்கிக் கொள்ளும் நோக்கத்துடன், சமண சமயத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட ஆந்திர இளவரசி உத்தமசீலி என்பவளைப் பல்லவ நாட்டுக்கு வரவழைக்கிறான். அவள் அவனுடைய ஒன்றுவிட்ட தம்பி மகள். அவனுடைய

ஜெகசிற்பியன்

தந்தையின் பெயர் விஷ்ணுவர்த்தனர். சளுக்கிய சாம்ராஜ்யத்தின் மேலாதிக்கத்துக்கு உட்பட்டு ஆந்திர நாட்டை அவர் ஆண்டு வருகிறார். எனவே, தன் பெரிய தந்தையான விக்கிரமாதித்தனின் அழைப்புக்கு இணங்கிப் பல்லவ நாட்டில் சமண சமயத்தை வளர்க்க வேண்டுமென்னும் இலட்சிய வேட்கையுடன் உடனே புறப்பட்டு வருகிறாள் ஆந்திர இளவரசி. இதே காரணத்துக்காகச் சிரவணபெள்குளத்துச் சமண சங்கத் தலைவர் அகளங்க அடிகளும் வரவழைக்கப்படுகிறார். ஆனால் தங்களையும் சமண சமயத்தையும் அரசியல் நோக்கத்துக்காகப் பயன்படுத்திக் கொள்ள விக்கிரமாதித்தன் திட்டமிட்டிருக்கிறான் என்ற விஷயம் அவ்விருவருக்குமே தெரியாமல் இருக்கிறது.

தளபதி வில்வேலியுடன் உறையூரை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் உத்தமசீலி, சிறையிலிருந்து தப்பி வந்த பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனால் வழிமாற்றி விடப்பட்டுச் சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் இல்லத்துக்குப் போய்ச் சேருகிறாள். அங்கே தலைமறைவாயிருந்து வரும் பரமேசுவரவர்மனை அவள் சந்திக்க நேரிடுகிறது. அவனை ஓர் ஓவியக் கலைஞனென எண்ணி அவனிடம் தன் மனத்தைப் பறி கொடுக்கிறாள்.

சமண சமயத்தின் உதவியைக் கொண்டு தன் ஆட்சியை நிலைநாட்டத் திட்டமிட்ட விக்கிரமாதித்தன் அதில் நம்பிக்கை இழக்கிறான். அடிமைப்பட்ட நாட்டில் சைவரும் சமணரும் தமது வேற்றுமைகளை மறந்து ஒன்றுபட்டு நின்றதாலேயே அவனுடைய அந்த நம்பிக்கை தளர்கிறது. அதனால் சமண சமயப் பிரசாரத்துக்காக வரவழைத்த ஆந்திர இளவரசியைப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியில் வெறுமனே இருக்கச் செய்து விடுகிறான்.

பல்லவப் பேரரசின் மேலாதிக்கத்துக்கு உட்பட்டுச் சிற்றரசர்களாக இருந்து வந்த பழையாறைச் சோழரும், சந்திரலேகைச் சிற்றரசர் பெரும்பிடுகு முத்தரையரும் சேர்ந்து, சளுக்கியரை விரட்டியடித்துப் பரமேசுவரவர்மனை மீண்டும் பல்லவ அரியணையில் அமரச் செய்யத் திட்டமிடுகின்றனர். அவர்களுக்குத் துணையாக இளவரசன் கோவிந்தவர்மனும் சேர்கிறான். ஆனால் பரமேசுவரவர்மன் அவர்களது முயற்சிக்குப் போதிய ஆதரவு தராமல் வாழ்க்கையில் வெறுப்புற்றுத் துறவு மனப்பான்மையுடன் இருந்து வருகிறான். இதனால் சலிப்புற்ற பழையாறைச் சோழர் பல்லவ மன்னனுக்கு எதிராகச் சளுக்கியருடன் சேர்ந்து விடுகிறார். அத்துடன் தன் மகள் இளங்கோப்பிச்சியைச் சளுக்கிய மன்னனின் மைந்தனான விநயாதித்தனுக்கு மணம் செய்து தருவதாகவும் வாக்களித்துவிடுகிறார். சோழ இளவரசியை மனப்பூர்வமாகக் காதலித்து வரும் கோவிந்தவர்மன் இந்தச் சேதியறிந்து வெகுண்டெழுகிறான்; தன் காதலியை வெறுக்கவும் தலைப்பட்டு விடுகிறான். இளங்கோப்பிச்சி இருதலைக்கொள்ளி எறும்பெனத் தவிக்கிறாள்.

பரமேசுவர வர்மனை ஓவியக் கலைஞன் என்று எண்ணி அவனிடம் தன் மனத்தைப் பறி கொடுத்த ஆந்திர இளவரசி அவனைச் சந்திக்க ஆவல் கொண்டு ஒரு தந்திரம் செய்கிறாள். பரமேசுவரவர்மனைக் கண்டுபிடிக்க அவனது உருவ ஓவியத்தை வரைந்து கொடுக்கத் தன் காதலனை 'ஓவியனை'ப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளிக்குத் தளபதி வில்வேலியின் மூலம் வரப் பண்ணுகிறாள். அவளும் வில்வேலியும் கேட்டுக்கொண்டதற்கிணங்க, பரமேசுவரவர்மன் தன்னுடைய உருவத்தையே ஓவியமாக வரைந்து கொடுத்துவிட்டுப் போய் விடுகிறான். பல்லவ மன்னனைப் பார்த்திராத வில்வேலி அந்த ஓவிய உருவம் பரமேசுவரவர்மனுக்குச் சொந்தமானது என்பதை அறிய முடியாமல் ஏமாந்து விடுகிறான். ஆனால், இளங்கோப்பிச்சி தங்கியிருந்த இல்லத்துக்குப் போய்ப் பரமேசுவர வர்மன் பேசிக் கொண்டிருந்த போது அவனைப் பின்தொடர்ந்து சென்ற உத்தமசீலி, அவன் யார் என்ற உண்மையைத் தெரிந்து கொண்டு விடுகிறாள். அதாவது, ஓவியக் கலைஞன் என்று எண்ணித் தான் காதலிப்பவனே பல்லவ மன்னன் என்பது அவளுக்குத் தெளிவாகிறது. இதனால் அவள் மகிழ்ச்சியும் கிலேசமும் ஒருசேர அடைகிறாள்.

இதற்கிடையே தன் சிவிகைதூக்கி நாகோதரன் என்பவனின் வாயிலாக, விக்கிரமாதித்தனுடைய உண்மை நோக்கத்தைப் புரிந்து கொள்கிறாள் உத்தமசீலி. தன்னை ஏமாற்றியதுமல்லாமல் தன் ஆந்திர நாட்டையே அவன் பறித்துக் கொள்ளத் திட்டமிட்டிருப்பதை அறிந்து அவனை வெறுக்கிறாள். சமண சமயப் பிரசாரத்துக்காக வரும் அகளங்க அடிகளை — அவரது உதவி இனித் தேவையில்லை என்பதால் — தன் மைந்தன் விநயாதித்தனை விட்டு வழி மடக்கி அடித்துப் போடச் சொல்லி விடுகிறான் விக்கிரமாதித்தன். பரமேசுவர வர்மனின் உதவியால் அகளங்க அடிகள் உயிர் பிழைக்கிறார். இந்த விஷயத்தைத் திரமிள சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரரின் வாயிலாகக் கேள்விப்பட்டு மனம் துடிக்கிறாள் உத்தமசீலி. இதனாலும் பரமேசுவரவர்மன்மீது அவள் கொண்ட காதல் உறுதியாகிறது. அவனை ஒரு குளக் கரையில் சந்தித்துத் தன் காதலை வெளிப்படுத்துகிறாள். அவனும் அவளைக் காதலிப்பதாகத் தெரிகிறது. இருவரும் ஒருவரையொருவர் இன்னாரெனத் தெரிந்துகொண்டும் புரிந்துகொண்டும் விடுகிறார்கள்.

அகளங்க அடிகளைத் தான் கொன்றுவிட்டதாக எண்ணி அவரைப் போலவே வேடமிட்டு வந்து உத்தமசீலியை ஏமாற்ற முயல்கிறான் விநயாதித்தன். சளுக்கிய மன்னனின் உத்தரவு பேரிலேயே இந்தச் சதி நாடகம் நடக்கிறது. ஆனால் உத்தமசீலி அவர்களுடைய உண்மை நோக்கத்தை அறிந்திருந்ததால் அந்த ஏமாற்று நாடகத்தை அலங்கோலப்படுத்தி விடுகிறாள். தங்கள் சுயரூபம் அவளுக்குத் தெரிந்து போயிற்று என்பதைப் புரிந்து கொண்ட விநயாதித்தனும் தளபதி வில்வேலியும் அவளை ஒழித்துக் கட்டச் சதி செய்கின்றனர்.

காதல் தோல்வியால் மனம் உடைந்திருந்த கோவிந்தவர்மனைத் தேற்றி, சளுக்கியரை எதிர்த்துப் போரிடுவதற்காகப் பாண்

# தி மதராஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிட்.

**23, நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை - 34**

புதிய தொழில்களை ஆரம்பிக்கவும் பழைய தொழில்களை விஸ்தரிக்கவும் தேவையான நிதியை உதவுவதற்காக சென்னை அரசாங்கம், மதராஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷனை ஆரம்பித்துள்ளது. இந்தக் கார்ப்பரேஷனால் ஏற்றுக்கொள்ளப்படும் பிக்ஸட் டிபாஸிட்டுகளின் அசலுக்கும் வட்டிக்கும் சென்னை அரசாங்கம் நிபந்தனையின்றி உத்தரவாதம் அளித்திருக்கிறது

எங்கள் பிக்ஸட் டிபாசிட்டுகளின்பேரில் கீழ்க்கண்டவாறு வட்டிகள் அளிக்கிறோம்

| | | | |
|---|---|---|---|
| ஒரு வருடமும் அதற்கு மேலும் | ... | 4¼% | ஒரு வருடத்திற்கு |
| இரண்டு வருடங்களும் அதற்கு மேலும் | ... | 4¾% | ஒரு வருடத்திற்கு |
| மூன்று வருடங்களும் அதற்கு மேலும் | ... | 5 % | ஒரு வருடத்திற்கு |
| நான்கு வருடங்களும் அதற்கு மேலும் | ... | 5¼% | ஒரு வருடத்திற்கு |
| ஐந்து வருடத்திலிருந்து இருபது வருடம்வரை | | 5½% | ஒரு வருடத்திற்கு |

மற்ற விவரங்களுக்கு எழுதித் தெரிந்துகொள்ளவும்

**எஸ். ராஜரத்தினம், காரியதரிசி**





KALPANA

# KALINGA POLES

**STEP DRAWN STEEL TUBULAR POLES FOR POWER TRANSMISSION, STREET LIGHTING, ETC.**

**KALINGA TUBES LTD.** 33, Chittaranjan Avenue, Calcutta-12.
Works—Choudwar, (Orissa)

டிய மன்னரிடம் படை உதவி பெற்று வரும்படி பல்லவ மன்னன் எழுதியதுபோல் ஒரு பொய் ஓலை எழுதிக் கொடுத்து மதுரைக்கு அனுப்பி வைக்கிறார் பெரும்பிடுகு முத்தரையர். இந்நிலையில், பாண்டிய நாட்டையும் கைப்பற்றத் திட்டமிட்டுப் போருக்கு ஆயத்தம் செய்கிறான் விக்கிரமாதித்தன். இந்தச் சேதியை ஒரு மர்ம ஓலையின் மூலம் அறியும் இளங்கோப்பிச்சி, உடனே மதுரைக்குப் புறப்பட்டுப் போய்ப் பாண்டிய மன்னனிடம் அதைத் தெரிவிக்கிறாள். அங்கே தன் காதலன் கோவிந்த வர்மனையும் அவன் எதிர்பாராத விதமாகச் சந்திக்க நேரிடுகிறது. பாண்டிய நாட்டின்மேல் சளுக்கிய விக்கிரமாதித்தன் படையெடுத்து வரப் போகிறான் என்ற விஷயத்தை ஏற்கனவே அறிந்திருக்கும் பாண்டிய மன்னர் நெடுமாறர் அவனைத் தம் முழு பலத்துடன் எதிர்க்கப் படைகளைத் திரட்டி அனுப்புகிறார். அத்துடன் படை உதவி கோரி வந்திருக்கும் பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனிடம் ஏதோ ஒரு முக்கியமான முடிவைத் தெரிவிக்க அவனைத் தனியே அழைத்துச் செல்கிறார்.....

இனி, மேலே தொடர்ந்து படிக்கலாம்:

### அத்தியாயம் ஒன்று

# அரிவாரணம்

சிந்தூர வண்ணமாய்ச் சிவந்துகிடந்த கீழ்த் திசைத் தூரியத்தில் செங்கதிர்ச் சூரியன் தலைதூக்கி எழுந்த அந்த இளங் காலை நேரத்திலே, பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளி பரபரப்பும் விறுவிறுப்புமாகக் காணப்பட்டது.

பள்ளி மாளிகையின் முகப்பு வாயிலுக்கும் தொலைதூர மதில் சுவரின் பிரதான நுழை வாயிலுக்கும் இடையே அமைந்த விசாலமான அழகிய பாதையின் இருமருங்கும் நூற்றுக்கணக்கான சளுக்கிய காவல் வீரர்கள் ஈட்டிகளையும் எறி வேல்களையும் ஏந்தியவாறு வரிசையாக நின்று கொண்டிருந்தனர். அவர்களுக்குப் பின்னால், அங்கே இந்நாள்வரை பல்வேறு அலுவல்களுக்காக அமர்த்தப்பட்டிருந்த பணியாட்களும் பணிப்பெண்களும் கைகட்டி வாய் பொத்திக் கும்பல் கும்பலாக நின்றுகொண்டிருந்தனர். இவர்கள் அனைவருடைய முகங்களிலும் ஒருவித ஆழ்ந்த சோகமும், பிரிவுத் துயரும் நிலவிக் கிடக்க, தம் பார்வை முழுவதையும் ஒரே திசையில் செலுத்திக் கொண்டிருந்தனர்.

அவர்களது பார்வை சென்ற திசையிலே — பள்ளி மாளிகையின் முகப்பு வாசலில் — பல்லவ மன்னன் பரமேசுவர வர்மனுடைய பட்டத்து யானையான அரிவாரணம் மிகமிக அமைதியாக நின்று கொண்டிருந்தது. முத்து முகப்படாமும், நாகலிங்க மலர் மாலையும் அணிந்து கம்பீரமாகக் காட்சியளித்த அந்தக் களிற்றின் முதுகில் அழகிய அம்பாரியொன்று ஏற்றிக் கட்டப்பட்டிருந்தது. பகட்டான ஆடை யணிகளுடன் நின்றிருந்த பாகன் ஒருவன், சிறிதும் பயமின்றி அதன் திண்ணிய துதிக்கையையும் வெண்ணிற மருப்பையும் தடவி விட்டவாறு, அவ்வப்போது அதற்குக் கரும்புக் கழியும், கதலித் தண்டும், கமுகுக் குலையுமாக எடுத்து ஊட்டிக் கொண்டிருந்தான். கரிய மலை போன்ற தன் கனத்த பேருடலை அப்படியும் இப்படியுமாக அசைத்துக்கொண்டு பாகன் கொடுக்கும் பரிய உணவுகளை வாங்கி வெகு அலட்சியமாக உண்டு கொண்டிருந்தது யானை.

அந்த யானைக்குப் பின்னால், ஆந்திர இளவரசியின் சிவிகைதூக்கிகளில் ஐந்து பேர் மட்டும் பயப்பிராந்தியுடன் நடுக்கமுற்றுத் தலைகுனிந்து நின்றுகொண்டிருந்தனர்.

இத்தனை நாட்களாக யாருக்கும் அடங்காமல், யாரையும் நெருங்கவிடாமல் மதம் கொண்டாற் போன்ற நிலையிலே மூர்க்காவேசமாக அமளி துமளி பண்ணிக் கொண்டிருந்த இந்த அரிவாரணம் இன்று எப்படி இவ்வளவு சாதுவாக — சாந்தமே வடிவாக — அடங்கி யொடுங்கி நிற்கிறது? அம்பாரி சுமந்து பல்லவபுரம் அரண்மனையிலிருந்து இலவந்திகைப்பள்ளி வரையிலும் வந்து



# பாமாலிவ் லவண்டர்

## வசீகரிக்கும் நறுமணம்....

## பெருமிதத்தையும், அழகையும் அளிக்கிறது!




வசீகரம்...பாமாலிவ் லவண்டர் டால்கம்
பெருமிதத்திற்கும், அழகிற்கும் உற்ற நண்பன்.
சிறிது பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொண்டால், அதன் இனிய நறுமணம்
உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள். பாமாலிவ்
உபயோகித்து எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும்,
நறுமணத்துடனும், அழகுடனும் விளங்குங்கள்.




பாமாலிவ் டீலக்ஸ்—மயக்கும்
17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை!

PT-G-6.TAM.

இத்தனை அமைதியாக நின்றுகொண்டிருக்கிறதே! ஆமாம்; அப்படி அது அமைதி பூண்டு நிற்பதற்குக் காரணம்?—

அதோ, அதன் எதிரே — இருபதடி தூரத்தில் — சளுக்கிய வீரனொருவன், வீழ்ந்துபட்ட பல்லவ நாட்டின் பார் புகழ் கொண்ட நந்திக் கொடியை ஏந்தியவாறு குதிரைமீது அமர்ந்திருக்கிறான்! அவன் பிடித்திருக்கும் கொடியில் பொறித்திருந்த நந்திச் சின்னத்தைத் தன் சிறிய சிவந்த கண்களால் வெகு கவனமாகப் பார்த்துக்கொண்டு தான் இத்தனை பதவிசாக நின்றுகொண்டிருக்கிறது அந்த யானை!

யாரை ஏற்றிக்கொண்டு எங்கேபோக, அது இங்கே வந்து காத்து நிற்கிறது?

''கேசப்பான காட்சி! என்ன செய்வது? காரியம் ஆக வேண்டியிருக்கிறதே!'' என்று முகத்தைச் சுளித்துக் கரகரத்த குரலில் முனகியவாறு அந்த ஒற்றைத் தூண் குடை மண்டபத்துக்குப் பின்னாலிருந்து எழுந்து நின்றார் சளுக்கியத் தளபதி வில்வேலி.

''எந்தக் காட்சியைப் பார்த்துவிட்டுத் தளபதியார் இப்படி வயிறெரிந்து பேசுகிறார்?'' என்று மமதைச் சிரிப்புடன் கேட்டுக்கொண்டே அங்கு வந்து சேர்ந்தான் சளுக்கிய இளவரசனான விநயாதித்தன்.

''நீங்கள் பார்க்கவில்லையா, இளவரசே? அதோ பாருங்கள், நம் கண்ணெதிரேயே நம்முடைய வீரன், பல்லவ நந்திக் கொடியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு நிற்கிறான்!''

''அற்பப் பதர்! இந்த அநியாய காரியத்தைச் செய்ய அவன் எப்படித் துணிந்தான்?'' — பற்களை நறநற வெனக் கடித்துக்கொண்டே அங்கிருந்து பாய்ந்து செல்லத் திரும்பினான் விநயாதித்தன்.

சடாரென்று தாவி அவனுடைய தோளைப் பற்றி இழுத்து நிறுத்திய வில்வேலி, ''என்ன இருந்தாலும் விநயாதித்தருக்கு இவ்வளவு அவசரம் கூடாது!'' என்றார் அலட்சியச் சிரிப்புடன். ''அதோ அந்தப் பொல்லாத யானை அம்பாரியோடு அமைதியாக வந்து நின்றுகொண்டிருக்கிறதே, அதை நீங்கள் பார்க்கவில்லையா இளவரசே?''

தன் தடித்த உதட்டை மடித்துக் கடித்தவாறு முகத்தைச் சுளித்த விநயாதித்தன், ''ஓகோ! இந்த விஷயத்தை நீங்கள் முதனிலேயே சொல்லியிருக்கலாம்'' என்று சலிப்புடன் முணுமுணுத்துக் கொண்டே மண்டபத்தின் கீழ்ப் படியில் போய்ப் பொத்தென்று உட்கார்ந்தான்.

இலவந்திகைப் பள்ளியின் முகப்பு வாயிலையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த வில்வேலி மெல்லத் திரும்பி, ''இளவரசர் இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தார்?'' என்று அடித்தொண்டையில் கேட்டார்.

''நமது வரித் தண்டல் அதிகாரிகள் என்னென்ன வரிகளைச் சொல்லி ஜனங்களிடமுள்ள செல்வங்களைச் சுரண்டிப் பறிக்க முடியுமோ அவ்வளவையும் பறித்துவிட்டு மேற்கொண்டு வரி போட வழியில்லாமல் திண்டாடிக் கொண்டிருந்தார்கள்....'' என்று கோணல் சிரிப்புடன் இழுத்தாற்போல் கூறினான் விநயாதித்தன்.

''ஏன்? 'காற்றுக் காணம்' என்ற பெயரில் சுவாசிக்கும் காற்றுக்கு வரி போட்டு வசூலிக்கச் சொல்வதுதானே?''

''அந்த வரி ஒன்றுதான் பாக்கியிருக்கிறது; அது அவசியம் போட வேண்டிய வரிதான். ஆனால், வரி என்று சொல்லிக் கொண்டு ஜனங்களிடம் போனால், இனி ஓர் ஆழாக்கு நெல்லையோ அரைக்குன்றி மணி பொன்னையோகூட வசூலிக்க முடியாத நிலை ஏற்பட்டு விட்டிருக்கிறதே!''

''என்ன! இந்த அடிமை நாட்டு மக்கள் நமக்கு வரி கொடுக்க மறுக்கிறார்களா...?''

''அப்படியல்ல, தளபதியாரே! வரியாகக் கொடுக்க அவர்களிடம் இப்போது ஒன்றுமே இல்லை. வரித் தண்டல் செய்யப் போவோரையே அடித்துப் பிய்த்துத் தின்று விடும் அளவுக்கு நாட்டிலே வற்கடம் நிலவிக் கிடக்கிறது.''

''நமது வரித் தண்டல் அதிகாரிகள் மிகவும் சாமர்த்தியசாலிகள்தாம்! இவ்வளவு சீக்கிரம் இத்தனை பிரமாதமாகத் தம் கடமையை நிறைவேற்றி விட்டிருக்கிறார்களே!''

''அதில் சந்தேகமில்லை. ஆயினும் நாம் அதோடு திருப்திப்பட்டுவிட முடியாது.''

''முற்றிலும் உண்மை. ஏனென்றால், நம்மிடமுள்ள படை பலம் ஒன்றை மட்டுமே நம்பிப் பாண்டிய நாட்டின் மேல் திடீரெனப் போர் தொடுக்க முடிவு செய்து விட்டார் நம் மன்னர்பிரான். இந்த நெருக்கடி நேரத்தில் நமக்குப் பொன்னும், வெள்ளியும், உணவுப் பொருட்களும் இரட்டிப்பு அளவில் தேவைப்படுகின்றன. இவற்றை எப்படிச் சமாளிப்பது என்று இரவு பகலாக நான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.''

''இதையெல்லாம் உத்தேசித்துத்தான் நம் வரித் தண்டல் அதிகாரிகளுக்கு இன்று ஒரு புது வழி சொல்லிக் கொடுத்து அனுப்பி விட்டு வந்திருக்கிறேன்!'' என்று பெருமையுடன் கூறிக்கொண்டே எழுந்த விநயாதித்தன், தளபதி வில்வேலியைக் கூர்ந்து பார்த்து அவர் கண்ணுக்கு நேரே ஏதோ சித்திரம்

வரைவதுபோல் தன் கை விரலை வெறுமனே ஆட்டி அசைத்து அபிநயித்தான்.

வெற்று வெளியில் அவன் வரைந்து காட்டிய சித்திரக் குறிப்பை உடனே புரிந்துகொண்ட வில்வேலி, "ஓகோ! அந்த வழியா? அதையெல்லாம் நாங்கள் ஏற்கனவே நடத்தி முடித்து விட்டோமே!" என்றார் அலட்சியமாக.

"இல்லை; ஒரு சில இடங்களில்தான் நீங்கள் அந்தக் காரியத்தை நடத்தியிருப்பீர்கள். இன்னும் அப்படி நடத்த வேண்டிய இடங்கள் ஏராளமாக இருக்கின்றன. மேலும், நீங்கள் அந்த முறையை நடத்திய விதம் வேறு; நான் நடத்தச் சொல்லியிருக்கும் முறை வேறு. அந்தப் புதிய முறையால் நாம் இது வரையில் காணாத அளவுக்குப் பொன்னும் பொருளும் பெறப்போவது ஒரு புறமிருக்க, இந்நாட்டு மக்கள் தமக்கிடையே எவ்வித வேற்றுமையுமின்றி ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள்போல் ஒன்றுபட்டு நிற்கிறார்கள் என்று அன்று சொன்னீர்களே, அந்த ஒற்றுமையின் அஸ்திவாரம் அடியோடு குலைந்து அவர்கள் ஒருவரோடொருவர் வெட்டுப் பழி குத்துப் பழி நடத்திக் கொள்ளும்படியான ஒரு பயங்கர நிலைமையையும் அது தோற்றுவிக்கப் போகிறது."

"ஆகா! சக்கரவர்த்தி விக்கிரமாதித்தருக்குப் பின் மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தைக் கட்டிக் காக்கக் கூடிய சகல தகுதிகளையும் பெற்று விட்டார் எங்கள் விநயாதித்தர்! இனி நாங்கள் எள்ளளவு கவலையும் கொள்ள வேண்டியதில்லை!" என்று உற்சாக விம்மலுடன் கூவிச் சொன்ன வில்வேலி, சட்டென்று நிமிர்ந்து, "அதோ, நம் நாடகத்தை நடத்த வேண்டிய நேரம் நெருங்கி விட்டது! நீங்கள் இங்கேயே சற்றுத் தலைமறைவாக நில்லுங்கள்; நான் சென்று வருகிறேன்" என்றவாறு இலவந்திகைப் பள்ளியை நோக்கி வேகமாக நடந்தார்.

## அத்தியாயம் இரண்டு

# பயணம் எங்கே?

செம்மாதுளம் பழம் பிளந்து செம்பொன் முத்துக்கள் ஒளி சிந்தினாற்போல் தன் செவ்விதழ் திறந்து முறுவலித்துக் கொண்டே இலவந்திகைப் பள்ளியின் மேன்மாடத்திலிருந்து இறங்கி, முகப்பு வாயிலை நோக்கி வந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

"வாருங்கள், இளவரசி! தங்கள் வருகையை எதிர்பார்த்து நீண்ட நேரமாகக் காத்திருக்கிறேன்" என்று பணிவும் குழைவுமாக வரவேற்றார் தளபதி வில்வேலி.

முகப்பு வாயிலின் முன் படியில் வந்து நின்ற உத்தமசீலி அங்கே அவளது பயணத்துக்காகச் செய்யப் பெற்றிருந்த ஏற்பாடுகளைப் பார்த்துப் பிரமித்து விட்டாள். "ஏனய்யா! இன்று நான் தான் பெருவளநல்லூருக்குப் பயணமாகிறேனா? அல்லது எனக்குமுன் வேறு யாராவது வேறெங்கேனும் பயணப் படப் போகிறார்களா?" — வியப்பேறிய குரலில் இளநகை கலவையிட இவ்வாறு கேட்டாள்.

"இளவரசியார் என்ன இப்படிச் சொல்லி விட்டார்கள்! எல்லாம் தங்களுக்காகவேதான் அம்மணி!"—உடல் குலுங்கச் சிரித்த வில்வேலி மேலும் சொன்னார்: "மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தின் மகா சக்கரவர்த்தி விக்கிரமாதித்தருடைய அன்புத் தம்பியாரின் அருமைப் புதல்வியான உத்தமசீலியார், ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குப் பயணமாவதென்பது சாதாரண விஷயமா? இந்தப் பயணத்துக்கு இன்னும் சிறப்பான ஏற்பாடுகளைச் செய்ய அவகாசமும் வசதியும் இல்லையே என்று நான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்!"

உத்தமசீலி உள்ளுறத் திகிலடைந்தாள். சளுக்கியத் தளபதி எவ்வளவுக்கெவ்வளவு அன்பும் பரிவும் காட்டிப் பணிந்து குழைந்து பேசுகிறாரோ அவ்வளவுக்கவ்வளவு அவர் நெஞ்சிலே நஞ்சு ஊற்றெடுக்கும் என்பதை அவள் அறியாதவளா என்ன? ஆயினும் தன்னை வெகுவாகக் கட்டுப்படுத்திக் கொண்டு நிதானமாகக் கேட்டாள்: "இத்தனை காவல் வீரர்களும் என்னுடன்தான் வரப்போகிறார்களா, ஐயா?"

"இல்லை, அம்மணி! தாங்கள் எப்போதுமே அமைதியையும் எளிமையையும் விரும்புகிறவர் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அவ்வாறில்லையானால் இந்தப் பல்லவபுரம் அரண்மனையில் தங்கியிருக்கப் பிரியப்படாமல் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் குடிலுக்குப் போக அநுமதி கேட்பீர்களா? இதெல்லாம் தங்கள்பேரில் நாங்கள் வைத்திருக்கும் அன்பையும் மதிப்பையும் காட்டுவதற்காகவும், இராஜகுலப் பெண்மணிகள்

பயணப்படும்போது நடத்த வேண்டிய சில சம்பிரதாய முறைகளுக்காகவும் செய்யப்பட்ட ஏற்பாடுகள்தாம். இந்த வீரர்கள் தங்களுடன் வந்து தங்களுக்குச் சிரமம் தரமாட்டார்கள்.''

''மிக்க மகிழ்ச்சி, ஐயா! ஆனால் நான் எப்போதும்போல் சிவிகையிலேயே பயணப்படுகிறேனே? யானைமீது அம்பாரி கட்டிப் போவதெல்லாம் எனக்கு அடியோடு பிடிக்காது!'' என்று தயக்கத்துடன் இழுத்தாள் உத்தமசீலி.

''தயவுசெய்து அப்படியெல்லாம் சொல்லாதீர்கள், அம்மணி! தங்களுக்குப் பிடிக்காவிட்டாலும் தங்கள் பெரிய தந்தையாரின் கௌரவத்தை உத்தேசித்தாவது தாங்கள் இந்த யானை மீதுதான் பயணம் செய்தாக வேண்டும் என்பது என் விருப்பம். இப்படி நான் வேண்டிக்கொள்வதற்கு வேறு சில காரணங்களும் உள்ளன. அன்றொரு நாள் பெருவளநல்லூர்ச் சாலையிலே நமக்கு ஏற்பட்ட அந்தக் கசப்பான அநுபவங்களை இதற்குள் நாம் மறந்து விடக் கூடாது. அத்துடன், சேதியக் கலைஞருடைய இல்லத்தில் தங்கியிருக்கப் போகும் தங்களை அவர் அன்பாகவும் மதிப்பாகவும் வைத்து நடத்த வேண்டும் என்பதை அவருக்குச் சொல்லாமல் சொல்வதற்காகவும் இப்படி ஓர் உயர்ந்த வாகனத்தை நான் ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்று. வெளிப் பகட்டுக்களைப் பார்த்து மயங்கும் வேடிக்கை உலகம் தானே அம்மணி இது?''

''இளவரசியிடம் இன்னொரு மகிழ்ச்சிகரமானவிஷயத்தையும் சொல்ல விரும்புகிறேன். இதோ நிற்கிறதே, இந்த யானை சாதாரண யானை என்று நினைக்காதீர்கள்; இது பல்லவ பரமேசுவரவர்மனுடைய பட்டத்து யானை. இதன் பெயர் அரிவாரணம். இந்த மதிப்பு வாய்ந்த யானையின்மீது எங்கள் மதிப்புக்குரிய ஆந்திர இளவரசியாரை ஏற்றி அனுப்புவதிலே நாங்கள் எல்லையற்ற பெருமையடைகிறோம். மாமன்னர் விக்கிரமாதித்தர் பெற்ற மகத்தான வெற்றியின் பலனை அவருடைய அருமைத் தம்பியாரின் செல்வ மகள் அநுபவிக்க வேண்டாமா ?''

இவ்வளவு நேரம் அச்சமும் திகிலுமாகக் குழம்பி நின்ற உத்தமசீலி இந்தச் சேதி கேட்டுப் பரபரப்பும் குதூகலமும் அடைந்தாள். 'என் இதயப் பேரரசர் பரமேசுவரவர்மரின் பட்டத்து யானையா இது? என் அன்பின் மாமன்னர் அமர்ந்த அதே யானையின் மேல் நானும் அமர என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டும்! அவர் மீது நான் கொண்ட தூய காதலின் சக்தியே இந்த அரிய சந்தர்ப்பத்தை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்து விட்டதா? அல்லது எதிர்காலத்தில் இந்த யானையின் மேல் நாங்கள் இருவரும் ஒன்றாக அமர்ந்து காஞ்சிமாநகரின் வீதியிலே பவனியாக வரப் போவதை இந்நிகழ்ச்சி இப்போதே எனக்குக் குறி சொல்லிக் காட்டுகிறதா?' — உற்சாகம் துளும்பப் புன்னகை புரிந்த உத்தமசீலி, ''தளபதியாரின் அன்பு உள்ளத்துக்கு நான் என்றும் நன்றி உடையவளாக இருப்பேன்!'' என்று தேனினுமினிய குரலில் கூறிக் கொண்டே, வாசலில் நின்ற அரிவாரணத்தை நோக்கிச் சென்றாள்.

யானையின் வலப் பக்கவாட்டில் போய் நின்ற அவள் சுற்றிலும் தன் பார்வையை ஓட்டினாள். இந்நாள்வரை அவளுக்கு ஊழியம் புரிந்து வந்த பணிப் பெண்களும், பணியாட்களும், காவல் வீரர்களும் கண்ணீர் சோர அவளைப் பார்த்துக் கரம் குவித்தனர். அந்த இலவந்திகைப் பள்ளியில் தங்கியிருந்த மிகச் சில நாட்களுக்குள் அவர்களுடைய உள்ளங்களை அவள் எந்த அளவுக்குக் கவர்ந்து விட்டிருக்கிறாள் என்பதை இந்த உருக்கமான காட்சி, கூறாமல் கூறிக் காட்டியது. இமையோரத்தில் கசிந்த கண்ணீரை இலேசாகத் துடைத்து விட்டுக் கொண்டு யானையின் அருகில் போய் நின்றாள்.

''இளவரசி! பல்லவபுரம் அரண்மனையில் சகல வசதிகளுடனும் தங்கியிருக்குமாறு தங்களை நான் வேண்டிக்கொண்டேன். ஆனால் தாங்களோ பெருவளநல்லூர்ச் சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் போக விரும்புவதாகத் தெரிவித்தீர்கள். அதன்படி இதோ தங்களை அனுப்பியும் வைக்கிறேன். எனவே, என்மீது தங்களுக்கு எவ்வித மன வருத்தமும் இருக்காதென்று நான் நம்பலாம் அல்லவா?'' என்றார் வில்வேலி.

''தளபதியார்மீது வருத்தமா? என் விருப்பத்துக்கு மதிப்பளித்த தங்களை நான் வாழ்த்திக் கொண்டல்லவா இருக்கிறேன்!''

''இல்லை, அம்மணி! உறையூருக்குத் தங்களை நான் அனுப்பவில்லையே என்று உள்ளூறவருந்தினாலும் வருந்துவீர்கள்.''

''அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை ஐயா! உரகபுரத்துக்குப் போவதைவிடப் பெருவளநல்லூருக்குச் செல்லவே பெரிதும் விரும்பினேன். ஏனென்றால், இப்போதைக்கு உறையூர் சென்று என் பெரிய தந்தையாருக்குச் சிரமம்கொடுக்க நான் விரும்பவில்லை.''

''மகிழ்ச்சி அம்மணி! இப்போதுதான் என் மனச் சுமை நீங்கியது!'' என்று குழைவாகச் சொன்ன வில்வேலி, யானைப் பாகனைப் பார்த்துப் புறப்படச்

சமிக்ஞை செய்தார். யானைப் பாகன் ஓடி வந்து, அம்பாரியில் ஏறுவதற்குத் தோதாக நூலேணியை இறக்கிவிட்டான்.

வில்வேலிக்கு வணக்கம் செலுத்திய உத்தமசீலி நூலேணியில் தன் வலக் காலை எடுத்துவைத்து ஏற முயன்றபோது தான், எதிரே குதிரைமீது அமர்ந்திருந்த சளுக்கிய வீரன் நந்திக்கொடியை உயர்த்திப் பிடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவனுக்கு ஒரே வியப்பும் திகைப்புமாகி விட்டது. சட்டென்று திரும்பி, ''என்ன இது, தளபதியாரே! ஏன் இந்த வீரன் பல்லவ நந்திக் கொடியை ஏந்திக் கொண்டிருக்கிறான்?'' என்று வினவினான்.

வில்வேலி இதைக் கேட்டு அடித் தொண்டையில் கனைத்துச் சிரித்தவாறு, ''ஓ,.....இந்த விஷயத்தைத் தங்களிடம் நான் சொல்லவில்லையா? மறந்து விட்டேன். இதைப் பற்றி நீங்கள் ஒன்றும் கவலைப்படாதீர்கள், அம்மணீ! வழிப் பயணத்தின்போது தங்களுக்கு எவ்விதமான இடைஞ்சலும் ஏற்படக் கூடாதே என்பதற்காகத்தான் இப்படியொரு தந்திரத்தைச் செய்திருக்கிறேன்! உயிராபத்து இன்றித் தாங்கள் பெருவள நல்லூருக்குப் போய்ச் சேர இந்த நந்திக் கொடியே உத்தரவாதம் அளிக்கப் போகிறது! புறப்படுங்கள், அம்மணீ!'' என்றார்.

கீழ் வானப் பொய்கையில் மலர்ந்த பொற்கமலக் கதிரவன் ஆயிரமாயிரம் இதழ்ச் சுடர்களை விரித்து வீசியவாறு மெள்ள மெள்ள மேலேறிக் கொண்டிருக்கும் அந்த முறுகிய காலை நேரத்திலே, வனப்பும் விசாலமுமாக அமைந்த பல்லவபுரம் சாலையில் சளுக்கியக் குதிரை வீரன் நந்திக்கொடியை ஏந்திப் பிடித்து விரைந்து கொண்டிருக்க, அவ்வழகிய கொடியின் மீதே தன் பார்வையைப் பதித்தவாறு வெகு உற்சாகமாக நடந்து கொண்டிருந்தது அரிவாரணம்.

பூஜைக்குத் தொடுத்த புனித மலர் மாலையைப்போல் அம்பாரியில் அமர்ந்து சாய்ந்திருந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி, தன் மனத்தைப் பல்வேறு இன்பக் கனவுகளின் மேல் ஏற்றிப் பறக்க விட்டுக் கொண்டிருந்தான். அந்த இனிய பயணம் அவனுக்கு அத்தனை மகிழ்ச்சியை ஊட்டியது.

இப்படித் தன்னை மறந்து இன்பக் கனவுகளிலே சஞ்சரித்துக் கொண்டிருந்த அவன், பல்லவபுரம் எல்லையைக் கடந்து பெருவளநல்லூர்ச் சாலையில் ஏறியபோது, வானம் குமுறுவது போன்ற ஒரு பயங்கரப் பேரொலி எழவே, திடுக்குற்று நிமிர்ந்து சுற்று முற்றும் பார்த்தான். இவ்வளவு நேரம் உற்சாகமாக விரைந்து சென்று கொண்டிருந்த அரிவாரணம்தான் அப்படிப் பெருங்குரலெடுத்துப் பிளிறியது!

பரபரப்படைந்த உத்தமசீலி தன் பார்வையைஅங்குமிங்குமாக ஓட்டினான்.

இது என்ன விந்தை! இந்நேரம் வரை நந்திக் கொடியை ஏந்திப் பிடித்துச் சென்று கொண்டிருந்த குதிரை வீரன் இப்போது சளுக்கிய வராகக் கொடியை அல்லவா உயர்த்திப் பிடித்துக் கொண்டிருக்கிறான்! அந்த வராகக் கொடியைப் பார்த்துவிட்டுத்தான் இந்த யானை இப்படிப் பிளிறலிட்டு முழங்குகிறதோ?....நந்திக் கொடியை மறைத்துச் சளுக்கிய வராகக் கொடியை ஏந்திய அந்த வீரன் தன் குதிரையைக் காற்று வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்தான்! அதைப் பார்த்த அரிவாரணமும் அரண்டு மிரண்டு வெறிகொண்டு விட்டாற்போல், பிளிறியவாறு அவனைப் பின்தொடர்ந்து ஓட ஆரம்பித்தது!

குலை நடுங்கிய உத்தமசீலி அம்பாரியின் திரையை நீக்கி யானைப்பாகனை எட்டிப் பார்த்தான். அவனோ, சாலையின் குறுக்கே நீண்டு தாழ்ந்து வளர்ந்திருந்த ஒரு மரக் கிளையில் தாவிக் கொண்டு தன் கையில் இருந்த அங்குசத்தை யானையின் முறக் காதை நோக்கி வீசி எறிந்தான். இதனால் மேலும் சினமடைந்த அரிவாரணம் தன் துதிக்கையைச் சுருட்டி நிமிர்த்தி ஓங்கிக்கொண்டும் காற்று மண்டலமே கனல் பரக்க வீசிக் கொண்டும், பூமியதிர, திசைகள் நடுங்க முக்கார முழக்கமிட்டு ஓடியது.

ஆகா! அந்தக் குதிரை வீரன் எங்கே? அவன் சென்ற திசை தெரியவில்லையே.!

அரிவாரணத்துக்கு ஏற்பட்ட வெறியாவேசம் சிறிதும் தணியவில்லை. அதற்கு மாறாக, தன் முதுகில் அமர்ந்திருப்பவர்கள்மீது அதன் கோபம் திரும்பியது. துதிக்கையைத் தலைக்குமேல் சுழற்றித் துழாவிப் பாகனைத் தூக்கியெறிய முயன்றது. அவன் அங்கே இல்லை என்று தெரிந்துகொண்டதும், அதே வேகத்தில் அம்பாரியை அடித்துத் தாக்கியது. இதனால் சங்கிலிக் கட்டுக்களிலிருந்து தளர்ந்த அம்பாரி இடது பக்கம் சாயவே, அதனுள் நடுங்கிச் சுருண்டு நின்ற உத்தமசீலி வலதுபுறமாகச் சரிந்து சங்கிலியைப் பற்றிக் கொண்டு யானையின் விலாப் பக்கம் தொங்கலாடினான்!

அப்படித் தொங்கலாடிய அவளையும் அம்பாரியையும் இழுத்தெறிந்து மிதித்துத் துவைத்துப் போட முயல்வதுபோல் தன் பனை போன்ற துதிக்கையை அப்படியும் இப்படியுமாக வளைத்து நெளித்துத் துழாவி, முன்னிலும் அதியாவேச வெறியுடன் ஓடியது அந்த அரிவாரணம் என்ற பயங்கர யானை. **(தொடரும்)**

லிப்டன்

**LAOJEE**

# லாவோஜி டீ

சிக்கனத்தின் சின்னம் சிறப்பின் சிகரம்





# சீரடி சாயிபாபா

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

மகா பக்த விஜயத்திலே மகாத்மா கபீர் தாஸ் வரலாறு விரிவாகக் கூறப்படுகிறது. கபீர் தாஸர் பிறவியிலேயே முஸல்மான். ஆனால் ராம பக்தர்களுக்குள் சிறந்த ராம பக்தராக விளங்கியவர். இவரது பாடல்கள் கேட்போரை மெய்மறக்கச் செய்யும் சக்தி வாய்ந்தவை. பாடல்கள் மூலம் பக்தியைப் பரப்பியவர்கள் நமது நாயன்மார்களும் ஆழ்வாரடியார்களும் மாத்திரம் அல்ல, கபீர் போன்ற பக்த சிகாமணிகளுமே என்பதை நாம் எல்லோரும் அறிவோம். இந்த முஸ்லீம் பக்தர் ராமனிடத்து அத்யந்த பக்தியுடையவராக வாழ்ந்திருக்கிறார். 'ராமன் என்று வேண்டுமானாலும் சொல், இல்லை ரஹீம் என்று வேண்டுமானாலும் சொல். இறைவன் ஒருவனே' என்பதுதான் இவரது சித்தாந்தம். 'ஹரி போலோ பாயீ ஹரி போலோ' என்ற பாடல் கபீர்தாஸரது பாடல்களிலே பிரசித்தமானது. பஜனை பண்ணும்போது கபீர்தாஸரது பாடல்களைப் பாமரர்களும் பாடிப் பக்தி மேலீட்டால் மெய் சிலிர்ப்பர் என்பது பலரது அநுபவம். இப்படி முஸ்லிமாகப் பிறந்து, ராம பக்தியில் திளைத்த ஒரு மகாத்மாவைப் பக்த விஜயத்தில் மாத்திரம்தான் பார்க்கிறோம் என்றில்லை. இந்த நூற்றாண்டிலும் நம்மிடையே உலவி முஸ்லிம், ஹிந்து என்ற வேற்றுமைகளைக் களைந்து எறிந்து, எல்லோரையும் நல்லவர்களாக்கி, அவர்களுக்கு நல்வாழ்வு தந்தவராகவும் வாழ்ந்திருக்கிறார் ஒருவர். அவரே சாயிபாபா என்ற மகாத்மா. அவர் ஒரு முஸ்லிம் பக்கிரியால் வளர்க்கப்பட்டிருந்தாலும் இன்று வரை எண்ணிறந்த இந்துக்கள் தெய்வமாகவே போற்றி வழிபடுகின்றனர். அப்படி வழிபடுவதால் நோய் நீங்குகின்றனர், துன்பம் தவிர்க்கின்றனர். இன்னும் எண்ணிய எண்ணியாங்கு எய்தி வாழும் பேற்றையுமே பெறுகின்றனர். அந்த மகான் தங்கியிருந்த இடம்தான் ஸிர்டி என்பது. இதனை நல்ல தமிழில் சீரடி என்றும் சொல்லலாம்.

சீரடி, பம்பாய் ராஜ்யத்தில் அகமத்நகர் ஜில்லாவில் உள்ள ஒரு சிறிய ஊர். பூனாவுக்குக் கிழக்கேயுள்ள டோண்ட் சந்திப்பிலிருந்து வடக்கு நோக்கி மான்மாட் செல்லும் ரயிலில் சென்றால் அகமத்நகரைக் கடந்து கோப்பர்கான் என்ற ஊருக்கு வந்து சேருவோம். இங்கு இறங்கி அங்கிருந்து பன்னிரண்டு மைல் வடமேற்கு நோக்கிச் சென்றால் சீரடி வந்து சேரலாம். சாயிபாபா சமாதியாகியிருக்கிற இடத்தில்தான் சாயிபாபா மந்திர் என்ற கோயிலைக் கட்டியிருக்கின்றனர். அக்கோயிலுக்குத்தான் எண்ணிறந்த பக்தர்கள் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் வந்து வழிபாடு செய்து திரும்புகின்றனர்.

இந்தக் கோயிலுக்குச் செல்லுமுன், சாயிபாபா என்றால் யார், அவர் வரலாறு என்ன என்பதையும் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டாமா? பாபாவின் பூர்வோத்தரம், பிறப்பு முதலியவைகளைப் பற்றிச் சொல்லக் கூடியவர்கள் ஒருவருமே இல்லை என்றாலும் பாபா சொன்னவைகளிலிருந்து அவரது பக்தர்கள் ஊகித்துத் தெரிந்து கொண்டவைகளையே சிலர் சொல்லி வருகிறார்கள். கிட்டத்தட்ட நூற்று ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் அதாவது 1820-ம் வருஷத்தை ஒட்டி, அன்றைய நைஜாம் ராஜ்யத்தில் உள்ள பாத்ரி என்ற கிராமத்தில் ஓர் அந்தணர் குடும்பத்தில் பாபா பிறந்திருக்கிறார். பெற்றோர் மிகவும் ஏழைகளாகவே வாழ்ந்து வந்திருக்கின்றனர். பாபாவுக்கு ஐந்து வயது நிரம்புகிற போது அக்கிராமத்துக்கு வந்த முகம்மதிய பக்கிரி ஒருவர், பாபாவைத் தம்முடன் அழைத்துச் சென்றிருக்கிறார். பல வருஷ காலம் இந்த முகம்மதிய பக்கிரியால் வளர்க்கப்பட்டிருக்கிறார் பாபா. பக்கிரி உயிர் நீத்தபோது பாபா சேலூரிலிருந்த கோபால்ராவ் தேஷ்முக் என்ற பெரியாரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறார். அப்பெரியாரோ வடவேங்கடவனை, திருப்பதி வேங்கடேசனின் அத்யந்த பக்தர். அப்பெரியாரிடமே பாபா பத்து வருஷ காலம் தங்கியிருந்திருக்கிறார். இக்காலத்தில்தான் அவர் வேங்கடவனது அருளுக்கு ஆளாகியிருந்திருக்கிறார். இங்கிருந்துதான் பாபா தமது கடைசிக் காலத்தில் சீரடியில் வந்து தங்கியிருக்கிறார்.

சீரடியில் கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகள் தங்கியிருந்திருக்கிறார் என்கின்றனர். சீரடிக்கு வந்து சில வருஷ காலம் ஒரு வேப்ப மரத்தடியிலேயே தங்கி வாழ்ந்திருக்கிறார். அங்கேயே அவர் நிலையாக இருக்கவும் இல்லை. அடிக்கடி ஊர் சுற்றும் பக்கிரியாக அலைந்து திரிந்திருக்கிறார். இப்படி ஊர் சுற்றித் திரும்பியபோது ஒரு நாள் சீரடியில் உள்ள ஒரு கோயிலுக்குள் நுழைந்திருக்கிறார். அப்போது அக்கோயில் நிர்வாகியாயிருந்தவர் பாபாவின் நடையுடையெல்லாம் மகம் மதிய பக்கிரியைப்

போயிருப்பதால், அவரைக் கோயிலுள் விட மறுத்து விட்டார். ஆகவே இப்படிக் கோயிலில் இருந்து துரத்தப்பட்ட பாபா, பக்கத்தில் இடிந்து கிடந்த ஒரு பழைய மசூதிக்குள் நுழைந்து அதையே தம் இருப்பிடமாகக் கொண்டிருக்கிறார். அதன்பின் எங்கு சுற்றினாலும் இந்த மசூதியில் வந்து தங்குவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்.

மசூதிக்கு வெளியில் கிடந்த ஒரு பெரிய பாறைமீது பல மணி நேரம் இருந்து தியானித்துக் கொண்டிருப்பாராம். சில சமயம் பழைய வேப்ப மரத்தை நாடி அதன் அடியில் உட்கார்ந்திருப்பாராம். முஸ்லீம்கள் சொல்லும் நமாஸ் என்னும் பிரார்த்தனையையும் செய்வாராம். எல்லாவற்றையும் விடத் தாம் வசித்த மசூதியில் விளக்கு ஒன்றை ஏற்றி அதை அணைந்து போகாமல் நந்தா விளக்காகப் பராமரித்து வந்திருக்கிறார். அவருக்கு விளக்குகளை ஏற்றி அந்த ஒளியில் அருட்பெருஞ் சோதியாம் இறைவனைக் காண்பதே பொழுது போக்காக இருந்து வந்திருக்கிறது. இப்படி வாழும் பக்கிரியாம் பாபாவிடம், கிராம மக்கள் முதலில் நெருங்கா விட்டாலும் நாளடைவில் நெருங்கி வந்திருக்கின்றனர். இவருக்கோ தமக்கு உணவு என்பதைவிடத் தாம் எரிக்கும் விளக்குக்கு எண்ணெய் வேண்டுவதே பிரச்னையாக அமைந்திருக்கிறது. அதற்காக அந்த வட்டாரத்தில் உள்ள வர்த்தகர்களை அணுகி எண்ணெய் பெற்றிருக்கிறார்; விளக்கெரித்திருக்கிறார். ஒரு நாள் அவரிடம் எண்ணெய் இல்லாதிருந்திருக்கிறது. அன்று எப்போதும் வழக்கமாகக் கொடுக்கும் வியாபாரிகளும் எண்ணெய் கொடுக்க மறுத்திருக்கின்றனர். அதனால் சிறிதும் கவலையுறாமல், தம் பக்கத்தில் உள்ள பாத்திரத்தில் இருந்த தண்ணீரையே விளக்குகளில் ஊற்றியிருக்கிறார். விளக்குகளும் விடிய விடியத் தண்ணீராலேயே எரிந்திருக்கின்றன. இந்த அதிசய சம்பவத்தைக் கிராம மக்கள் ஒரு சிலர் பார்த்திருக்கின்றனர். சரிதான், செய்தி பரவ ஆரம்பித்திருக்கிறது. அதன்பின்தான் அந்த வட்டார மக்கள் இவரை ஒரு பெரிய மகான் என்று மதித்திருக்கின்றனர்; இவரது தெய்வத் தன்மையை உணர்ந்திருக்கின்றனர். அதன்பின்பே அவரைச் சாயிபாபா என்று அழைத்து வந்து வணங்கியிருக்கின்றனர். சாயி என்றால் பாரசீக பாஷையில் 'மகான்' என்று பொருள்.

பாபா என்றால் இந்தியில் தந்தை என்று பொருள். மக்களுக்குத் தந்தை போன்றவர் இந்த மகான் என்பதாலேயே சாயிபாபா என்று அழைத்திருக்கின்றனர்.

இதன் பின்னர்தான் பாபாவின் மகிமையை மக்கள் அறிய ஆரம்பித்திருக்கின்றனர். அவரை அணுகியவர்களுக்கு நோய் நீங்கிற்று, துன்பம் விலகிற்று, எண்ணியது முற்றுப் பெற்றது என்ற முறையில் நல்ல காரியங்கள் பல நடந்தன. முதலில் இப்படித் தத்தமக்கு ஏற்பட்ட குறைகளை நிவர்த்திக்கவே மக்கள் பாபாவை வந்து கண்டனர். நாளடைவில் பாபாவின் பக்தர்கள் ஆத்ம திருப்தியும் கடவுளை அறியும் அறிவும், அவர் தான் அடைதலில் உள்ள ஆனந்த அனுபவமும் பெறலாயினர். ''எவர் எதை விரும்புகிறார்களோ அதையே அவர்களுக்கு நான் அளிக்கிறேன். ஆனால் அவர்களாகவே நான் எதைக் கொடுக்க விரும்புவேனோ அதையே கேட்கிறார்கள்'' என்று பாபாவே பல தடவை சொல்லியிருக்கிறார். இன்னும் பாபாவைக் கண்டு அருள் பெற்றவர்கள் பாபாவின் கருணை நோக்கைப் பற்றி விரிவாகக் கூறுகின்றனர். 'பாபாவின் கண்கள் தீக்ஷண்யமானவை. அவரது கண்களை ஒருவரால் நீண்ட நேரம் பார்த்துக் கொண்டிருத்தல் இயலாது. அவரது பார்வை நமது உள்ளத்தை ஊடுருவி நாம் எண்ணுவனவெல்லாம் அறியும் ஆற்றல் உடையது. 'நாம் முன் செய்த காரியங்கள், இன்று செய்கின்ற காரியங்கள், நாளை செய்ய நினைக்கும் காரியங்கள் எல்லாவற்றையுமே உணரும் ஆற்றல் பெற்றவர். ஆதலால் அவரிடம் சரணாகதி அடைவதால் நமக்கு ஏற்படும் நன்மைகள் பலப்பல. நமக்கு வேண்டுவன எல்லாவற்றையும் அவரே கவனித்துக் கொள்வார்' என்று ஸ்ரீமதி மானேஜர் என்ற பக்தை கூறுகிறார். பாபாவின் தரிசன மகிமையினாலேயே பல வருஷ காலம் தீராத நோயால் துன்பப்பட்டவர்கள் நோய் நீங்கிச் சுகம் பெற்றிருக்கின்றனர். இத்தனைக்கும் அவர் தாம் வளர்த்த அக்கினியிலிருந்து கொஞ்சம் உத்தி அதாவது சாம்பலைத் தவிர வேறு மருந்தே கொடுத்ததில்லை. இன்னும் சீரடிக்கு வந்து தரிசனம் செய்துதான் நோய் நீங்க வேண்டும் என்பதில்லை. இருந்த இடத்திலிருந்தே பாபாவை நோக்கிப் பிரார்த்தனை செய்து நோய் நீங்கியவர்களும் உண்டு. ''நானிருக்கப் பயமேன்?'' என்பதுதானே அவரது தாரக மந்திரமாக இருக்கிறது. அத்தனை நம்பிக்கையோடு அணுகுகிறவர்களுக்கு அவரது அருள் சுரக்கிறது; பாய்ந்து பெருகுகிறது.

> **உபாத்தியாயர்:** நான் தலைகீழாக நின்றால் ரத்தம் தலைக்கேறுகிறது. காலுக்குச் செல்வதில்லை. ஏன்?
>
> **பையன்:** ஏனென்றால் காலில் சூன்யம் கிடையாது ஸார்!

இந்தச் சாயிபாபா 1918ல் சீரடியில் சமாதி ஆகியிருக்கிறார். அவரது உடலைச் சமாதியில் வைத்து அச்சமாதியின் மேலேயே கோயில் கட்டியிருக்கிறார்கள். அக்கோயிலே இந்துக்களுக்குக் காசியாகவும், மகம்மதியர்களுக்கு மெக்காவாகவும் இருந்து வருகிறது. கோயில் பெரிய பங்களா போல் இரண்டு அடுக்கு மாடியுடன் விளங்குகிறது. கோயிலைச் சுற்றிலும் பல கட்டடங்கள் கட்டி வருபவர்கள் தங்க வசதி செய்திருக்கின்றனர். முதற்கட்டில் தான் அவருடைய சமாதிக் கோயில் இருக்கிறது. அங்கு சலவைக் கல்லில் அவரது உருவத்தைச் சமைத்து வைத்திருக்கின்றனர். அங்குதான் காலை ஐந்து மணிக்கு ஆராதனை நடக்கிறது. பஜனை பாடிக் கொண்டேதான் ஆராதனை நடக்கிறது. அந்தக் கட்டிலேயே ஒரு கண்ணாடி அறையில் அவர் உபயோகித்த பாதுகை, ஆடை முதலியவைகளைப் பத்திரப் படுத்தி, வருபவர்கள் காண்பதற்கு வசதி செய்திருக்கிறார்கள். கோயிலை ஒரு சிறு சிகரம் அணி செய்கிறது.

**கோவிலுக்குக்** கீழ்ப்புறத்தில் அவர் தங்கி யிருந்த பகுதியில் அவருடைய படமும் அவர் யாசித்து வைத்த கோதுமையும் வைத்திருக் கிறார்கள். அவர் மூட்டின அக்கினியையும் இன்று வரை அணைய விடாமல் பாதுகாத்து வருகிறார்கள். கோவிலுக்கு மேல்புறத்தில் அவர் தங்கியிருந்த வேப்ப மரம் இருக்கிறது. அதனைச் சுற்றி ஒரு பளிங்குக் கல் மேடை கட்டியிருக்கிறார்கள். அதில் ஒரு சிவலிங்கமும் திருநந்தி தேவரும் அமைத்திருக்கிறார்கள். அந்த வேப்ப மரத்தின் இலை கசப்பாக இல்லை; சிறிதே துவர்ப்பு உடையதாக இருக்கிறது.

அந்த இடத்தைச் சுற்றியுள்ள அறைகளிலே பல சந்நியாசிகள் இருக்கின்றனர். அவர் களுக்கு இலவசமாக உணவு வழங்கப்படுகிறது. ஒவ்வொரு வியாழக் கிழமை இரவும் சாயிபா பாவின் திருவுருவப் படம் ஒன்றைப் பல்லக்கில் வைத்து உலா வரச் செய்கின்றனர். நூற்றுக் கணக்கான பக்தர்கள் அந்த உலாவில் கலந்து கொள்கின்றனர்.

இத்தனை சொல்கிறீர்களே, பாபா இந்துவா, இல்லை முகம்மதியரா என்று திட்ட மாகச் சொல்ல வில்லையே என்று நீங்கள் முணு முணுப்பது என் காதில் கேட்கிறது. முன்னமேயே சொல்லி யிருக்கிறேன். அந்த ணர் குடும்பத்தில் அவர் பிறந்திருக்கிறார். முகம்மதியப் பக்கிரி ஒருவரால் வளர்க்கப் பட்டிருக்கிறார். திருப்பதி வேங்கடேசர் அரு ளுக்குப் பாத்திரமான ஒரு பெரியவரோடு வாழ்ந்திருக்கிறார். தாடியும், மீசையும் கொண்டவராய் முக்காடிட்டுக் கொள்ளும் வழக்கமுடையவராக இருந்த காரணத்தால் அவர் முகம்மதியப் பக்கிரியாகத் தோன்றினு லும், உள்ளத்தால் அவர் மதங்களுக்கு எல் லாம் அப்பாற்பட்ட பரம ஞானியாகவே வாழ்ந்திருக்கிறார். தம்மை அறிந்து இன் புற்றுத் தாமும் சிவமும் வேறல்ல என்று உணர்ந்தவர்களுக்கு ஜாதியும் மதமும் ஏது? சாயிபாபா தம்மிடம் வரும் பக்தர்களை அவரவர் மதக் கொள்கையின்படியே நடக்கச் சொன்னாரே அன்றி, உலகில் 'இந்த மதம் தான் உயர்ந்தது: 'இது தாழ்ந்தது' என்று ஒரு பொழுதும் சொன்னவரல்ல. தம்மிடம் வரும் இந்துக்களிடம், 'உங்கள் ராமனைத் துதியுங்கள். உங்கள் முன்னோர்கள் ஆரா தித்த விக்கிரகங்களையே ஆராதியுங்கள்' என்று கூறியிருக்கிறார். தம் கையாலேயே வெள்ளிப் பாதுகைகள், காசுகள், படங்கள் முதலியவை எடுத்துக் கொடுத்து அவைகளைப் பூஜை செய்யுமாறு பணித்திருக்கிறார். தம்மிடம் வந்த முகம்மதியர்களுக்கு இவைகளில் ஒன் றையும் அவர் கொடுத்ததில்லை. அவரவர் மதாச்சாரத்தின்படி பஜனை செய்யச் சொல் லித்தான் உபதேசித்திருக்கிறார். பாபாவை ஸ்ரீமந் நாராயணன் என்று இன்று பலரும் பூஜிக்கிறார்கள். ஆம்! அவரை முகம்மதிய ராக நினைத்தவர்களுக்கு முகம்மதியராகவும், இந்துவாக நினைத்தவருக்கு அவர் இந்துவாக வும் இருந்திருக்கிறார். முகம்மதியர்களுக்குக் குரானை விளக்கியிருக்கிறார். இந்துக்களுக்கு அவர்களது சரித்திரத்தை விளக்கியிருக்கிறார். பலருக்கு அவர் கண்கண்ட தெய்வமாகவே காட்சியளித்திருக்கிறார்; அவர்களது உள்ளத் தில் அருளாட்சி புரிந்திருக்கிறார்.



# படித்துப் பாருங்கள்!



## உத்ஸவ சம்பிரதாயக் கீர்த்தனைகள்

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் தமது இஷ்ட தெய்வமான ஸ்ரீ ராமபிரானுக்கு நித்யோத்ஸவம் நடத்தி நாள்தோறும் ஹெச்சரிக, நலுங்கு, லாலி, ஜோகொட்டு, பவ்வளிம்பு முதலியவை பாடி நிவேதனம் செய்து தாம்பூலம் தரிக்கச் செய்து பல உபசாராதிகள் செய்து உறங்கப் போவது வழக்கம்.

மீண்டும் அதிகாலையில் திருப்பள்ளி எழுச்சி பாடி இறைவனைத் துயில் உணர்த்துவார். இவ்வரிய கீர்த்தனைத் தொகுதியாகிய உத்ஸவ ஸம்பிரதாயக் கீர்த்தனைகளில் பிரசாரத்தில் உள்ளவை சில கீர்த்தனைகள்தான். சொற்சுவை, பொருட் சுவை, இசைச் சுவை, பக்திப் பெருக்கு இவை யாவும் நிறைந்து, திராக்ஷா பாகமாக அமைந்துள்ள இந்தக் கீர்த்தனைகள் எல்லாவற்றையும் சம்பிரதாய முறையைத் தேடி உணர்ந்து இந் நூலை உருவாக்கியுள்ளார் இதன் ஆசிரியர்.

இந்நூலில் அமையப்பட்டுள்ள கிருதிகளில் இசையமைப்பிலும் சொல்லிலும் பாடபேதங்களையும் ஆங்காங்கு கொடுத்துத் தெளிவான முறையில் ஸ்வர தாளக்குறிப்பும்கொடுத்திருப்பது குறிப்பிடத்தக்கது. இன்று உலகம் இருக்கும் நிலையில் ஆண்டவனிடம் பக்தி பெருகி, அவனை வீடுதோறும் பஜனை செய்து பாடி அவன் அருளை அடைவதுதான் முக்கியமான வழி. பஜனைப் பத்ததியில் ஈடுபாடுள்ளவர்களும், இசைக்கலைஞர்களும் இந்த நூலை வரவேற்றுப் பயனடைவார்கள் என்று நம்புகிறேன். விலை: ரூ. 2.50.

## ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் கீர்த்தனைகள்

பராசக்தியின் அருள் பெற்றுப் பாடிய மகானான ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் இருநூறாவது ஆண்டு நினைவு மலராக இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. கர்நாடக சங்கீத பத்ததியில் ராகங்களுக்குத் தனி இடம் உள்ளது. அந்த முறையில் பிராசீன ராகங்களான அநேகம் ராகங்களில் அந்தந்த ராகங்களின் ஸாரங்களைப் பிழிந்தும் தாளங்களில் விசேஷமான முறைகளிலும் உருகிப் பாடியருளிய மகானான ஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களின் கீர்த்தனைகளில் ஒரு சிலதான் இசை உலகத்தில் பிரசாரத்தில் இருந்து வருகின்றன.

அவைகளில் ரத்தினங்களான பைரவி, தோடி, எதுகுல காம்போதி, இவைகளில் அமைந்த மூன்று ஸ்வர ஜதிகளும் மற்றும் ஸம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளிலுமுள்ள சிறந்த கீர்த்தனங்களில் பதினெண்ணையும் தேர்ந்தெடுத்து வெளியிடப்பட்டுள்ளது.

இதன் ஆசிரியர் குரு முகமாகக் காலஞ்சென்ற சங்கீத கலாநிதிகளான ஸ்ரீ ஸபேசய்யர், ஸ்ரீ டைகர் வரதாச்சாரியார், ஸ்ரீ பொன்னையாப் பிள்ளை இவர்களிடம் முறையாகப் பயின்று சுத்தமான பாடாந்திரமாகப் பதிப்பித்துள்ளார். தமிழில் பதவுரையும் கொடுத்து ஸ்வர தாள அமைப்பும் எளிதாக எல்லோரும் கையாளும் வண்ணம் அமைந்திருக்கிறது. குருமுகமாகப் பயின்று தாமே வீணையும் வாசித்து நன்கு பாடும் ஒரு வித்வான் நல்ல பாடாந்திரமாகப் புத்தகம் வெளியிட்டால் நன்றாகத்தான் இருக்கும் என்பதற்கு இந்த நூல் நல்ல சான்றாகும்.

ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் உருப்படிகளைத் தமிழில் ஸ்வர தாளக் குறிப்புடன் நூல் வடிவத்தில் முதன் முதலாக வெளியிட்டிருப்பது பாராட்டுக்குரியது. இதனை இசை உலகம் நன்கு பயன்படுத்திக் கொண்டு ஆசிரியர் மேலும் இதுபோல் அநேகம் வெளியீடுகள் வெளியிட ஊக்குவிக்கும் என்று நம்புகிறேன். விலை: ரூ. 3.00.

இவ்விரு நூல்களின் பதிப்பாசிரியர்: ஸங்கீத பூஷணம் எஸ். இராமநாதன், கிடைக்குமிடம்: கலைமகள் இசைக் கல்லூரி; 20, சைடோஜி தெரு, சென்னை—5.

- செம்மங்குடி ரா. சீனிவாசய்யர்

## மக்களா? மாக்களா?

ஒரு பாவமும் அறியாத சீன மக்கள், கம்யூனிஸ்ட் சீனாவில் சொன்னபடியெல்லாம் கேட்கும் சர்க்கஸ் மிருகங்களைப் போல் எப்படிக் கொடுங்கோலர்களால் அடக்கி ஆளப்படுகிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் விருப்பு வெறுப்பு ஏதுமின்றி எழுதப்பட்டுள்ள புதிய சீனா என்ற நூலைப் படிக்க வேண்டும். இதோ அப்புத்தகத்திலிருந்து சில பகுதிகள் :

அதிகாரிகளின் கூற்றை நம்புவதானால், விவசாயிகள் தங்களை அணி திரட்டிக் கம்யூன்கள் அமைக்க அனுமதிக்கும்படி அதிகாரிகளிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்களாம். தங்களைக் கொண்டு கம்யூன்கள் அமைக்கும்படி கெஞ்சிய சீன விவசாயிகளைவிட அதிக மகிழ்ச்சியோடும், மனப்பூர்வமாகவும் எந்த ஆடும் என்றுமே கசாப்புக் கடைக்குச் சென்றிருக்காது.

கம்யூன்களை ராணுவ மயமாக்கும் இந்தத் திட்டத்துக்கான காரணங்களை அவர்கள் எனக்கு விளக்கவில்லை. நானும் இந்தக் கேள்வியை நான் சென்று பார்த்த வெவ்வேறு கம்யூன்களில் டைரக்டர்களிடம் கேட்டுப் பார்த்து விட்டேன். நான் பண்ணைகளைச் சுற்றிப் பார்த்த போது வயல்களில் அங்கங்கே சில துப்பாக்கிகள் இருப்பதைக் கண்டேன். வெடி மருந்து கொண்டு போர் புரியக் கற்றுக் கொள்வதில் விவசாயிகள் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறார்கள் என்று கேட்டேன். டைரக்டர் என் கேள்விக்குப் பதில் அளிக்கவில்லை.

கூட்டுறவுகளில் வேலைக்குக் கூலி கொடுப்பதில் ஏற்பட்டுள்ள சிரமம்தான் கம்யூன் ஏற்பட்டதற்கான ஒரு காரணம் என்று

டைரக்டர் குறிப்பிட்டார். "புள்ளி விவரங்களை அடிப்படையாகக் கொண்ட ஒரு முறையைப் பயன்படுத்தினோம். உற்பத்தியில் அதிகப் புள்ளிகள் பெறும் தொழிலாளர்களுக்கு அதிகமான சம்பளம் கொடுக்கப்பட்டது. ஆனால் இந்தப் புள்ளிவிவர முறை சுமுகமாக நடைபெறவில்லை. இந்தப் பிரச்னைகளையெல்லாம் கம்யூன் தீர்த்து வருகிறது. ஏனெனில் அதனுடைய தொழிலாளர்களுக்குப் பணம் கொடுக்கும் பிரச்னையே கிடையாது!"

சிசு பராமரிப்பு நிலையங்களைச் சென்று பார்த்தேன். குழந்தைகள் தாமாகவே வட்டம் போட்டு நின்று இப்பொழுது பிரபலமாயிருக்கும் "சமதர்மமே சிறந்தது!" "கம்யூன்கள் நல்லவை" "தலைவர் மாவோ எங்கள் இரட்சகர்" போன்ற பாடல்களைப் பாடினார்கள்.

"இவர்கள் தங்கள் பெற்றோர்களிடம் போக மாட்டார்களா?" என்று ஆசிரியையிடம் கேட்டேன்.

"சாதாரணமாகப் போவதில்லை."

"குழந்தைகள் பெற்றோர்களைத் தேட மாட்டார்களா?"

"நான் அப்படி நினைக்கவில்லை. ஏனென்றால் அவர்களுக்குத் தேவையானவை எல்லாம் இங்கு நாங்கள் கொடுக்கிறோம்." பொம்மைகளைச் சுட்டிக் காட்டி, குழந்தைகளுக்கு உணவு, உடை மருத்துவ வசதிகள் மட்டுமின்றிப் பொம்மைகளும் விளையாட்டுக் கருவிகளும் கிடைக்கின்றன என்று மன நிறைவோடு சொன்னாள் ஆசிரியை.

பாலூட்டும் தாய்மார்களும், நோயுற்ற குழந்தைகளின் தாய்மார்களும் சிசு பராமரிப்பு நிலையங்களுக்கோ அல்லது இளஞ் சிறுவர்கள் கல்விக் கூடத்துக்கோ சென்று பார்ப்பது அவசியம் என்று இப்போது கருதப்படுவதில்லை. ஏனென்றால் அங்கு குழந்தைகள் பயிற்சி பெற்ற தாதிகளின் பராமரிப்பில் இருக்கிறார்கள்! பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைப் பற்றிக் கவலைப்படுவதையும் விட்டு விட்டு வேலையில் கவனம் செலுத்த வேண்டும்.

இதுதான் கம்யூன். இங்குதான் மனித ஜீவன்கள் மிருகக்காட்சிச் சாலையில் இருப்பனவற்றின் நிலைக்குத் தாழ்த்தப்பட்டிருக்கின்றன. இதிலும்கூட ஒரு வித்தியாசம் இருக்கிறது. காட்சிச் சாலையில் உள்ள மிருகங்கள் உழைக்கவே வேண்டியதில்லை. சதா அலறிக் கொண்டிருப்பதன் மூலம் மூளையைக் களைப்படையச் செய்வதும் ஓரளவு வலுக்கட்டாயப்படுத்தப்பட்டதுமான வானொலியை அந்த விலங்குகள் கேட்க வேண்டியதில்லை.

சிந்தனைப் போராட்டத்தைப் புகுத்தியதும் ஏற்கனவே பொதுவுடைமை சார்பு கொள்ளாதிருந்த பேராசிரியர்கள், தமது வாழ்நாள் முழுதும் தாம் சொன்னவை, கற்பித்தவை, எழுதியவை எல்லாவற்றையும் மிகவும் இழிவான, தரம் குறைந்த வார்த்தைகளில் மறுத்துரைக்கச் செய்யப்பட்டார்கள்.

பேராசிரியர் புங்யு – லான் ஒரு சீனத் தத்துவ ஞானி. இவருடைய புகழ் இந்தியாவில் டாக்டர் ராதாகிருஷ்ணனுடையதைப் போன்றது. இவர் தமது நூல்களில் எழுதியதையெல்லாம் மறுத்துரைக்கத் தம்மைத் தாமே பழித்துக் கொண்டார்:

"நானும் விடுதலை செய்யப்பட்டு விட்டதாக நான் இப்போது உணருகிறேன். மார்க்ஸிஸமும், லெனினிஸமும், புதிய சமுதாயத்தின் பல்வேறு அம்சங்கள் பற்றிய மா சே துங்கின் சிந்தனையும் செயல்களும் என்னுடைய சிந்தனையை மாற்றி விட்டன.... புதிய சமுதாயத்தில் என்னைத் தத்துவ ஞானப் பணியாளனாக்குவதற்கு முன் என்னுடைய ஆராய்ச்சியை முற்றிலும் புதிய முறையில் தொடங்கியாகவேண்டும் என்று இப்பொழுது நான் உணருகிறேன். தலைவர் மாவோவின் மாணவர்களாக வேண்டும் என்று சிலர் விரும்புவதாக நான் கேள்விப்பட்டபோது அவர்கள் ஏதோ மிகைபடக் கூறுவதாக எனக்குத் தோன்றியது.' ஆனால் தலைவர் மாவோவின் மாணவனாக இருக்கக் கூட நான் தகுதி யற்றவன் என்றும் அந்தத் தகுதியைப் பெற நான் கடுமையாக உழைக்க வேண்டுமென்றும் இப்போது உணருகிறேன்."

'புதிய சீனா' என்ற நூலில் இதுபோன்ற எத்தனையோ திடுக்கிட வைக்கும் உண்மைகள் அடங்கியுள்ளன. தென்மொழி புத்தக டிரஸ்ட் ஆதரவில் பதிப்பிக்கப்பட்டது. ஆசிரியர்: எஸ். சந்திரசேகர், தமிழாக்கம்: எம். ஏ. அப்பாஸ்; ஜெமினி பிரசுரம்; எல்லையம்மன் காலனி, சென்னை-6 விலை ரூ. 2.25.



அம்மாடியோவ்! என்ன கூட்டம், என்ன இரைச்சல்! என்னவெல்லாம் இருக்கு இங்கே வேடிக்கை பார்க்கிறதுக்கு! எல்லாம் பார்க்கப் பார்க்க ஜோராக இருக்கே! அப்பாகிட்டே தினம் தினம் இங்கே கூட்டிண்டு வரச் சொல்லணும்!

இதோ ஒருத்தன் கட கட சொட சொடன்னு சத்தம் போட்டுண்டு சாமான் வண்டியைத் தள்ளிண்டு வரான். கீழேயெல்லாம் அதிருகிறது. தரையெல்லாம் உடைஞ்சுபோயிடும்போலிருக்கு.

பின்னாலேயே கையில் நிறைய பேப்பர் புஸ்தகமெல்லாம் சுமந்துண்டு தொண்டை கிழியக் கத்திண்டு ஒருத்தன் வரான். எல்லாம் பழைய அட்டைப் படம். வீட்டிலே அன்னிக்கே வந்தாச்சு!



பின்னாலே சோடாக் கலர் வண்டி கிலுகிலுன்னு பாட்டில் குலுங்க வரது. அதைத் தள்ளிண்டு வர்றவன் மூஞ்சியிலே வியர்வை வழியறது. பார்த்தாக்கே பாவமா இருக்கு. சுத்த மண்டு போலிருக்கு. எதுக்காக இப்படிச் சிரமப்பட்டுக் கலர் வண்டியைத் தள்ளிண்டு வரான்? நானாயிருந்தால் எல்லாக் கலரையும் நானே குடிச்சுட்டு ஹாய்யா ஒரு இடத்திலே உட்கார்ந்திருப்பேன்.

விதவிதமாப் பொம்மையெல்லாம் வச்சுண்டு இன்னொரு வண்டி வரது. வயத்தை அமுக்கினால் 'கொய்'னு கத்தற முயல், கையிலே வச்சிக் கத்தினா 'டர்'னு சத்தம் போடுமே, அது, சாவி கொடுத்தால் குஸ்தி போடற பொம்மை, டான்ஸ் பொம்மை எல்லாம் இருக்கு. இதெல்லாம் என்கிட்டேயே இருக்கு. அப்பா இவன் கிட்டேயெல்லாம் வாங்க மாட்டார். பெரிசா கலர் லைட்டெல்லாம் போட்டு மின்னுமே, அந்தக் கடையிலேதான் வாங்குவார். அந்தக் கடைக்கார மாமா ரொம்ப நல்லவர். மீசை வச்சிண்டிருப்பார். அவர் சிரிக்கிறப்போ ஜோரா யிருக்கும். நானும் பெரியவனானப்புறம் மீசை வைச்சுப்பேன்.

அதோ பிளாட்பாரம் ஓரமாகப் பீடி குடிச்சுண்டு, சிவப்புச் சட்டை, முண்டாசு எல்லாம் போட்டுண்டு போர்ட்டர் ரயிலுக்காக உட்கார்ந்திருக்கான்.

ஐயையோ, அந்தக் குண்டு மாமா சிரிக்கறார். அவர் கையிலே இருந்த சிகரெட்டுக் கூட நழுவிக் கீழே விழுந்துடுத்து. உடம்பெல்லாம் குலுங்கறது. அம்மாடி, தொப்பை வெடிச்சுப் போயிடாதோ? அதென்ன, விசித்திரமா நாய்க் குட்டி குலைக்கிறப்போலே சிரிக்கிறார்? நல்ல வேடிக்கை, பார்த்தா எனக்கும் சிரிப்பு வரது.




அதோ ஒரு இங்கிலீஷ்காரர் வாக்கிங் ஸ்டிக்கை சுழற்றிக்கொண்டு அங்கேயும் இங்கேயுமா நடக்கிறார். எவ்வளவு வெளுப்பா இருக்கார்! சோப்புத் தேச்சுண்டு தண்ணீர் விட்டுக்காம இருந்தால் அப்படி ஆயிடலாமாம்! சோமுதான் சொல்றான். பொய்யாத்தான் இருக்கும். அது ஒரு புளுகுணி.

அங்கே ஒரு குழந்தை அம்மாவோட இடுப்பிலே கையையும் காலையும் உதைச்சிண்டு கீழே விழுந்திடும் போல் நெளிஞ்சு நெளிஞ்சு பெரிசா அழறது. மேலேயும் கீழேயுமா அதை ஆட்டி அந்த மாமி அதைச் சமாதானம் பண்ணறா. பக்கத்திலே ஒருத்தர் கீழே உட்கார்ந்து பையிலேயிருந்த எதையோ கையிலே எடுத்துண்டு அவசரமா எழுந்துக்கறார்: குழந்தைக்கு முன்னாலே கையிலே இருக்கிற கிலுகிலுப்பையை வேகமாக ஆட்டறார். குழந்தை அழறதை நிறுத்திட்டுக் கிலுகிலுப்பையைக் கண்ணை விரிச்சுப் பார்க்கிறது.....

அதோ ஒரு சின்னப் பெண்ணும் பிள்ளையும் ஓடி விளையாடறது: பிளாட்பாரத்து நுனிக்குப் போய் எட்டிப் பார்க்கிறது. தனியாவா வந்திருக்கும்? இல்லையே! அந்த மூக்குக் கண்ணாடி மாமா ரெண்டு பேரையும் கூப்பிட்டுச் சண்டை பிடிக்கிறார். பின்னே ரயில் ஸ்டேஷன்லே ஓடிப் பிடிச்சு விளையாடுவாளா? என்னைப் போலச் சமர்த்தாயிருக்கணும்.

வெள்ளைக் கோட்டு, பாண்ட், தொப்பி யெல்லாம் போட்டுண்டு இதோ ஒருத்தர் வரார். சட்டைப் பொத்தான் எல்லாம் பித்தளை — பளபளன்னு மின்னறது. இவர்தான் கார்டு — அன்னிக்கு அப்பா சொன்னாரே! நானும் பெரியவனானப்புறம் கார்டாவேன். ஜோரா எப்பவும் விசில் அடிச்சிண்டு கொடி காட்டிண்டு ரயில்லே குஷியா சவாரி பண்ணுவேன்.





இதோ பழக் கூடையைத் தூக்கிண்டு ஒருத்தன் போறான். அந்தச் சின்னப் பொண்ணு தன் அப்பாவோட வேஷ்டியைப் பிடிச்சு இழுத்து ஏதோ சொல்றது — அவர் அந்தப் பழக்காரனைக் கூப்பிடறார். பழத்தை வாங்கிக் கூடையிலே வைக்கிறார். பக்கத்திலே 'கஷாக்-முஷாக்'னு குண்டா ஒரு மாமி 'ஹாண்ட் பாக்'கைத் திறந்து பழக்காரனுக்குப் பணம் கொடுக்கிறாள். இப்ப அந்தப் பெண் கையிலே ஓர் ஆரஞ்சு. தோலைக் கடிச்சுத் துப்பி, உரிச்சு ஒரு சுளையை வாயில் போட்டுக்கிறது. அம்மாடி! பசிக்கிறப்பிலே இருக்கே!

அப்பா இன்னும்கூட ஞாயிறு மாமா கூடப் பேசிண்டிருக்கார். ஞாயிறு மாமா ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் எங்க வீட்டுக்கு வருவார். அம்மாவுக்கு அவரைக் கண்டாலே பிடிக்காது. 'வெளியிலே போறதுக்கு இல்லாமே நட்சத்திரையன் மாதிரி வந்து உட்கார்ந்திருக்கே'ன்னுட்டுப் பல்லைக் கடிச்சுப்பாள்.

திடீர்னு போர்ட்டர் பிடியைத் தூக்கி யெறிஞ்சிட்டு எழுந்திருக்கிறான். தூரத்திலே ரயில் வந்திண்டிருக்கு! 'கூ!சுக்குக், சுக்குக்!...' இந்த ரயிலேதான் ஞாயிறு மாமா ஊருக்குப் போகப் போகிறார். அப்பா அவருக்கு 'டாட்டா' சொல்றதுக்காக ஸ்டேஷனுக்கு வந்திருக்கார். நான் 'கூட வருவேன்னு' அழவேயில்லே. அப்பாவேதான் என்னையும் கூட்டிண்டு வந்தார்.

அம்மாடியோவ்! பக்கத்திலே பக்கத்திலே இஞ்சின் வந்துண்டிருக்கு. இதோ பிளாட்பாரத்திலே நுழைஞ்சிடுத்து! 'சோ'ன்னு பெரிய இரைச்சல்! 'கஸ்'னு காதைத் துளைக்கும் சத்தம். டைங், டைங், டைங், டைக்....! கடைசியிலே 'கீய்'னு முனகிண்டே ரயில் நின்னுடுத்து. பாவம், சும்மா ஓடி ஓடி அதுக்கு உடம்பெல்லாம் வலிக்கிறது.

போர்ட்டர் சாமானையெல்லாம் தூக்கிண்டு முன்னாலே ஓடுகிறான். பின்னாலே ஞாயிறு மாமா ஓடுகிறார். அப்பா என் கையைப் பிடித்துக் கொண்டு அவர்கள் பின்னால் மெல்லப் போகிறார்.

போர்ட்டர் சாமானையெல்லாம் உள்ளே வைச்சுட்டான். ஞாயிறு மாமா பர்ஸைத் திறந்து அவனுக்குப் பைஸா கொடுக்கிறார். அவன் அதை எண்ணிப் பார்த்து விட்டு, ''இன்னும் கொஞ்சம் போட்டுக் கொடு, சாமி!'' என்று கெஞ்சுகிறான். ஆனால் ஞாயிறு மாமா மசியவில்லை.

''போடா, போ! எனக்குத் தெரியும் எவ்வளவு கொடுப்பதென்று. இருபது வருடங்களாக இந்த ஊரில் இருக்கிறேன். என் கிட்டே வம்பு பண்ணாதே....'' என்று ஏதோ சொல்லிக் கொண்டு போகிறார். அவர் நிறுத்தினதும் அப்பாவும் ஏதேதோ சொல்கிறார்.

''ஐயோ, சாமி! பிள்ளைக்குட்டிக்காரன் சாமி. உங்க புண்ணியத்திலே எங்க வயிறு நிரம்புது. நீங்களே இப்படிச் சொன்னால் எப்படி சாமி....?''

''போடா, போடா! ஓடு இங்கிருந்து! இதற்கு மேல் ஒரு நயா பைசாகூடக் கிடையாது. ஆமாம்!''

''சாமி, சாமி! வயித்திலே அடிக்காதே, சாமி! இன்னும் ஒரு நாலணாவாச்சும் போட்

டுக் கொடு சாமீ....'' அப்பாவுக்கு வந்து விட்டதே கோபம்!

''என்னடா! நாலணு கம்மாவா வருகிறது? என்ன கம்மாச் சண்டை போடுகிருய்? உன் வேலைக்குச் சரியான கூலி கொடுத்தாயிற்று. எடுத்துக் கொண்டு மரியாதையாகப் போ'' என்று உரத்த குரலில் அதட்டுகிருர்.

ஏதோ முணுமுணுத்துக் கொண்டே போர்ட்டர் போகிருன்.

''அயோக்கியப் பசங்கள் ஸார்! மிரட்டன்னு செய்யறுங்கள், உம்?''

''பக்கா ரௌடிகள் ஸார்! ஆள் ஏமாந்தால் நன்ருகக் கொள்ளையடிச்சிடுவான்கள்!''

'டண், டண்' என்று மணியடிக்கிறது. பீப்பீ, பீப்பீ' என்று விசில் ஊதியவாறு கார்டு தூரத்திலிருந்து கொடியை மேலும் கீழுமாக ஆட்டுகிருர். 'கூ'வென்று சோம்பல் முறித்துக் கொண்டே ரயில் மெல்ல நகரத் தொடங்குகிறது.

ஞாயிறு மாமா ரயிலுக்குள்ளே யிருந்து கையை ஆட்டி 'டாட்டா' காட்டுருர். அப்பாவும் கையைத் தூக்கி ஆட்டுகிருர். நானும் பலமாகக் கையைத் தூக்கி ஆட்டறேன். அப்பாடா! ஞாயிறு மாமா ஒழிஞ்சார்! அம்மா சந்தோஷப்படுவாள்!

ஸ்டேஷனிலிருந்து வெளியே வந்து கொஞ்ச தூரம் நடக்கிறோம். எதிரே ஒரு ஹோட்டல் தெரியறது.

''அப்பா....ஓட்டல்....!''

''என்னடா வேணும் உனக்கு?''

''ஐஸ் கிரீம்.''

''சரி, வா!''

ஹோட்டல் வாசலில் சிவப்புச் சட்டையும் தொப்பியுமாக இருந்த காவற்காரன் கதவைத் திறந்து விடறுன். நானும் அப்பாவும் 'ஸ்டைலாக' உள்ளே போய் உட்காருகிறோம்.

ரொம்ப ஜோரான ஹோட்டல். இலேசாக 'பாண்ட்' வாசிக்கிற சத்தம். சுவரெல்லாம் நீலக் கலர் அடித்திருக்கிறது. ஜுலுஜுலு வென்று சுகமாக இருக்கிறது. மங்கலான வெளிச்சம். மெத்தென்ற சோபா. கண்ணாடி டேபிள் பளபள வென்கிறது. முகமெல்லாம் நன்ருத் தெரிகிறது.

அதோ, அதுதான் ஜுக் பாக்ஸ். எவனே ஒருத்தன் ஓட்டையிலே பைசாவைப்போட்டுப் பொத்தானே அழுத்தருன். ஜுக் பாக்ஸ் பாட ஆரம்பிச்சிடுத்து. இங்கிலீஷ் பாட்டு. டக, டகன்னு குதிரை ஓடறுப்பலே அவ்வளவு வேகமா யாரோ பாடறுன். எழுந்திருந்து குதிக்கலாம் போல இருக்கு.

வெயிட்டர் வந்து துணியாலே மேஜையைத் துடைச்சிட்டு நிற்கிறுன். வெள்ளைக் கோட்டு, பாண்ட், தொப்பி. பளபளன்னு மின்னற பொத்தான். வெயிட்டரும் கார்டும் அண்ணன் தம்பிகள் போல் இருக்கு.

''டு ஸ்டிராபெரி!'' என்று அப்பா சொல்கிருர். ஹையா! கண்ணுடிக் கிண்ணத்தில் ஐஸ்கிரீம் வந்து விட்டது. வாயில் போட்டால் ஜில்லென்று சுகமாக இருக்கிறது. நாக்கால் நாலு புரட்டுப் புரட்டினுல் இருந்த இடம் தெரியாமல் கரைஞ்சு போயிடறது. ''இஸ்ட், ஸ்ட்....!'' என்று சப்புக் கொட்டிக் கொண்டே சாப்பிட்டதால் ஐஸ்கிரீம் தீர்ந்ததே தெரியவில்லை. வாய் ஓரத்திலெல்லாம் ஐஸ்கிரீம் வழியறது.

''டேர்ட்டி பாய்! டேர்ட்டி பாய்!'' என்று அப்பா கர்ச்சீப்பால் வாயைத் துடைக்கிருர்.

வெயிட்டர் பில்லைக் கொண்டு வருகிருன். அவன் நீட்டிய தட்டிலே ஐந்து ரூபாய் நோட்டைப் போட்டார் அப்பா. வெயிட்டர் சிறிது நேரத்தில் தட்டில் சில்லறையுடன் வருகிருன். அப்பா அதில் நாலணுவை வைத்து விட்டு மீதியை எடுத்துக் கொள்கிருர். வெயிட்டர் இடுப்பை வளைத்து அப்பாவுக்கு ஒரு ஸலாம் செய்கிருன்.

ஹோட்டலுக்கு வெளியே வந்தாயிற்று.

''அப்பா! தட்டிலே நாலணுவை வைச்சுட்டாயே எதற்கு?''

''அது அவனுக்கு 'டிப்'! ''

''அப்படீன்னு?''

''அவன் நமக்கு எல்லாம் கொண்டு கொடுத்தானேல்லியோ, அதுக்குக் கூலி.''

''அப்பா! கூலியா?''

''ஆமாம். ஏன்?''

''இல்லேயப்பா, வந்து, போர்ட்டர் அவ்வளவு கனம் தூக்கிண்டு வந்தானே, அவனுக்கு நாலணு கொடுக்க மாட்டேன்னு சொன்னியே, இப்ப இவன் இரண்டே இரண்டு ஐஸ்கிரீம் தூக்கிண்டு வந்ததுக்கு நாலணு கொடுத்திட்டயே?''

அப்பா பதில் சொல்லாமல், ''ஏ, டாக்ஸி!'' என்று கை தட்டி அழைக்கிருர்.

போர்ட்டருக்கு நாலணு கூடக் குறையக் கொடுத்தால் அவரைக் கேட்கப் போவார் யாரும் இல்லை. ஆனுல் வெயிட்டருக்குக் கொடுக்கும் 'டிப்' அவருடைய கௌரவத்தின் மதிப்பு அல்லவா? அவருடைய அந்தஸ்தை விளம்பரப்படுத்தும் அரிய சாதனம் அல்லவா? இதையெல்லாம் அவர் தம் மகனுக்கு எப்படி விளக்குவார்.

## பம்பாயில் பங்குனி உத்திர விழா

(1963 ஏப்ரல் 4-ந் தேதி முதல் 9-ந் தேதி வரை)

இடம் — 'நப்பூ ஹால்' இலாங் ரோடு, மாதுங்கா

6 ந் தேதி காலை 8 - மணிக்கு ஆறுமுகப் பெருமானுக்கு லக்ஷார்ச்சனை

மேற்படி விழாவில் அகஸ்திய பீடம் சிவயோகி சித்தானந்தா, கோயம்புத்தூர் 'ஸ்ரீராம கதா ரத்னம்' வி. தியாகராஜன், சென்னை அருட்கவி சேதுராமன் ஆகியவர்கள் கலந்து கொள்கிருர்கள்.

மார்ச் 29 முதல்

சாந்தி

பிராட்வே

சயானி



பிரசாத் மூவீஸ்



# இருவர் உள்ளம்



பிரசாத்

மு. கருணாநிதி

K.V. மஹாதேவன்

கண்ணதாசன்

MOULIS



# வட்ட மேஜை

## கட்டாய சேமிப்பு

அவசர நெருக்கடி என்ற பெயரால் கொண்டு வரப்படுகிற ஒவ்வொரு திட்டமும் நாட்டு மக்களை, குறிப்பாக மாதச் சம்பளம் பெறுகின்ற அலுவலாளர்களை மிகவும் பாதிப்பதாக உள்ளது. கட்டாய சேமிப்பு என்று ஒன்று சட்டபூர்வமாகக் கொண்டு வந்தபின் 'கியூமெலட்டிவ் டைம் டெபாசிட்'டும் கட்டாய முறையில் வசூல் செய்வது மிகவும் வருந்துதற்குரியது. நிலைமை மிகக் கவலைக்கிடமாகக்கூடும். உதாரணமாக ஓர் ஆரம்ப ஆசிரியர் ரூ. 80 சம்பளம் பெறுகின்றார். இதில் சாதாரண சேமிப்பாகக் குறைந்தது ரூ. 5-ம், பண்டிகைகளுக்காக முன் பணம் பெற்றிருந்தால் அதற்கு ரூ. 10-ம், கதர் துணி தவணை முறையில் பெற்றிருப்பின் ரூ. 5-ம், கட்டாய சேமிப்பு (மூன்று சதவிகிதம்) ரூ. 2-40-ம், ஒரு நாள் சம்பளம் பாதுகாப்பு நிதி எனத் தோராயமாக ரூ. 3-ம் பிடித்தமாகும். எஞ்சி நிற்பது ரூ. 54-60 மட்டுமே! இதிலும் கியூமெலெட்டிவ் டைம் டெபாசிட்டுக்காகக் குறைந்தது ரூ. 5 கட்டாய முறையில் சம்பளத்திலேயே பிடித்தம் செய்யப்படுகிறது. கியூமெலெட்டிவ் டைம் டெபாசிட் என்பது அவரவர்கள் விருப்பத்துக்குரிய சேமிப்பு ஆகும். ஆனால் உதாரணமாகத் திருச்சி ஜில்லா தாத்தையங்கார் பேட்டை பஞ்சாயத்து யூனியனில் மேற்படி சேமிப்பு கட்டாய முறையில் அதிகாரத்தைப் பயன்படுத்தி வசூலிக்கப்படுகிறது. பணம் கட்ட மறுத்தால் மாதச் சம்பளமே நிறுத்தப்படுமென்று எச்சரிக்கப்படுகிறார்கள்.

ஆவடி சோஷலிஸம் மக்களை அன்னக் காவடியாக்கத்தான் வந்துள்ளதோ என்று எண்ண வேண்டியுள்ளது.

தாத்தையங்கார்பேட்டை
18-3-63 'பொய்யாமொழி'

## வானொலிக்கு ஒரு வேண்டுகோள்

சென்னையிலும் மற்ற இடங்களிலும் சமீப காலமாகக் கதா உபன்யாசங்கள் ஏராளம் நடைபெற்றுவருவது ஒரு நல்ல அடையாளம். நாஸ்திகம் நீங்கித் தர்மத்தில் மனம் செல்லும்படி செய்வதில் இவை மிகவும் உதவுகின்றன. தற்போது விளங்கி வரும் ராஜாங்கத்தால், நமக்கு க்ஷேமம் உண்டாகுமோ இல்லையோ, இப்புராணக் கதை நூல்களைக் கேட்பதில் மனச்சாந்தியும் மோட்சமும் கிடைக்கும் என்பது நிச்சயம்.

தர்மபுரம் ஆதீனம் பத்து மாணுக்கருக்கு இலவசமாகக் ''கதாகாலக்ஷேபம்'' கற்றுக் கொடுக்க நல்ல வசதி செய்துள்ளது. இது மிகவும் போற்றத்தக்கது. ஆனால் சென்னை, திருச்சி ரேடியோ நிலையங்கள் இக்கலைக்குப் போதுமான ஆதரவு அளிக்காதது வருந்தத்தக்கது. ரேடியோ நிலையம் சிறந்தோர்க்கும், சிறப்பில் குறைந்தோர்க்கும் சமமாகவே ஒரு மணி நேரம் கொடுத்து வருவது அர்த்தமற்றது. சீனியர் பாகவதர்களுக்கு ஒன்றே கால் மணி நேரமோ, ஒன்றரை மணி நேரமோ அளித்து, ஜூனியர் தரத்தாருக்கு முக்கால் மணி, ஒரு மணி எனப் பிரிவு செய்தால் சீனியர்கள் கண்ணியம் அடைவதுடன் ஜூனியர்களுக்கு ஒரு வழிகாட்டியாகவும் தூண்டுகோலாகவும் அமையும்.

சில மாதங்களுக்கு முன் வரையில் கதா காலக்ஷேபங்கள், சென்னை ரேடியோ நிலையத்தில் ஞாயிறு இரவு 7-30 மணி முதல் 8-30 மணி வரை அதன் சமயம் அளித்து வந்தார்கள். சமீப காலமாக ஞாயிறு மாலை 9-30 முதல் 10-30 மணி வரை என்று மாற்றி அமைத்துள்ளார்கள். இந்தச் சமயம் அநேகர் உறங்கப் போகும் சமயம். ஆகையால் கேட்பதற்கு உற்சாகம் குன்றி விடுகிறது.

ஒரு வாரம் ரேடியோவில் டஜன் கணக்காகக் கர்நாடக சங்கீத நிகழ்ச்சிகள் நடந்து வர, வாரம் ஒன்றில் உயர்தரமான ஒரு கதாகால க்ஷேபமும், ஒரு புராண உபந்நியாசமும், ஏற்பாடு செய்வதில் என்ன தடை? முன் நடைபெற்றது போல் பிரத்தியேகக் 'கதா காலக்ஷேப வாரம்' எனவும் ஸ்ரீ ராமநவமி ஸ்ரீஜயந்தி போன்ற முக்கிய தினங்களில் பொருத்தமான கதா காலக்ஷேபங்களும் வானொலிநிகழ்ச்சிகளில் இடம்பெறவேண்டும்.

சென்னை-4
7-3-63 கலா ரசிகன்

## ''கோலோடு நின்றான் இரவு''

தேசியப் பாதுகாப்பு நிதிக்குக் கட்டாயமாகப் பணம் திரட்டுவது குறித்து, ''சிறு அதிகாரிகள் சில சமயம் 'தங்கள் சாமர்த்தியத்தைக் காட்ட' அவர்களிடம் கோரப்பட்டதற்கு அதிகமாகச் செய்து விடுகிறார்கள்'' என்பதாக நேருஜீ 25-2-63 அன்று ராஜ்ய சபையில் கூறியுள்ளார். ஆனால் 'சாமர்த்தியத்தைக் காட்ட' என்பதைத் திருத்தி 'அதிகாரத்தைக் காட்ட' என்ற அடைமொழி யிருந்தால் பொருந்தும்.

நாங்கள் மாதம் ஒரு ரூபாய் யுத்தம் முடியும்வரை தருவதாக வாக்களித்தோம். ஆனால் அதைப் 'பிச்சைக் காசு' என மாவட்டக் கல்வி அதிகாரி குறிப்பிட்டதோடு ஒரு பெருந்தொகை வேண்டுமென்று ஆசிரியர்களை வலுக் கட்டாயமாகக் கேட்டார். பாவம்! ஆசிரியர்கள் என்ன செய்வார்கள்...? செய்வதறியாது அதிகாரத்துக்குப் பயந்து இருபத்தைந்து ரூபாய்க்கு மேல் தருவதாக எழுதிவிட்டனர். என்ன செய்வது? கடன் வாங்கித்தான் பலரும் அதைக் கொடுக்கவேண்டிய நிலை உள்ளது. இதை நேருஜீ அறிய வேண்டும். இப்படி வலுக் கட்டாயமாகக் கேட்பது நன்கொடையாகாது.

சாத்தான்குளம்
28-2-63 சா. இன்பராக





# அன்பின் பரிசு

**பீஷ்மன்**

எதிர் வீட்டு வாசலில் வந்து நின்று பால் வாங்கிக் கொண்டிருந்த பெண்ணைப் பார்த்ததும் கிழவரின் கண்கள் வியப்பினால் அகல விரிந்தன. 'அதே உருவ அமைப்பு; அதே உயரம்; அதே போலக் கண்கள் — இது எப்படிச் சாத்தியமாயிற்று?' — தன் அநுமானம் சரிதானா என்பதைத் தனக்குத்தானே நிரூபித்துக் கொள்வதற்காக உள்ளே வந்து அந்த ஓவியத்தைப் பார்த்தார். வாசலில் அவர் சற்றுமுன் பார்த்த பெண் அந்த ஓவியத்தில் சிரித்துக் கொண்டிருந்தாள்.

வியப்பினிடையே அவர் இதயத்தில் வேதனையும் படர்ந்தது.

''உமா....!'' என்று நெட்டுயிர்த்தார் அந்தக் கிழவர்.

அவளை மறுபடியும் பார்க்கும் எண்ணத்துடன் அவர் வாசலுக்கே வந்தபோது அங்கே அந்தப் பெண்ணைக் காணோம். பால்காரன் நான்கு வீடுகளுக்கு அப்பால் போய்க் கொண்டிருந்தான். 'பால் வாங்கிக்கொண்டு உள்ளே போய் விட்டாள்போல் இருக்கிறது' என்று நினைத்துக் கொண்டார் அவர்.

அவருடைய ஓவியத்தைப் பார்த்தவர்கள் வேறு யாராவது அவரிடம், 'இதே போல் ஒரு பெண்ணை நான் பார்த்திருக்கிறேன்!' என்று சொல்லியிருந்தால், 'நிச்சயமாக இருக்க முடியாது!' என்று அந்த மனிதரிடம் மறுத்துக் கூறியிருப்பார் அவர். தாமே நேரில் இந்த அதிசயத்தைப் பார்க்கும்போது நம்பித்தானே ஆக வேண்டியிருக்கிறது.

உலகத்தில் ஒரே மாதிரிச் சாயல் உள்ளவர்கள் இருக்கலாம். அவருடைய கற்பனையில் பிறந்த ஓவியப் பெண்ணைப் போலவே உருவ அமைப்புடன் உடலும் சதையும் உயிரும் உணர்வும் கொண்ட மானிடப் பெண் இருக்கிறாளே! 'இது எப்படிச் சாத்தியமாயிற்று...?'

தம் சந்தேகத்தில் இருந்த பலவீனத்தை உணர்ந்த போது அவருக்குச் சிரிப்பு வந்தது.

உமா என்ற உயிர் ஓவியம் குழந்தையாய் அவர் வீட்டில் தத்தித் தத்தி நடந்து, தன் பூப் பிஞ்சுப் பாதம் பதியும் இடமெல்லாம் பொலிவுறச் செய்து கொண்டிருந்தபோது, அந்தக்

குழந்தையின் பிற்கால வளர்ச்சியின் அநுமானத்தில் விளைந்த கற்பனைதானே அந்த ஓவியமே !

உமா இப்போது இருந்தால்...?

அவளுக்குப் பதினாறு வயது ஆகியிருக்கும்.

'அவளுடைய உருவத்தின் ஒளியை மட்டும் தானே கற்பனை செய்து ஓவியமாகத் தீட்ட முடிந்தது! 'அவள் எப்படிப் பேசுவாள், நடப்பாள், சிரிப்பாள், பாடுவாள்' என்றெல்லாம் தெரிந்து கொள்ளத்தான் இந்த எதிர் வீட்டுப் பெண்ணை நான் இப்போது காண்கிறேனோ?'

அந்தப் பெண்ணைக் கூப்பிட்டு அவள் பேசுவதைக் கேட்க வேண்டும் என்ற ஆவல் அவர் மனத்தில் தீவிரமாக எழுந்தது.

உமா மறைந்து போய்ப் பதினைந்து ஆண்டுகள் ஆனபின்பு இப்படி ஒரு நிகழ்ச்சி அவளைப் பற்றிய சிந்தனைகளை, நெய்யுண்ட பெரு நெருப்பாய்ப் பொங்கியெழச் செய்வானேன்! காலப் போக்கில் அவர் அவளைப் பற்றிய எண்ணத்தை மறந்து விட்டதாக நினைத்துக் கொண்டிருந்தாலும் அந்த ஓவியம் அந்த நினைப்பை அவர் மனத்தின் அடித்தளத்தில் வளர்த்துக் கொண்டுதான் இருந்திருக்கிறது. பையன் காமேசன் 'இவன் தந்தை எந்நோற்றான் கொல்!' என்று மற்றவர் கூறும்படி புகழிலும் நிலையிலும் உயர்ந்து விளங்குகிற போதிலும், தமக்கே புரியாத ஒரு தனிமைக் குமைப்பில் அவர் பல நாட்கள் தவித்திருக்கிறார்.

பம்பாயில் காமேசன் புகழ்பெற்ற வழக்கறிஞனாக இருந்தான். அப்பாவிடம் அவனுக்கு உள்ள பக்தியின் ஆழத்தைக் கண்டு உறவினர்கள் எல்லோருமே வியப்பார்கள். அவன் மட்டும்தான் அப்படி என்றில்லை. அவனுக்கு வாய்த்திருந்த மனைவி கனகாவும் தங்கமான பெண். சொந்த மகளைப் போல் அவரிடம் அன்பும் பாசமும் கொண்டிருந்தாள் அவள். அவருக்கு மனக் குறை ஏற்படக் காரணமே கிடையாது. பங்களாவும், காரும், ஏனென்று கேட்க ஏவலர்களும் அன்பைச் சொரிய மகனும் மருமகளும்...எல்லாம் இருந்தும் அவருக்கு மட்டும் சொல்லத் தெரியாத தொரு சோகம் நெஞ்சில் சுழன்றுகொண்டுதான் இருந்தது.

சென்னையில் மயிலாப்பூரில் அவர்களுக்குச் சொந்தமான வீடு ஒன்று இருந்தது. அதை வாடகைக்கு விட்டிருந்தார்கள். குடியிருந்தவர்கள் அந்த வருடம் ஏப்ரலில் வீட்டைக் காலிசெய்து கொண்டு எங்கோ மாற்றிப் போய்விட்டார்கள். வாடகைக்கு வர ஆட்கள் 'நான்' நீ என்று போட்டி போட்டுக் கொண்டு வந்த போது கிழவர் வீட்டை வாடகைக்கு விட வேண்டாம் என்று திடீரென்று உத்தரவு போட்டு விட்டார். அவர் கூறிவிட்டால் அப்புறம் அதுதான் அந்த வீட்டில் வேதம். கோடை விடுமுறை ஆரம்பித்தது. சென்னைக்குப் போக வேண்டும் என்ற தம் ஆவலைத் தெரிவித்தார் கிழவர். காமேசன் தயங்கவில்லை. உடனே புறப்பட்டு விட்டான். ஒரு மாதம் மயிலாப்பூரில் குடித்தனம் நடந்தது. அதற்கு மேல் அவன் அங்கே தங்க முடியாது. கிழவர் என்னவோ சென்னையை விட்டுப் புறப்பட்டு வருவதாக இல்லை.

''சரி. நீங்கள் வரும்போது வாருங்கள். துணைக்குக் கனகா இங்கேயே இருக்கட்டும்!'' என்று அவன் கூறினான். கிழவர் அதற்கும் ஒத்துக் கொள்ளவில்லை.

''நீங்கள் புறப்பட்டுப் போங்கள். சமையற்காரச் சங்கரன் இங்கே இருக்கட்டும். இன்னும் ஒரு மாதம் இருந்து விட்டு நான் வருகிறேன்'' என்று அவர் கூறிவிட்டார்.

வேறு வழியில்லாமல் அவர் சொன்னபடியே சங்கரனை அவருக்குத் துணையாய் விட்டுவிட்டு அவர்கள் போய்ச் சேர்ந்தார்கள்.

தினசரி கற்பகாம்பிகையின் தரிசனம். நினைத்தால் திருவல்லிக்கேணிக்குச் சென்று பார்த்தசாரதியைத் தரிசனம் பண்ணிவிட்டு வருவார். வீட்டு வாசலில் காம்பவுண்டுக்குள்ளிருந்த தோட்டத்தில் புஷ்பச் செடிகள் நட்டு விட்டுப் போயிருந்தாள் மருமகள். சாயங்கால வேளையில் அவற்றுக்குத் தண்ணீர் ஊற்றுவது அவருக்கு ஒரு பொழுது போக்கு. இந்தத் தனி வாழ்விலும் ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்தது. மாற்றமில்லாத வாழ்வு எத்தனை சுகபோக வாழ்வானாலும் அதில் கவர்ச்சியிருப்பதில்லை என்று நினைத்துக் கொண்டார் அவர்.

அவர் வீட்டு மாடியில் உட்கார்ந்து கொண்டால் கபாலி கோயிலும் தெப்பக்குளத்தின் ஒரு பகுதியும் அழகாகத் தெரியும். அவர் ஓவியம் வரைவதை விட்டு எவ்வளவோ காலம்



ஆகிவிட்டிருந்த போதிலும் இந்தக் காட்சியை வரைய வேண்டும் என்று இப்போது அவருக்குத் தோன்றியது.

அதை வரைகிற திருஷ்டி இன்பத்தில் சில நாட்கள் கழிந்தன.

'மிகுதியுள்ள நாட்களுக்கு உமாவை நினைப்பூட்ட இந்தப் பெண் என் பார்வையில் பட்டிருக்கிறாள்!' என்று எண்ணினார் அவர். புதிதாகத்தான் அவர்கள் அங்கு குடி வந்திருக்க வேண்டும். இல்லையென்றால் இது வரை அவர் கண்ணில் படாமல் இருக்க முடியாதல்லவா?

வெய்யில் மங்கிப் பொழுது சாய்ந்துகொண்டிருந்தது. அப்பொழுதுதான் தோட்டத்துக்குத் தண்ணீர் தெளித்திருந்ததால் வீசிய காற்றில் மண் வாசனையும் நீருண்ட காய்ந்த நிலத்திலிருந்து கிளம்பிய வெப்பமும் கலந்திருந்தன.

வராந்தாவில் வாசலுக்கு நேராகச் சாய்வு நாற்காலியை எடுத்துப் போட்டுக் கொண்டு சாய்ந்தார் கிழவர்.

கிட்டத்தட்ட அறுபதை நெருங்கிக்கொண்டிருந்தார் அவர். இந்த அறுபதாண்டு வாழ்க்கையில் முற்பகுதி மிகவும் சிரமமான நிலையில்தான் நகர்ந்தது. பாலை பிடித்தவள் பாக்கியம்தானோ என்னவோ, பாக்கியம் அவர் மனைவியாய் வாய்த்த பிறகுதான் அவரது ஓவியங்களுக்குத் தமிழகத்தில் மதிப்பு ஏற்பட்டது. படக் கடைகளில் எல்லாம் பெரும்பாலும் அவர் வரைந்த ஓவியங்கள்தாம் காட்சியளிக்கும். அந்த இளம் வயதிலேயே அவருக்கென்னவோ இறைவனின் திருக் கோலங்களை வரைவதில் ஓர் ஈடுபாடு. திருத்தலங்களில் கோவில் கொண்டுள்ள வடிவங்கள் ஓவியமாய் அவர் கைவண்ணம் பெற்று எத்தனையோ பக்தர்களின் இல்லங்களில் பூசை அறையை அலங்கரித்தன.

காமேசன் பிறக்கும்போது அவருக்கு முப்பது வயது. மயிலாப்பூரில் இப்போ இருக்கும் இந்த வீட்டை அவர் வாங்கிப் புதுப்பித்தது அப்போதுதான்.

'கலையும் புகழொளியும் களின் மிக்க இல்வாழ்வும் விலையில்லாத் தேன் மழலை மென் கலையும்' கூடிக் களி பெருக்கிய காவிய நாட்கள் அவை.

அந் நாட்களின் இனிமைக்கு அழகு சேர்க்க வந்து அவதரித்தாள் உமா.

செந்தாழை நிறம்; பூவிதழின் மென்மை; தொட்டுத் தொட்டுக் கை தேர்ந்த சிற்பி செதுக்கினாற் போன்ற அவயவங்கள். தெய்வக் குஞ்சு மலர்ந்தது போன்ற குழந்தை வடிவம் அது!

ஜகதீசன் — அதுதான் அவர் பெயர் — கலையின் உயிர் வடிவாய் உமா தவழுகையில் மெய்மறந்து போய் அந்தக் காட்சியின்பத்தில் லயித்து விடுவார்.

"உங்கள் கண்ணே பட்டுவிடும் போலிருக்கிறதே!" என்று அவரைக் கேலி செய்வாள் பாக்கியம்.

"என் கண் கலைக் கண்! அது பட்ட இடம் துலங்கும்!" என்று அவளுக்குப் பதில் சொல்லுவார் அவர்.

"ஐயே! பெருமையைப் பாரு...!" இதைச் சொல்லும்போது பாக்கியத்தின் முகத்தில் ஒளி விடும் பெருமை எழிலை அவர் ரசிப்பார்.

'பாக்கியம் அழகுதான் என்றாலும் அது வெறும் மனத்தைக் கவருகிற மானிட அழகு. உமா இந்தக் குழந்தை யுருவிலே தரும் அழகு மெய் சிலிர்க்க வைக்கும் தெய்வ அழகு!' என்று எண்ணமிடுவார் அவர்.

உமா நடக்கத் தொடங்கினாள்.

வயது வந்த பெண் நளினமாக நடக்கிறதை அன்ன நடை என்று கூறிப் புகழ்கிறார்களே; குழந்தை நடக்கத் தொடங்கிய பருவத்தில் தன் பூப்பிஞ்சுக் கால்களைப் பெயர்த்து அடி பதித்து, தத்தித் தத்தி நடக்கும் இந்த அழகுக்கு எதை உவமை சொல்வது?

"கொஞ்சம் இங்கே வந்து பாருங்களேன்!"

பூவேலை செய்து கொண்டிருந்த துணியும் கையுமாய் ஜகதீசனின் அறைக்குள் வந்து சொற்களை மகிழ்ச்சிப் பூக்களாய்ப் பாக்கியம் கொட்டியபோது அவர் எழுந்திருக்க மனமில்லாமல்தான் எழுந்து வந்தார்.

ஆடிவரும் தேனாய், நடக்கத் தெரிந்து விட்ட பெருமையில் பூமுகமே புன்னகையாய் மலர, மேசை மீதிருக்கும் 'ஜெலுலாயிட்' பொம்மையை நோக்கிக் கை நீட்டியவாறு உமா தத்தித் தத்தி நடந்து வந்தாள்.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்தக் குழந்தை — எழில், குமரியழகாய் ஒயிலாய்த் தன்னைச் சுற்றிலும் சௌந்தரிய ஒளி பரப்பி நடக்கும் காட்சி ஜகதீசனின் கண் முன் விரிந்தது.

"வயசிலே உமா ரொம்ப அழகாயிருக்கும் இல்லே?" என்று அவர் மனத்தின் நினைப்பை ஒட்டினாற்போல ஒரு கேள்வி பிறந்தது பாக்கியத்தினிடமிருந்து.

"அதைத்தான் நானும் நினைத்துக்கொண்டிருந்தேன்!" என்றார் அவர்.

"வயசானப்புறம் உமா எப்படியிருக்கு மின்னு கற்பனை பண்ணி... உம்...." என்று நிறுத்தினாள் அவள்.

"என்னாலே வரைய முடியுமான்னு கேட்கிறாய் இல்லே?...."

"உம்...!" என்று சொல்லி அழகாகத் தலையை ஆட்டினாள் பாக்கியம். ஜெலுலாயிட் பொம்மையைக் கையில் எடுத்துக்



தனஞ்சயன், பார்த்தன், ஏகலைவன் என்று சொல்லிறோமே, அவர்களெல்லாம் வில்லில் நாணேற்றி அம்பு தொடுத்து ஒரு பொருளை இரண்டாக்கித் தருவார்கள். ஆனால் இரண்டு பொருள்களை ஒன்றாக்கித் தரும் வில்லாளி ஒருவன் இருக்கிறான். அவன் யார் தெரியுமா? மன்மதன்தான். இரண்டு உள்ளங்களை ஒன்றாக்கி விடுகிறான் அல்லவா?



பென்டெக்ஸ் "Bentex"

ஸ்ட்ராப்புகள்

எந்தக் கடிகாரத்துக்கும்
ஏற்றவை, எழில் மிகுந்தவை

   

கொண்டு மேஜை அருகில் நின்றவாறு "அப்டா....பாப்பா.... பாரு....!" என்று மிழற்றிக் கொண்டிருந்த உமாவைத்தான் அவர் பார்த்தார்.

மார்போடு புத்தகங்களை அணைத்துக் கொண்டு பருவ எழில் குலுங்கும் பூங்கொடியாய் உமாவை அவர் மனம் கற்பனையில் பார்த்தது.

"பாக்கியம்....இன்னும் இரண்டே நாட்களில் பாரேன்....!" என்று சொல்லிவிட்டுத் தம் அறையை நோக்கி நடந்தார் அவர்.

இரண்டு நாட்களில் அற்புதமான ஓவியம் ஒன்று தயாராகி விட்டது. உமாவைப் பதினெட்டு வயது மங்கையாகக் கற்பனை செய்து அந்தக் கற்பனைக்கு ஒளியும் வண்ணமும் ஊட்டியிருந்தார் அவர். மார்போடு அணைத்த புத்தகங்களுடன் இளமை அழகும் புன்னகை மலர்ந்த பூ முகமுமாய் ஓவியத்தில் உமா நின்றிருந்தாள்.

குழந்தை நடக்கத் தொடங்கியதைப் பார்ப்பதற்கு அவரைப் பாக்கியம் கூப்பிட்டதைப் போலவே அதே இனிமைக் குரலில் அவர் படத்தை எழுதி முடித்ததும் அவளை அழைத்தார்.

"கொஞ்சம் இங்கே வந்து பாரேன்."

உமாவை எடுத்துக் கொண்டு "என்னவாம்...?" என்று கொஞ்சலாகக் கேட்டுக் கொண்டே வந்த பாக்கியம் ஓவியத்தைப் பார்த்துப் பிரமித்துப்போய் நின்றுவிட்டாள்.

குழந்தைதான் "பாப்பா...பாப்பா...!" என்று சொல்லிப் படத்தைப் பார்த்துவிட்டுச் சிரித்தது.

"பாப்பா இல்லேடி கண்ணு! உமாக்குட்டியாக்கும்....!" என்றாள் பாக்கியம் பெருமை பிடிபடாமல்.

அவள் பேச்சு குழந்தைக்குப் புரியவில்லை. அது வெறுமே 'பாப்பா' என்று மிழற்றிக் கொண்டிருந்தது.

ஜகதீசன் அந்த ஓவியத்துக்குக் கண்ணாடி போட்டுத் தம் அறையில் வாசலுக்கெதிரே மாட்டி வைத்தார்.

அவரைப் பார்க்க வருகிறவர்கள் அந்தப் படத்தைப் பார்க்காமல் திரும்ப முடியாது. அதைப் பார்த்தவர்கள் அதன் அழகில் சிந்தை பறிகொடுக்காமல் இருக்க முடியாது.

"இது யார் ஸார்...?" என்று யாராவது கேட்டால் "என் பெண் பதினெட்டு வயதில் இப்படித்தான் இருப்பாள்" என்று சொல்லிவிட்டுச் சிரிப்பார் அவர்.

'அவள் இருந்திருந்தால் பதினெட்டு வயதில் இப்படித்தான் இருந்திருப்பாளோ' என்ற அனுமானத்தை மட்டும்தான் காலம் அவரிடம் விட்டு வைத்தது.

அந்த ஓவியம் வரைந்த வேளைக் கோளாறோ என்னவோ, ஒரு மாதத்துக்குள்ளேயே 'உமா' என்ற உயிர் ஓவியத்தை 'டிப்தீரியா' என்ற காரணத்தைக் காட்டிக் காலன் அவரிடமிருந்து பறித்துப் போய் விட்டான். மிஞ்சியது இந்த ஓவியம்தான்.

சிந்தனைகள் சித்த வெளியில் துயரப் புழுதியைக் கிளப்பி விட்டிருந்த வேளையில் "தாத்தா...!" என்னும் தேன் குரல் அமிர்த தாரையாய் வந்து விழுந்தது.

எதிர் வீட்டுப் பெண் எதிரே நின்று கொண்டிருந்தாள்.

வியப்பினால் அகல விரிந்த கண்களுடன் அவளைப் பார்த்தார் கிழவர். 'அதே நிறம், அதே உயரம், குறுகுறுக்கும் நீள் விழிகள். கூரிய மூக்கு; உமாவைப் போலவேதான்.

"என்னம்மா வேணும் உமா...?" பரிவுக் குரலில் அவர் இப்படிக் கேட்டபோது அந்தப் பெண் அழகாகச் சிரித்தாள்.'

"என் பேர் உமா இல்லே லலிதா!"

"ஓ!..." தன் தவற்றை அப்போதுதான் அவர் உணர்ந்தார். "என்னம்மா...?"

"இன்னிக்குத் தினப் பத்திரிகை இருக்கா தாத்தா? ஒரு விளம்பரம் பார்க்கணும்!"

"இருக்கே. உள்ளே போய் நீயே பார்த்து எடுத்துக்கோம்மா!"

அவள் கொடியாய் நடந்து உள்ளே போனாள். சற்றைக்கெல்லாம் கையில் பத்திரிகையுடன் வெளியே வந்தவள், "அந்தப் படத்திலே இருக்கிற பெண் யாரு தாத்தா?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"என் பெண்தான்... உமா!"

"ஓ! அதுதான் என்னையும் உமான்னு கூப்பிட்டேளா?"

"நீ எனக்கு உமா மாதிரிதானம்மா!"

"ஆமாம் தாத்தா. உங்க உமாகூட என்னை மாதிரித்தான் இருக்கா. பார்த்துவிட்டுக் கொண்டு வரேன். ரொம்ப தாங்ஸ்!"

'உமா...லலிதா....!' பெயர்தான் வேறு என்று அவள் நடந்து செல்கையில் அவர் முனகிக் கொண்டார்.

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின் மறைந்து போய்விட்ட அவர் பெண்ணையே திரும்பவும் காலம் கொடுத்த வளர்ச்சியுடன் எதிரே கண்டுவிட்டாற் போல், அவர் மனத்தில் அந்தப் பெண்ணிடம் ஒரு பாசப் பரிவு கிளர்ந்தெழுந்தது. அன்றையத் தினப் பத்திரிகை வாங்க வந்து அவருக்கு அறிமுகமான அந்தப் பெண்ணும் அவருடன் பாசத்துடன் பழகத் தொடங்கினாள்.

உமாவின் கதையையும் ஓவியம் பிறந்த கதையையும் அவர் அவளிடம் கூறியபோது அந்தப் பெண் நெகிழ்ந்து போனாள்.

"என்னையே உங்க உமான்னு நினைச்சுக்குங்கோ தாத்தா!...உம்?" என்றாள் அவள்.

"லலிதா! நீ நல்ல பெண்!" என்று நிஜமான பொருளுணர்வுடன் மனத்துக்குள் சொல்லிக் கொண்டார் அவர்.

காமேசன் அவரை விட்டுப் போய் ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டது. ஒரு மாதத்தில் புறப்பட்டு வருவதாய் அவர்களிடம் சொல்லி விருந்த கிழவருக்கு இப்போது சென்னையை விட்டுப் போக மனமில்லை.

இழந்த பொருளைத் திரும்பப் பெற்று விட்ட மகிழ்ச்சியுடன், இல்லை இழந்த உயிரையே திரும்பப் பெற்றுவிட்ட பரவசத்துடன் அவருக்கு இப்போது நாட்கள் ஓடின.

லலிதாவின் தந்தை வர்த்தகக் கம்பெனியொன்றில் வேலை பார்த்து வந்தார். அவள்தான் அவருக்கு மூத்த பெண். அவளுக்குப் பிறகு நான்கு பெண்கள்; ஒரு பையன். பள்ளி இறுதிப் பரீட்சை தேர்வு பெற்றுவிட்டு எங்காவது உத்தியோகம் பார்க்கலாமென்ற நிலையிலிருந்தாள் லலிதா. வேலைதான் அவளுக்குக் கிடைக்கவில்லை.

கிழவர் வரைந்த பழைய சித்திரங்களைப் பார்ப்பது, அவருக்கு ஏதாவது புத்தகம்

> கருமத்தாலோ, பூஜையாலோ, மன அடக்கத்தாலோ, தத்துவ ஞானத்தாலோ இவைகளில் ஒன்றாலோ, பலவற்றாலோ, எல்லாவற்றாலுமோ உன் உள்ளே அடங்கியுள்ள தெய்வத்தன்மையை வெளிக்கொணர்ந்து விடுதலை பெறுவாயாக.
>
> — ஸ்வாமி விவேகானந்தர்

படித்துக் காட்டுவது, ஓவியம் வரைதல் பற்றி அவரை ஏதாவது பேச வைத்துக் கேட்பது என்று இப்படி அந்தப் பெண் ஒரு நாளில் பெரும் பகுதியைக் கிழவர் வீட்டில் தான் கழித்தாள். அவர்கள் வீட்டில் சமையல் வேலையெல்லாம் காலை பத்துப் பதினொரு மணிக்கெல்லாம் முடிந்துவிடும். அதுவரையுமாவது தன் தாயாருக்குக் கூடமாட ஏதாவது உதவி செய்து கொண்டு பொழுது கழிந்துவிடும். அதன் பின் மாலை நாலு மணி வரை வீட்டில் வேலை இருக்காது.

லலிதா என்ற அந்தப் பெண்ணிடம் உமாவையே கண்டுவிட்ட கிழவர் பம்பாய்க்கு எழுதிய கடிதத்தில் தாம் இன்னும் ஒரு மாதம் சென்னையிலேயே தங்கப் போவதாகவும், தன்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்றும் எழுதி விட்டார்.

இப்போது ஏனோ அந்தப் பெண்ணைப் பிரிவது இயலாத காரியம் போலத் தோன்றியது அவருக்கு. ஆயினும் எப்படியும் பிரிந்து தானே ஆக வேண்டும்! இன்னும் ஒரு மாதம் இந்தக் குழந்தையுடன் இருந்து விட்டுத்தான் போகலாமே! இப்படி ஒரு நப்பாசை.

கபாலி கோயிலுக்குப் போய்விட்டு வீடு திரும்பும் வழியில் கிழவர் தம் மனத்தின் விசித்திரப் போக்கைப் பற்றிய சிந்தனையில் தமக்குத் தாமே சிரித்துக் கொண்டார்.

'அவர் எழுதிய கடிதம் காமேசனுக்கு அன்று கிடைத்திருக்கும். கடிதத்தைப் படித்து விட்டு அவர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள்? 'அப்பா மனம் நோகும்படி நாம் ஏதாவது தவறுதலாய் நடந்துகொண்டு விட்டோமோ?' என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு காமேசனும், கனகாவும் கவலைப் படப் போகிறார்கள். அவன் ஒருவேளை புறப்பட்டு வந்துவிட்டால் கூட ஆச்சரியமில்லை.'

நினைப்புகள் சுற்றி வளைத்துச் சுழன்று கொண்டிருந்தாலும் நெஞ்சம் என்னவோ இன்னும் கொஞ்ச நாட்கள் சென்னையில் இருக்கத்தான் விரும்பியது.

வீட்டை நெருங்கியபோது காம்பவுண்டுக் கதவு திறந்து கிடப்பதைக் கண்டார் அவர்.

'இந்தச் சங்கரனுக்கு எவ்வளவு சொன்னாலும் மூளை கிடையாது. நான் வெளியே போய்விட்டால் கதவைச் சாத்தி உள்பக்கம் தாழ் போட்டுக்கொள் என்று ஒவ்வொரு தடவை சொன்னாலும் அவன் கேட்டால் தானே?' என்று சமையல்காரனை மனத்துக்குள் வைதுகொண்டே நுழைந்தார்.

மிதியடியைக் கழற்றிவிட்டுக் கூடத்து விளக்கைப் போடப் போனவர் உள்ளிருந்து வந்த பேச்சைக் கேட்டு ஸ்தம்பித்து நின்றார்.

''ஐயா! இப்போதைக்கு இங்கிருந்து போறாப்பலே இல்லே. நீ ஒண்ணும் கவலைப் படாதே. இன்னும் கொறைஞ்சது ஒரு மாசமாவது உனக்கு வேலை ஓடும்.'' — சமையற்காரச் சங்கரனின் குரல் இது.

''அதுதானே கேட்டேன்? உங்க ஐயாவுக்கு வயசுதான் ஆயிடுச்சே தவிர, அந்த எதிர்த்த வீட்டுப் பொண்ணோட சிரிக்கிறதும், களிக்கிறதும்...! அவரு போகமாட்டாருன்னு எனக்குத் தெரியும்!'' — வேலைக்காரியின் பேச்சு இது.

கிழவருக்கு அங்கமெல்லாம் பற்றி எரிந்தது. இந்த மனிதர்கள் எவ்வளவு எளிதாக இப்படி அபிப்பிராயம் கூறி விடுகிறார்கள்! என் உமாவுடன், என் குழந்தையுடன் நான் பழகுவதைக்கூடவா விகல்பமாகப் பேசுவது? தூய்மை அன்புக்குக் கிடைக்கும் பரிசா இது?

'சங்கரா...!' என்று அழைக்க வாயைத் திறந்தவர் எதற்கோ கட்டுப்பட்டவர் போல் அடக்கிக் கொண்டார்.

அவதூறு சொல்லும் அந்த அவலத்தின் கன்னத்தில் நாலு அறை கொடுக்க வேண்டும் போல ஆத்திரம் வந்தது அவருக்கு. ஆயினும் அதன் விளைவாக இந்த அவச் சொற்களுக்கு விளம்பரம் கொடுப்பதாகத்தான் ஆகும் என்று அவருக்குத் தோன்றியது.

கனக்கின்ற நெஞ்சுடன் திரும்பி வாசல் நோக்கி நடந்து காம்பவுண்டுக் கதவை ஓசை எழும்படி அறைந்து சாத்தினார். சத்தம் கேட்டு சங்கரன் எழுந்து வந்தான்.

''வந்துட்டேளா தாத்தா....!''

''உ....ம்...''

அவனைப் பார்க்காமலே உள்ளே போய் மேசையைத் திறந்து ஒரு தந்தி பாரத்தை எடுத்து அதில் எழுதினார்.

''நாளை புறப்படுகிறேன் — ஜகதீசன்.''

''சங்கரா, நீ இதை எடுத்துக்கொண்டு போய்த் தந்தி கொடுத்து விட்டு அப்படியே சென்ட்ரலுக்குப் போய் நாளை ரயிலுக்கு 'ரிசர்வேஷன்' கிடைக்குமானால் ரிசர்வ் பண்ணிட்டுவா. நாளைக்கு நாம் கிளம்பறோம்!''

தந்தி பாரத்தைக் கையில் வாங்கிக் கொண்ட சங்கரனுக்கு ஆச்சரியமாக இருந்தது அவருடைய முடிவு.

தயங்கியவாறே நின்ற அவனை ''உம்.... கிளம்பு!'' என்று துரிதப்படுத்தினார் அவர்.

முந்தானையால் ஈரக் கையைத் துடைத்துக்கொண்டே பரம சாதுவாய் வாசற்புறம் சென்ற வேலைக்காரிக்கும் கிழவர் ஊருக்குப் புறப்பட்டுவிட்ட செய்தி வேதனையாகத்தான் இருந்தது.

சங்கரன் துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு கிளம்பிவிட்டான்.

கேட்டின் கதவை அவன் திறந்து மூடிய போது கதவு சோகமாய்க் கிறீச்சிட்டது.

கிழவர் உமாவின் ஓவியத்தைப் பார்த்தார்.

வீடு வெறிச்சென்றிருந்த அவ்வேளையில் அவர் கண்களிலிருந்து பொல பொலவென்று நீர் உதிர்ந்தது.

படத்தைப் பார்த்தவாறு பச்சைக்குழந்தை போல் வெகு நேரம் தேம்பித் தேம்பி அந்தப் பெரிய வீட்டின் கூடத்தில் தன்னந்தனியாய் அந்தக் கிழவர் அழுது கொண்டிருந்தார்.

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# வனஸ்பதி

## ...இந்தியாவில் உணவின் தூய்மைக்கு ஒரு எடுத்துக்காட்டு!

---

நம் நாட்டில் அன்றாடம் வனஸ்பதியை உபயோகிக்கும் பல லக்ஷக்கணக்கான மக்களுக்கு வனஸ்பதியின் பரிசுத்தத்தில் நம்பிக்கை உண்டு. மக்களின் ஆரோக்கியத்தைப் பாதுகாக்கும் பொருட்டு, அரசாங்கமும் வனஸ்பதி உற்பத்தியாளர்களும், வனஸ்பதி பரிபூர்ண பரிசுத்தமாக இருக்கவேண்டுமென்பதற்காகக் கடும் நிபந்தனைகளை விதித்துள்ளனர். முற்றிலும் இந்த நிபந்தனைகளுக் கேற்பத்தான் வனஸ்பதி தயாரிக்கப்படுகிறது... அது பரிசுத்தமான சிறந்த தாவரக் கொழுப்பாக இருப்பதற்கு உற்பத்தியின் ஒவ்வொரு நிலையிலும் பரிசோதனை நடத்தப் படுகிறது.

மிகச் சிறந்த தாவர எண்ணெய்களை சுத்திகரித்து, 'ஹைட்ரோஜெனேட்' செய்து, அவற்றின் வாசனையை அகற்றி, விட்டமின்கள் சேர்த்துத்தான் வனஸ்பதி தயாரிக்கப்படுகிறது. ஒவ்வொரு கிராம் வனஸ்பதியிலும் 25 இண்டர்நேஷனல் யூனிட்கள் விட்டமின் 'ஏ'யும் 2 இண்டர்நேஷனல் யூனிட்கள் விட்டமின் 'டி' யும் கலந்திருக்கின்றன. இதனால்தான், வனஸ்பதி மிகச் சிறந்த விழுதான கொழுப்புக்குச் சமமாகவும், சாதாரண எண்ணெய்களை விட அதிகமாகவும் போஷாக்கு வாய்ந்ததாயிருக்கிறது. மேலும், அதன் பரிசுத்தமும் போஷாக்குத்தன்மையும் சிறிதும் பாதிக்கப்படாமல் இருக்கும் பொருட்டு சுகாதார முறையில் டின்களில் நிரப்பி ஸீல் செய்யப்படுகிறது. இந்த விதத்தில் ஒரு சிறந்த சமையல் சாதனத்துக்கு இருக்கவேண்டிய பரிசுத்தம், தரம், போஷாக்குத்தன்மை, சிக்கன விலை, உபயோகிக்க சௌகரியம், ருசி, முதலிய குணங்களை யெல்லாம் வனஸ்பதி ஒருங்கே பெற்றிருக்கிறது!

ஆகவே தான், நம் நாட்டின் பல்லாயிரக் கணக்கான குடும்பங்களில் வனஸ்பதி விரும்பி வரவேற்கப்படும் சமையல் கொழுப்பாகத் திகழ்கிறது! வனஸ்பதியின் உபயோகம், கடந்த 30 ஆண்டுகளில் 30,000 டன்களிலிருந்து 3,38,000 டன்களாக உயர்ந்திருப்பதிலிருந்தே இது விளங்குகிறதல்லவா?

விவசாயம், விஞ்ஞானம், தொழில் இவற்றின் வசதிகள் ஒருங்கு சேர்ந்ததன் நல் விளைவாகத் தயாரிக்கப்படுவது தான் வனஸ்பதி... நம் நாட்டின் அன்றாட சமையலுக்கு ஏற்ற கொழுப்பு வனஸ்பதி... உங்களுக்கும் உங்கள் குடும்பத்துக்கும் உகந்தது என்று சொல்லவும் வேண்டுமா!

**வனஸ்பதி மற்றும் வனஸ்பதி போன்ற கொழுப்புச் சத்துக்கள் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகின்றன!**

அதிக விவரங்களுக்கு கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதுங்கள்:

**தி வனஸ்பதி மான்யுபாக்சரர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா**

இந்தியா ஹவுஸ், ஃபோர்ட் ஸ்ட்ரீட், பம்பாய்-1

---

JWT-VMA-4282

REGISTERED No. M. 4392
Registered as Newspaper in Ceylon